வை. இரத்தினசபாபதி



# சுந்தரர்

## ஓர் ஆய்வு

முதற் பகுதி

# சுந்தரர்

## ஓர் ஆய்வு

முதற் பகுதி

டாக்டர் வை. இரத்தினசபாபதி
வித்துவான், பி. ஓ. எல்., எம். ஏ., பிஎச். டி.
ரீடர்
இராதாகிருஷ்ணன்
மெய்யுணர்வு மேல்நிலைக் கல்வி நிறுவனம்
சென்னைப் பல்கலைக் கழகம்



இராதாகிருஷ்ணன்
மெய்யுணர்வு மேல்நிலைக் கல்வி நிறுவனம்
சென்னைப் பல்கலைக் கழகம்

1986

# பதிப்புரை

சென்னைப் பல்கலைக் கழகத்தின் மெய்யுணர்வு ஆராய்ச்சித் துறை 1927 செப்டம்பர் மாதத்தில் நிறுவப் பெற்றது. 1964 ஆகஸ்டு மாதத்தில் இத்துறையைப் பல்கலைக் கழக மானியக் குழுவானது மேல் நிலைக் கல்வி மையமாக ஆக்கியது. 1976 முதல் இதன் பெயர் டாக்டர் எஸ். இராதாகிருஷ்ணன் மெய்யுணர்வு மேல்நிலைக் கல்வி நிறுவனம் என்பதாயிற்று. 1977 செப்டம்பரில் இத்துறையானது தன்னுடைய பொன் விழாவைக் கொண்டாடியது.

இந்நிறுவனத்தின் செயல் திட்ட அறிக்கையானது மூன்று கொள்கைகளை வரையறை செய்து வழிகாட்டுகிறது. 1. தமிழகம் தழுவிய 2. இந்தியநாடு தழுவிய 3. உலகந் தழுவிய தத்துவக் கொள்கைகளைத் தனித்தும் இணைத்தும் ஆய்வதுடன், மக்கள் வாழ்வுச் சிக்கல்களுக்குரிய விளக்கமும், அவைகளைத் தீர்ப்பதற்குரிய செயற்பாட்டு வடிவமும் கொடுத்து, அவர்களின் நல்வாழ்விற்கு ஆக்கவழியிலான அமைப்பையும் உருவாக்கித் தருதல் வேண்டும் என்பதே. இவ்வகையில், தமிழகத்தில் வரலாற்று மாந்தர்களாகவும் அதே சமயத்தில் சைவ சமய அருட்பெருங்குரவர்களாகவும் வாழ்ந்து மக்களை நல்வழிப்படுத்திய நால்வர் பெருமக்களின் சமுதாயத் தொண்டும், சைவப் பணியும், இந்நாளில் மக்கள் அவர்களை எவ்வாறு பின்பற்றுதல் வேண்டும் என்ற அமைப்பும் இணையச் சிந்தித்த சிந்தனையின் வடிவமாக நால்வர் பெருமக்களையும் பற்றிய நூல்களை வெளியிட வேண்டும் என்பது எம் நிலையத்தின் செயல் முறைத் திட்டப்பணி. அப்பணி வரிசையில் **திருஞானசம்பந்தர் ஓர் ஆய்வு** இரண்டு பாகங்கள் முறையே 1981, 1982-ல் வெளிவந்தன. பின்னர் **திருநாவுக்கரசர் ஓர் ஆய்வு** இரண்டு பாகங்கள் முறையே 1984, 1985-ல் வெளிவந்தன. இப்போது **சுந்தரர்-ஓர் ஆய்வு** முதற் பகுதி இவ்வாண்டில் வெளிவருகிறது. இதனை எழுதியவர் இந்நிறுவனத்தின் துணைப்பேராசிரியர் டாக்டர் வை. இரத்தினசபாபதி ஆவர். இவருடைய **வீரசைவம்** என்ற நூல் இந்நிறுவனத்தின் பொன் விழா வெளியீடாக 1977-இல் வெளிவந்தது. அடுத்து, பன்னிரு திருமுறைகளையும் சிவஞான போதப் பன்னிரண்டு நூற்பாக்களையும் இணைத்துச் சிந்தித்து எழுதப் பெற்ற முதல் ஆய்வு நூலாகத் **திருமுறைத் தெளிவே சிவஞான போதம்** என்ற நூல் 1979-இல் வெளிவந்தது.

மெய்யுணர்வுத்துறை தொடங்கப் பெற்றபோது அதனை விரிவாகவும் உயர்வாகவும் அமைத்த பேராசிரியர் காலஞ்சென்ற

S. S. சூரியநாராயண சாஸ்திரி அவர்களுக்கும், திட்டமிட்ட கொள்கைகளைச் செயற்படுத்தி நின்ற பெருந்தகைகளாகிய, இந் நிறுவனத்தின் முன்னாள் இயக்குநர்கள் டாக்டர் T.M.P. மகாதேவன், டாக்டர் வ. ஆ. தேவசேனாபதி ஆகியோர்களுக்கும் நிறுவனம் பெரிதும் கடமைப்பட்டுள்ளது.

இந்நிறுவனத்தின் ஆக்கவழிச் செயல்களை அவ்வப்போது உட னிருந்து அமைதியுடன் கேட்டும்,அரவணைத்தும், ஆக்கவழிக் கருத் துக்களை வழங்கியும் நெறிப்படுத்தி வருகிற சென்னைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர், மூதறிஞர், பேராசிரியர் பொ. பெ. சுந்தரேச னார் அவர்களுக்கும், தனிப்பரிவுடன் எங்கள் திட்டங்களுக்குச் செயல்வழி ஆக்கம் புரிந்து வரும் பதிவாளர் அவர்களுக்கும், பல்கலைக் கழக ஆட்சிக்குழு/அலுவலக உறுப்பினர்களுக்கும் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நிறுவனத்தை மேல் நிலைக் கல்வி நிறுவனமாக உயர்த்திப் பத்து ஆண்டுகள் வரை பொருள் உதவி செய்ததோடு அமையாது, பின்னரும் இந்நிறுவனத்தின் முன்னேற்றத்தில் பரிவுகாட்டி, அரவணைத்து வரும் பல்கலைக் கழக மானியக் குழுவிற்கு நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

தமிழக அரசின் மொழிக் கொள்கையும் சென்னைப் பல்கலைக் கழகத்தின் உயர் அடிப்படைக் கொள்கைகளில் ஒன்றும் ஆகிய தமிழ்மொழி வளர்ச்சியை மனத்துட் கொண்டு இவ்வரிசை ஆய்வு நூல் தமிழிலேயே எழுதப் பெற்று வெளியிடப் பெறுகிறது.

இந்நூலை அழகுற அச்சிட்டுத் தந்த சென்னை, அவ்வை அச்சுக்கூடத்தாருக்கு என் நன்றி.

**இரா. பாலசுப்பிரமணியன்**
இயக்குநர்
பொதுப் பதிப்பாசிரியர்

சென்னை — 5
*15—3—1986*

# ஆக்கியோன் முன்னுரை

திருநெறியத் தமிழ் என்னும் திருப்பதிகத் தமிழ் நெறியைத் தோற்றுவித்து, வளர்த்து நிலைநாட்டியவர் திருஞானசம்பந்தர். அவ்வாறே திருநின்ற செம்மை என்ற பெயரில் திருத்தொண்டு நெறியைக் கொள்கையாகவும் செயல் முறைப் பட்டிகையாகவும் அமைத்ததோடன்றி, செயற்பாட்டு நிலையில் அமைத்த வரலாற்று வாழ்வியல் நிகழ்வுகளைக் கொண்டவர் திருநாவுக்கரசர். சமுதாயத்தில் நிகழும் சமயமாற்றம் என்பதன் பல்வேறு சூழல்களையும் காரணங்களையும் ஆய்ந்து விளக்கங் காட்டியும், தீர்திறன் என்ன என்றருளியும் சைவ சமயத்துக்குப் பல வகையான அரண்களை அமைத்துக் காத்தவர் திருநாவுக்கரசர். திருநாவுக்கரசரைச் செயற்படுத்திய திலகவதியார் திருத்தொண்டு நெறியினுக்குக் கட்டளைக் கல்லாக அமைந்தவர்கள்.

நம்பியாரூரர் எனப் பெறும் சுந்தரர், வரலாற்றாலும் தாம் வாழ்ந்த வாய்மையாலும் வாக்கு என நின்ற திருமுறைப் பதிகங்களுடன் திருவளரும் சைவ நெறிக்கென அமைத்துத் தந்த **திருத்தொண்டத் தொகைப்** பதிகத்தாலும், சைவப் பெரு நெறியின் முதல் தொண்டர் எனச் சேக்கிழாரால் போற்றப் பெற்றவர். அவர்தம் ஆய்வின் முதற்பகுதி இவ்வாண்டில் வெளிவருகிறது.

சேக்கிழார் எழுதிய பிறகு சைவ சமய நாயன்மார்களின் வரலாற்றுண்மைகளை வேறு யாரும் எழுத வேண்டிய அவசியம் இல்லை. சேக்கிழாருக்குப் பிறகும் பலர் இத்துறையில் ஈடுபட்டுச் சைவசமய நாயன்மார்களின் வரலாறுகளை,கொள்கைகளை எழுதியுள்ளார்கள். அவர்கள் பணிகளுக்குப் பிறகும் இந்நிறுவனத்தின் சார்பில் எழுத வேண்டிய கட்டாயத் தேவை அமைந்துள்ளது. எழுத வேண்டிய கட்டாயத்தை உணரவில்லையானால் இந்நூல் தந்து நிறுத்தும் செய்திகள் தேவைதானா என்ற ஐயம் வரும். திருவருள் அத்தகையோருக்குத் துணை செய்யவில்லை என்பதைத் தவிர வேறு காரணம் இல்லை. காலம் பின்னின்று எழுப்பிய வினாக்களுக்கு விடையளிக்கும் கடப்பாட்டில் இச்செயல் அமைகிறது.

சைவசமய நாயன்மார்களின் வரலாற்றுப் பின்னணி, வாழ்வியல் நிகழ்வுகளின் விளக்கக் கொள்கைகள் என்பவைகளே உள்ளீடுகளாக அமைந்தன. மூவருடைய வரலாற்று நுட்பங்கள் வெளிவந்த பின் மூவரும் ஆற்றிய சமுதாயப் பணிகள், மூவரும் உலக, தத்துவ

சமய அற மையங்களுக்குத் தமிழகத்தின் சார்பிலும் சைவத்தின் சார்பிலும் நின்று வழங்கிய அருட்கொடைகள் யாவை என்பதை விளக்கும் நூல் வெளியிடப் பெறும். இவ்வாறே நால்வர்களைப் பற்றியும் எழுதி வெளியிடுவது என்பது நிறுவனத்தின் திட்டப்பணி.

திருஞானசம்பந்தரின் திருநெறியத் தமிழை ஏற்று வெளிப்படுத்தும் பதிகக்களமாகிய தென்திருக்குடித் திட்டையில் தம்மைக் குடியுரிமை செய்து கொண்ட பிறப்புரிமையும் 18—2—1981ல் கோவை, பேரூர், சாந்தலிங்கர் திருமடத்தின் சத்வித்யா சன்மார்க்க சங்கத்தின் சார்பில் அளிக்கப் பெற்ற **தத்துவ வித்தகர்** என்ற சிறப்புப் பெயரின் அடிப்படையில், பிறவி தோறும் மரபு நிலை திரியா மாட்சியவாய் அமைந்த தத்துவஞான மரபுரிமையும் கொண்டு விளங்கும் எம் நிறுவன இயக்குநர் டாக்டர் இரா. பாலசுப்பிரமணியனார் அவர்கள், தமிழுலகில் திளைத்துக் கிடந்த என்னைத் தத்துவ உலகில் நெறிப்படுத்தி நிலைநிறுத்திய வகையில் நிறுவனத்துக்கேயன்றி எனக்கும் நெறியாளர். யான் பெருமை கொள்ளும் அளவுக்கு என்னுடைய தத்துவப் பேராசிரியராக விளங்கும் அவர்களின் இணையடிகளை வணங்குகிறேன்.

என் நெஞ்சுவக்கும் பணியில் யான் நிலைபெற்று நின்று பணியாற்றுவதற்கு ஏற்றவகையில் திட்டமமைத்து நெறிப்படுத்திய, இந் நிறுவனத்து முன்னாள் இயக்குநர்களுக்கும், சென்னைப் பல்கலைக் கழகத்துத் துணைவேந்தர், பதிவாளர், ஆட்சிக்குழு உறுப்பினர்களுக்கும் என் வணக்கமும் நன்றியும் உரியன.

திருமுறைப் பணிகளில் எனக்குமுன் ஈடுபட்ட சான்றோர்கள் அனைவருடைய திருவடிகளையும் வணங்கிப் போற்றுகின்றேன். என்ஞானாசிரியராகிய ஞானியாரடிகளையும், அருள் ஞானத் தீட்சா குருவாகிய மயிலம், சிவஞான பாலய சுவாமிகளையும் போற்றி, அவர்தம் திருவடிகளே கண்ணாகக் கண்டு நிற்கும் நன்றியுணர்வினன். என்னுடனாய் நின்று இயக்கும் பேராசிரியர் 'ஆசி' அவர்களை வணங்குகிறேன்.

தட்டெழுத்துச் செய்யாத நிலையில், என் கையெழுத்தையே தம் தலையெழுத்தெனக் கொண்டு, அதனால் விளையும் தொல்லைகளைத் தாங்கி, பல்லாற்றானும் இது ஒருசிறந்த திருமுறைப் பதிப்பாக வெளிவர வேண்டும் என்ற உணர்வுடன் அல்லும் பகலும் அயராது உழைத்த அவ்வை அச்சுக்கூட உரிமையாளர் திரு. சேஷாசலம் அவர்களுக்கும், அச்சகப் பணியாளர்களுக்கும் என்றென்றும் நன்றியறிதற் கடப்பாடுடையேன்.

சென்னை
15—3—86

இங்ஙனம்
**வை. இரத்தினசபாபதி**

# உள்ளுறை

## சுந்தரர்-ஓர் ஆய்வு

## இந்நூலாய்வுக்குரிய மூலங்கள்

1. **சுந்தரர் தேவாரம்** — ஏழாந்திருமுறை — பதிகம் நூறு; பாடல்கள் 1026. 1964ல் தருமையாதீனத்தில் வெளியிடப்பெற்ற ஏழாந் திருமுறை — முதுபெரும்புலவர் சி. அருணைவடிவேல் முதலியார் உரையும் அப்பதிப்பில் அடங்கிய ஆய்வுக்கட்டுரைகள் ஐந்தும்.

2. **பெரிய புராண** ஆய்வுரை. முதல் தொகுதி. சுந்தரர். மறை திருநாவுக்கரசு 1976

3. **சுந்தரமூர்த்தி சுவாமிகள் சரித்திரம்.** கா. சுப்பிரமணியபிள்ளை எம். ஏ., எம். எல். சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் 1961.

4. **பன்னிரு திருமுறை வரலாறு.** முதல் பாகம். க. வெள்ளை வாரணனார் அவர்கள்.

5. **பெரிய புராணம்.** குறிப்புரை. திரு. வி. க. அவர்கள்.

6. **பெரிய புராணம்.** விளக்கவுரை சிவக்கவிமணி அவர்கள்.

7. நம்பியாண்டார் நம்பி அருளிய **திருத்தொண்டர் திருவந்தாதி** யிற் சுந்தரர் பற்றிய பாடல்.

8. உமாபதி சிவாசாரியார் அருளிய **திருத்தொண்டர் புராண சாரத்** தில் சுந்தரர் பற்றிய பாடல்கள்.

9. சிவப்பிரகாச சுவாமிகள், **நால்வர் நான்மணி மாலை**யிற் சுந்தரர் பற்றியன.

10. வள்ளலார் அருளிய **ஆளுடையநம்பிகள் அருள்மாலை.**

11. **சிவஞானபோதம்.** கோ. வடிவேல் செட்டியார் உரை. 1927.

12. மொ. அ. துரை அரங்கனார் — **சுந்தரர்தேவார ஆய்வு** (ஆங்கிலம்) சென்னைப் பல்கலைக்கழகப்பதிப்பு. 2 பாகங்கள்.

## நம்பியாண்டார் நம்பி

அருளிய

## திருத்தொண்டர் திருவந்தாதியில்

### சுந்தரரைப் பற்றியன

தொழுதும் வணங்கியும் மாலயன்
தேடரும் சோதிசென்றாங்கு
எழுதும் தமிழ்ப் பழ ஆவணம்
காட்டி எனக்கு உன்குடி
முழுதும் அடிமைவந்து ஆட்செய்
எனப்பெற்ற வன்முரல் தேன்
ஒழுகும் மலரின் நற்றார் எம்
பிரான் நம்பி ஆரூரனே.

அருட்டுறை அத்தர்க்கு அடிமைப் பட்
டேன் இனி அல்லன் என்னும்
பொருட்டுறை ஆவதென்னே என்ன
வல்லவன் பூங்குவளை
இருட்டுறை நீர்வயல் நாவற்
பதிக்குப் பிரான் அடைந்தோர்
மருட்டுறை நீக்கி நல்வான்வழி
காட்டிட வல்லவனே

நிதியார் துருத்திதென் வேள்விக்
குடியாய் நினைமறந்த
மதியேற்கு அறிகுறி வைத்துப்
புகர்பின்னை மாற்றிடென்று
துதியா அருள் சொன்னவாறு அறி
வாரிடைப் பெற்றவன் காண்
நதியார் புனல்வயல் நாவலர்
கோனென்னு நற்றவனே.

நந்திக்கு நம்பெரு மாற்குநல்
லாரூரில் நாயகற்குப்
பந்திப் பரியன செந்தமிழ்
பாடிப் படர்புனலின்
சிந்திப் பரியன சேவடி
பெற்றவன் சேவடியே
வந்திப் பவன்பெயர் வன்தொண்டன்
என்பரிவ் வையகத்தே.

துணையும் அளவும்இல் லாதவன்
    தன்னரு ளேதுணையாக்
கணையும் கதிர்நெடு வேலுங்
    கறுத்த கயலிணையும்
பிணையும் நிகர்த்தகண் சங்கிலி
    பேர் அமைத் தோள் இரண்டும்
அணையு மவன்திரு ஆரூர
    னாகின்ற அற்புதனே

கூற்றுக் கெவனோ புகல்திரு
    வாரூரன் பொன்முடிமேல்
ஏற்றுத் தொடையலும் இன்னடைக்
    காயும் இடுதருமக்
கோல்தொத்து கூனனும் கூன்போய்க்
    குருடனும் கண்பெற்றமை
சாற்றித் திரியும் பழமொழி
    யாமித் தரணியிலே.

பல்லவை செங்கதி ரோனைப்
    பறித்தவன் பாதம் புகழ்
சொல்லவன் தென்புக லூர்அரன்
    பால்துய்ய செம்பொன் கொள்ள
வல்லவன் நாட்டியத் தான்குடி
    மாணிக்க வண்ணனுக்கு
நல்லவன் தன்பதி நாவலூர்
    ஆகின்ற நன்னகரே

கொடுத்தான் முதலைகொள் பிள்ளைக்கு
    உயிரன்று புக்கொளியூர்த்
தொடுத்தான் மதுர கவிஅவி
    நாசியை வேடர் சுற்றம்
படுத்தான் திருமுரு கன்பூண்
    டியினிற் பராபரத்தேன்
மடுத்தான் அவனென்பர் வன்தொண்ட
    னாகின்ற மாதவனே

தருமகட் பேசினோன் வீயவே
    நூல்போன சங்கிலிபால்
புகுமணக் காதலி னால்ஒற்றி
    யூருறை புண்ணியன்தன்
மிகுமலர்ப் பாதம் பணிந்தரு
    ளாலிவ் வியனுலகம்
நகும்வழக் கேநன்மை யாப்புணர்ந்
    தான் நாவ லூரரசே.

செழுநீர் வயல்முது குன்றினில்
செந்தமிழ் பாடிவெய்ய
மழுநீள் தடக்கையன் ஈந்தபொன்
ஆங்குக்கொள் ளாதுவந்து
பொழில்நீள் தருதிரு வாரூரில்
வாசியும் பொன்னுங் கொண்டோன்
கெழுநீள் புகழ்த்திரு வாரூரன்
என்றுநாம் கேட்பதுவே.

ஞானஆ ரூரரைச் சேரரை
அல்லது நாமறியோம்
மானவ ஆக்கை யொடும்புக்
கவரை வளரொளிப்பூண்
வானவ ராலும் மருவற்
கரிய வடகயிலைக்
கோனவன் கோயில் பெருந்தவத்
தோர் தங்கள் கூட்டத்திலே

**சடையனார்**

தலம் விளங் கும்திரு நாவலூர் தன்னில் சடையனென்னும்
குலம் விளங் கும்புக ழோனை உரைப்பர் குவலயத்தில்
நலம் விளங் கும்படி நாம்விளங் கும்படி நற்றவத்தின்
பலம் விளங் கும்படி ஆரூ ரனைமுன் பயந்தமையே

**இசைஞானியார்**

பயந்தாள் கறுவுடைச் செங்கண்வெள் ளைப்பொள்ளல்
நீள்பனைக்கைக்
கயந்தான் உகைத்தநற் காளையை என்றும் கபாலங்கைக் கொண்டு
அயந்தான் புகும்அரன் ஆரூர்ப் புனித அரன்திருத்தாள்
நயந்தாள் தனதுஉள்ளத்து என்றும் உரைப்பது ஞானியையே.

## உமாபதி சிவாசாரியார்

அருளிய

## திருத்தொண்டர் புராண சாரத்தில்

### சுந்தரரைப் பற்றியன

தண்கயிலை யதுநீங்கி நாவ லூர்வாழ்
சைவனார் சடையனார் தனய னாராய்
மண்புகழ அருட்டுறையான் ஓலை காட்டி
மணம்விலக்க வன்தொண்டாய் அதிகை சேர்ந்து
நண்பினுடன் அருள்புரிய ஆரூர் மேவி
நலங்கிளரும் பரவைதோள் நயந்து வைகித்
திண்குலவும் விறன்மிண்டர் திறங்கண் டேத்தும்
திருத்தொண்டத் தொகை அருளாற் செப்பீ னாரே.

செப்பலருங் குண்டையூர் நெல்ல ழைத்துத்
திருப்புகலூர்ச் செங்கல்செழும் பொன்னாச் செய்து
தப்பில்முது குன்றர்தரும் பொருள்ஆற் றிட்டுத்
தட.த்தெடுத்துச் சங்கிலிதோள் சார்ந்து நாதன்
ஒப்பில்தனித் தூதுவந்தா றூடு கீறி
உறுமுதலை சிறுமதலை உமிழ நல்கி
மெய்ப்பெரிய களிறேறி அருளாற் சேர
வேந்தருடன் வடகயிலை மேவி னாரே

### சடையனார்

சங்கையிலா அரன்மறையோர் நாவ லூர்வாழ்
தவரதிபர் தம்பிரான் தோழ ராய
எங்கள்பிரான் தவநெறிக்கோர் இலக்கு வாய்த்த
இசைஞானி யார்தனயர் எண்ணார் சிங்க
மங்கையர்கள் தொழும்பரவை மணவாள நம்பி
வந்துதித்த மாதவங்கள் வருந்திச் செய்தார்
வெங்கண் அரா விளங்கும்இளம் பிறைசேர் சென்னி
விடையினார் அருள்சேர்ந்த சடையி னாரே.

### இசைஞானியார்

நாவல் திருப்பதிக்கோர் செல்வச் சைவ
நாயகமாம் சடையனார் நயந்த இன்பப்
பூவைக் குலமடந்தை பொற்பார் கொம்பு
புனிதமிகு நீறணிந்து போற்றி செய்தே
ஆவில் திகழ்தலைவன் வலிய ஆண்ட
ஆருரர் அவதரிக்க அருந்தவங்கள் புரிந்தார்
யாவர்க்கும் எட்டாத இசைந்த இன்ப
இசைஞானி எனஞானம் எளிதாம் அன்றே

## சிவப்பிரகாசர்

அருளிய

## நால்வர் நான்மணி மாலையிற்

சுந்தரரைப் பற்றியன

படியிலா நின்பாட்டில் ஆரூர
நனிவிருப்பன் பரமன் என்பது
அடியனேன் அறிந்தனன் வான்தொழும்
ஈசனினைத் தடுத்தாட் கொண்டுமன்றித்
தொடியுலா மென்கைமட மாதர்பால்
நினக்காகத் தூது சென்றும்
மிடியிலா மனைகடொறும் இரந்திட்டும்
உழன்றமையால் விளங்குமாறே.

அறிந்து செல்வம் உடையானாம்
அளகைப் பதியான் தோழமை கொண்டு
உறழ்ந்த கல்வி உடையானும்
ஒருவன் வேண்டும் எனஇருந்து
துறந்த முனிவர் தொழும் பரவை
துணைவா நினைத்தோ ழமைகொண்டான்
செறிந்த அறிவு வடிவமாய்த்
திகழும் நுதற்கட் பெருமானே.

வாங்குசிலை புரையும் உடல் எனும்குளத்தில் மூல
மலமெனும் ஓர் வெங்கரவின் பகுவாயில் நின்றும்
தீங்கில்உயி ரெனும் பனவக்குலமகனை ஆதி
திரோதாயி எனும்ஒரு வெந்திறற்கூற் றுவனால்
ஓங்குறுநா தாந்தம்எனப் பெயரியஅக் கரையில்
உமிழ்வித்துச் சிவமெனுமோர் தந்தையொடுங்கூட்டாய்
கோங்கமுகை கவற்றுமிள முலைப்பரவை மகிழக்
குண்டையூர் நென்மலைமுற் கொண்டஅருட் கடலே.

நோக்குறு நுதலோன் நின்னிடை விருப்பால்
நூற்பகவு அன்னநுண் மருங்குல்
வார்க்குவி முலைமென் மகளிர்தம் புலவி
மாற்றுவான் சென்றனன் என்றால்
கோக்கலிக் காமன் வயிற்றிடைக் குத்திக்
கொண்டதேதுக்கு நீ புகலாய்
காக்கரு மதலை விழுங்கிய முதலை
கான்றிடத் தோன்று நாவலனே

உனற்கு அரும்புகழ் மேவிய சுந்தரன் உம்பல் மீதுஇவரா
நினைப்பருங் கயிலாயம் அடைந்தமை நின்று காண்குறவே
எனக்கு வந்துறுமோ மகவுஎன்று அழுகின்ற நாள் அலைபால்
தனித்த ருந்துபு மாலை உமிழ்ந்திடு தம்பிரான் நலனே.

அரசன் பரிமேல் வரநெடுநல்
யானை எருத்தத்து அமர்ந்துபோய்
வரதன் கயிலை மலைஅடைந்த
மணியே! மணிநீர் இடுபசும்பொன்
திரைசங்கு எறியும் குளத்துவரச்
செங்கல் செம்பொ னாப்பாடும்
பரிசின்று எனக்கு உன்செம்பவளத்
திருவாய் மலர்ந்து பகர்வாயே.

போதமுண்ட பிள்ளையென்பு பொருகண் மாது செய்ததோ
காதல்கொண்டு சொல்லின்மன்னர் கல்மிதப்ப உய்த்ததோ
வாய்திறந்து முதலைகக்க மகனைநீ ரழைத்ததோ
யாதுநம்பி அரிதுநன்று எனக்கியம்ப வேண்டுமே.

பாவாய்ப் பொழிந்த வானமுதப்
பவளத் திருவாய் நம்பிநீ
சேவாய்ப் பொருதும் தருமமுடைத்
தேவன் மலைக்குப் போம்பொழுது
காவாய்ப் பயந்த தடக்கை மலர்க்
கழறிற் றறிவார் கடாவிவரும்
மாவாய்ப் பிறக்கக் கிடையாதே
மாவாய்ப் பிறக்குந் திருமாற்கே.

செல்வநல் ஒற்றி யூரன்
செய்யசங் கிலியால் ஆர்த்து
மல்லலம் பரவை தன்னுள்
மாழ்குற அமிழ்த்து மேனும்
அல்லுநன் பகலும் நீங்காது
அவன் மகிழ்அடியில் எய்தி
நல்ல இன்பு அடைந் திருப்பன்
நம்பி ஆரூரன் தானே.

பெருமிழலைக் குறும்பரெனும் பரமயோகி
பெரிதுவந்துன் திருவடித்தா மரையைப் போற்றி
விரைமலர்தூய் வந்தனைசெய் கின்றானென்றால்
விளங்கிழையார் இருவரொடும் முயங்கலாமோ
உரைமதிநின் றனைவெறுப்ப தென்கொனினை
உடையானுக் கடுத்தசெயல் உனக்குமாயின்
சுரர்முனிவர் பரவலுறும் பெருஞ் சீர்த்தொண்டத்
தொகைசெய்தோய் அறமுதல்நால் வகைசெய்தோயே

## வள்ளலார்

அருளிய

# ஆளுடைய நம்பிகள் அருள்மாலை

மதியணிசெஞ் சடைக்கனியை மன்றுள் நடம்புரி மருந்தைத்
துதியணிசெஞ் சுவைப் பொருளில் சொல்மாலை தொடுத்தருளி
விதியணி மாமறை நெறியும் மெய்ந்நிலை ஆகம நெறியும்
வதியணிந்து விளங்க வைத்த **வன்தொண்டப் பெருந்தகையே**

நீற்றிலிட்ட நிலையாப் புன் னெறியுடையார் தமைக்கூடிச்
சேற்றிலிட்ட கம்பமெனத் தியங்குற்றேன் தனை ஆளாய்
ஏற்றிலிட்ட திருவடியை எண்ணி அரும் பொன்னை எல்லாம்
ஆற்றிலிட்டுக் குளத்தெடுத்த **அருட்டலைமைப்பெருந்தகையே.**

இலக்குளநீர் அழைத்து அதனில் இடங்கர் உற அழைத்து
அதன்வாய்த்
தலைக்குதலை மதலை உயிர் தழைப்ப அழைத்தருளிய நின்
கலைக்கும் வடகலையின் முதற்கலைக்கும் உறுகணக்குஉயர்பொன்
மலைக்கும் அணுநிலைக்கும் உறா **வன்தொண்டப் பெருந்தகையே.**

வேதமுதற் கலைகளெலாம் விரைந்து விரைந்து அனந்தமுறை
ஓத அவைக்கு அணுத்துணையும் உணர்வரிதாம் எம்பெருமான்
பாதமலர் நினது திருப் பணி முடிமேற் படப்புரிந்த
மாதவம் யாது உரைத்தருளாய் **வன்தொண்டப் பெருந்தகையே.**

ஏழிசையாய் இசைப்பயனாய் இன்னமுதாய் என்னுடைய
தோழனுமாய் என்றுமுன் நீ சொன்ன பெருஞ் சொற்பொருளை
ஆழநினைந் திடில் அடியேன் அருங்கரணம் கரைந்துகரைந்து
ஊழியல் இன்புறுவதுகாண் **உயர்கருணைப் பெருந்தகையே.**

வான்காண இந்திரனும் மாலயனும் மாதவரும்
தான் காண இறைஅருளால் தனித்தவள யானையின்மேல்
கோன் காண எழுந்தருளிக் குலவியநின் கோலமதை
நான் காணப் பெற்றிலனே **நாவலூர்ப்பெருந்தகையே.**

தேன்வடிக்கும் அமுதாம் உன் திருப்பாட்டைத் தினந்தோறும்
நான்படிக்கும் போது என்னை நானறியேன் நா ஒன்றோ
ஊன்படிக்கும் உளம்படிக்கும் உயிர்படிக்கும் உயிர்க்குயிரும்
தான் படிக்கும் அனுபவங்காண் **தனிக்கருணைப் பெருந்தகையே.**

இன்பு ஆட்டுத் தொழிற் பொதுவில் இயற்றுகின்ற எம்பெருமான்
உன்பாட்டுக்கு உவப்புறல் போல் ஊர்பாட்டுக் குவந்திலர்என்று
என்பாட்டுக்கு இசைப்பினும் என் இடும் பாட்டுக் கரணமெலாம்
அன்பு ஆட்டுக்கு இசைவதுகாண் **அருட்பாட்டுப் பெருந்தகையே**

பரம்பரமாம் துரியமெனும் பதத்திருந்த பரம் பொருளை
உரம்பெறத் தோழமைகொண்ட உன்பெருமை தனை மதித்து
வரம்பெற நல் தெய்வமெலாம் வந்திக்கும் என்றால் என்
தரம்பெற என் புகல்வேன் நான் தனித்தலைமைப் பெருந்தகையே

பேரூரும் பரவைமனப் பிணக்கறஎம் பெருமானை
ஊரூரும் பலபுகல ஓரிரவில் தூதன் எனத்
தேரூரும் திருவாரூர்த் தெருவுதொறும் நடப்பித்தாய்
ஆரூர நின்பெருமை அயன்மாலும் அளப்பரிதே.

# 1. தோற்றுவாய்

திருநெறியத் தமிழ்நெறி எனவும் ஞானவாரமுத மூட்டும் பெருநெறி எனவும் ஆறதேறுஞ் சடையான் அருள் மேவ வீறது ஏறும் தமிழால் நிலைநாட்டிய குரு நெறி எனவும் திருப்பதிகத் தமிழ்ப் பெரு நெறி எனவும் தமிழகத்து அருளாளர்களாற் பாராட்டப் பெற்ற தேவாரப் பெரு நெறியில் தாவில் சரா சரங்களெல்லாம் சிவம் பெருக் கும் பிள்ளையார் எனப் பெறும் திருஞானசம்பந்தர் முதல் நின்றவராகிறார். அடுத்துநின்ற தாண்டகவேந்தர் திரு நின்ற செம்மையே செம்மையாகக் கொண்டு, திருவுழவாரப் படை ஏந்தி, வளர் திருத்தொண்டின் நெறிவாழ வரு ஞானத் தவ முனிவராய் வாய்மை குன்றா வாகீசர் எனப் புகழப் பெற்றவர்.

சமகாலத்துப் பெருந்தகைகளாகிய இவ்விருவரை யும் ஒட்டி, இரண்டு நூற்றாண்டுகளுக்குப் பின்னர், இந் நெறியில் நின்ற அருளாளர் திருநாவலூரர் எனப் பெறும் நம்பியாரூரர். 'தேவார மூவர்' என்ற தொடரின் மூன்றாவ தாக நின்ற அருளாளர்.

திருமுறைகள் பன்னிரண்டனுள் முதல் மூன்று திரு முறைகள் திருஞானசம்பந்தருடையன. நான்கு, ஐந்து, ஆறு என நின்ற மூன்று திருமுறைகளும் வாசீசப் பெருந் தகையின் வாய்மொழிகள். ஏழாவதாக நின்ற ஒரு திரு முறை நம்பியாரூரருடையது. சென்றன போக நின்றன வாக நமக்குக் கிடைத்த பதிகங்களுள் இவருடைய பதிகங் கள் நூறு; திருப்பாடல்களின் தொகை ஓராயிரத்து இருபத் தாறு (1026) ஆகும்.

பிரமாபுரப் பெருநெறி என்றும் திருப்பதிகத் திருநெறி என்றும் வீறதேறும் தமிழ்க் குருநெறி என்றும் போற்றப் பெறும் தேவாரச் செந்நெறியை நம்பியாரூரரும் போற்றி

வளர்த்தார் என்ற அளவில் மட்டும் அவர்தம் திருத் தொண்டை முடித்து விடுதல் இயலாத ஒன்று.

நம்பியாரூரரின் வரலாற்றில் எந்த ஒரு சிறுபகுதியும் பன்னோக்கு அடிப்படையில் ஆராயப் பெற வேண்டும். தமிழகச் சைவப் பெருநெறியின் பல்வேறு புதுமைக் கொள்கைகளைத் தோற்றியும் வளர்த்தும் நிலைநிறுத்திய பீடுமிக்க வரலாறு நம்பியாரூரரின் வரலாறு. அதனாலேயே சேக்கிழார் தாம் அருளிய **பெரிய புராணம்** எனப் பெறும் **திருத் தொண்டர் மாக்கதை** என்ற காப்பியத்துக்கு உரிய தனிப் பெருங் காப்பியத் தலைவராக நம்பியாரூரரை, நாம் தொழும் தெய்வமாக நிலைநிறுத்துகின்றார்.

நம்பியாரூரர் இந்நிலவுலகில் பதினெட்டே ஆண்டுகள் வாழ்ந்து நின்ற திருவருளாளர். அவர் இந்நிலவுலகில் வரலாற்று நாயகராகத் தோற்றம் பெறுவதற்குக் காரண மாயிருந்த திருநாவலூருங்கூட, அருளாளர்களால் போற்றி வணங்கப்பெறும் பெருமையுடையதாகத் திகழுகிறது.

> "பூழியர் கோன் வெப்பொழித்த புகலியர் கோன் கழல் போற்றி
> ஆழிமிசைக் கல்மிதப்பில் அணைந்த பிரான் அடி போற்றி
> **வாழி திருநாவலூர்** வன்தொண்டர் பதம் போற்றி
> ஊழிமலி திருவாதவூரர் திருத்தாள் போற்றி"

என்பது நால்வரையும் போற்றும் ஒரு தனிப்பாடல். இதனுள், திருநாவலூர் மட்டும் தனித்த வாழ்த்தைப் பெறு கிறது. நம்பியாரூரரைத் தோற்றமுறச் செய்த ஒன்றே அத்தகைய தனி வாழ்த்துக்கு அதனைத் தகுதியுடையதாக ஆக்கி விடுகிறது.

நம்பியாரூரர், வன்தொண்டர், நாவலர் கோன், திரு நாவலூரர், ஆரூரர், நாவலர்தனிநாதன், தமிழ்நாதன், தம்பி ரான் தோழர், சடையன், இசைஞானி காதலன் என்றெல் லாம் தம்மைத் தம்முடைய பாடல்களிற் குறித்துக்கொள் ளும் ஏழாந் திருமுறையின் ஆசிரியர் தம்மை யாண்டும் 'சுந்தரர்' என்று குறித்துக் கொள்ளவில்லை.

திருநாவலூரரைக் காப்பியத் தலைவராக அமைத்து, அவர்தம் வரலாற்றைத் தெய்வப் புலமைச் சேக்கிழார் இரண்டு பகுதிகளாக அமைத்துக் கொள்கிறார். திருக்

கயிலையில் வாழ்ந்த வாழ்வு, நிலவுலகில் வாழ்ந்த வாழ்வு என அமைத்துக் கொள்ளுகின்றார்.

திருநாவலூரிற் பிறந்து, திருவஞ்சைக்களத்திலிருந்து வெள்ளையானை மீதேறித் திருக்கயிலை செல்லும் வரையில் உள்ள அவர்தம் வாழ்வியல் வரலாற்றை, நிலவுலக வாழ்வு என அமைத்து, அவ்வாழ்வைத்

''தடுத் தாட்கொண்ட புராணம்
ஏயர்கோன் கலிக்காம நாயனார் புராணம்
கழறிற் றறிவார் புராணம்
வெள்ளானைச் சருக்கம்

என்ற நான்கு பிரிவுகளில் 776 பாட்டுக்களால் அமைத்துத் திறம் பெறக் கூறுகிறார். இவை தவிர, விறன்மிண்ட நாயனார் புராணத்திலும் இவர்தம் வரலாறு பேசப் பெறுகிறது. இவ்விடங்களிலெல்லாம் சேக்கிழார் இவரைச் 'சுந்தரர்' என்ற பெயரால் குறிப்பிடவேயில்லை.

திருக்கயிலையைத் திருநொடித்தான்மலை என்ற பெயராற் குறிப்பிட முற்பட்டு, அஞ்சைக்களத்திலிருந்து யானை மீதிவர்ந்து செல்லத் தொடங்கியது முதல் அம்மலையின் உள்சென்று, வரவேற்கப் பெறும் வரையில் உள்ள செய்திகளைப் பதிகமாக்கும் திருநாவலூரர், திருநொடித்தான்மலை உத்தமன் திருமுன் சென்றதும், அங்குள்ள மந்திரமாமுனிவர் ''இவன் ஆர்'' என்றதும், எம்பெருமான் **''நந்தமர் ஊரன்''** என்றான் என்றே அருளியதன் நுட்பம் உணர்ந்த சேக்கிழார், நம்பி ஆரூரரின் நிலவுலக வாழ்க்கையைக் கூறும் வரலாற்றுப் பகுதி முழுவதிலும் சுந்தரர் என்ற பெயரைக் குறிப்பிடவே இல்லை.

திருக்கயிலையை ஒட்டிய பகுதியில், உபமன்யு முனிவர் முனிவர், சுத்தயோகிகள் முதலியோர் சூழ இருந்த காலையில், ஒரு சோதி போவது தெரிய, அனைவரும் அதிசயிக்க, உபமன்யு முனிவர்,

''..................தென்திசை
வந்த நாவலர் கோன் புகழ் வன் தொண்டன்
எந்தையார் அருளால் அணைவான்''

என்று கூறியதோடு நில்லாமல், கைகள் கூப்பி வணங்கி, பின்னர், அத்திசை நோக்கியும் வணங்குகின்றார். அப்போது சூழ இருந்தவர்கள்,

"சிவன் சேவடியைத் தவிர வேறுயாரையும் வணங்காத தாங்கள் இப்போது வணங்கியது ஏன்? என்று வினவ, அப்போது உபமன்யு முனிவர்,

> "தம்பிரானைத்தன் உள்ளம்தழீஇயவன்
> நம்பி ஆரூரன் நாம் தொழும் தன்மையான்"

என்று கூறியபின், அந்த வரலாற்றை, முனிவர்கள் விரிவாக விளக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ள, அப்போது தான் திருக்கயிலையில் இருந்த ஆலாலசுந்தரர் தென்னாடு போந்ததன் வரலாற்றைக் கூறுகிறார். அங்கேதான் 'சுந்தரர்' என்ற சொல் உபமன்யு முனிவர் வாக்கில் வெளிப்படு கிறது. அங்கேயும் சேக்கிழார் தம்முடைய கூற்றாகச் "சுந்தரர்" என்ற சொல்லை எடுத்தாளவில்லை.

அடுத்து, திருநாவலூரில் சடையனார் இசைஞானியார் என்ற இருவரின் இல்லறப் பயனாய், 'திருவவதாரம் செய்தார்' என்று கூறிய சேக்கிழார், அவதாரம் செய்தவர் 'யார்' என்று குறிப்பிடவில்லை. ஆனால், பரவையார், சங்கிலியார் பிறப்பைச் சொல்லும்போது, திருக்கயிலையில் இருந்த கமலினி, அனிந்திதை என்ற இருவருமே முறையே பரவையாரும் சங்கிலியாரும் என்ற பெயரில் பிறந்தார்கள் என்று கூறுகிறார் சேக்கிழார்.

மேலும், திருநாவலூரரை '**ஆலாலசுந்தரர்**' என்று திருநாவுக்கரசு நாயனார் புராணத்துள் சேக்கிழார் கூறி யுள்ளார்.

> "மறந்தரு தீ நெறிமாற மணிகண்டர் வாய்மைநெறி
> **அறந்தரு நாவுக்கரசும் ஆலால சுந்தரரும்**
> **பிறந்தருள உளதானால்** நம்மளவோ பேருலகிற்
> சிறந்த திரு முனைப்பாடித் திறம்பாடும் சீர்ப்பாடு"

என்பது சேக்கிழார் (பெரியபுராணம் 1281) வாக்கு. ஆலால சுந்தரரே நம்பியாரூரர் என்ற இயைபைத் தடுத்தாட் கொண்ட புராணத்திலேயே விளக்கிவிடும் சேக்கிழார் 'சுந்தரர்' என்ற சொல்லை எடுத்தாளவே இல்லை என்பதும் குறிப்பிடத்தக்கதொன்று.

மேலே குறிப்பிடப்பெற்ற அடிப்படையிலும் பிற அடிப்படைகளிலும் அவ்வப்போது சான்றோர்கள் நம்பி யாரூரர் வரலாற்றைச் சிந்தித்துள்ளார்கள். ஆய்வு என்ற

ஒன்றை மேற்கொள்ளும்போது ஒரே முடிவுதான் வரும் என்று எதிர்பார்க்க முடியாது. அத்தகைய ஆய்வின் முடிவுகளுள் ஒன்றை இங்கே குறிப்பிடவேண்டும்.

'நம்பியாரூரரின் திருக்கயிலை நிகழ்ச்சிக்குச் சான்று இல்லை. சேக்கிழார் உருவாக்கியிருக்கவேண்டும்'' என்றும்;

''சுந்தரர் பிரானின் பெருமை அறிந்துய்யாது சிறுமையே பேசித் தீமை எய்துவரே என்று அஞ்சியும், சுந்தரர் தெய்வத்தன்மையை நிறுவவும் இக்கதையை ஆக்கியிருக்க லாம்'' என்றும் முடிவுகள் வெளிப்பட்டுள்ளன.

அவ்வாறே, திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் வரலாற்றிலும் சில செய்திகள் உண்மையா, நடந்திருக்குமா என்ற வகையில் ஆய்வு செய்யப்பட்டுள்ளன.

தெய்வச் சேக்கிழாரின் கருத்துக்களை ஏற்றும், மறுத்தும் ஆய்வுகள் வந்துள்ளன. இங்கே ஒன்றை நினைவிற் கொள்ளல் நல்லது.

மறைமலையடிகளின் திருமகனாராகிய அமரர், மறை. திருநாவுக்கரசு அவர்கள் **'பெரிய புராண ஆய்வுரை'** என்ற பெயரில் நான்கு நூல்கள் எழுதியுள்ளார்கள். அவர்தம் சொற்பொழிவுகளே நூல்களாயின. நாயன்மார் வரலாற்றிற் காணப்பெறும் நிகழ்ச்சிகள் நம்புதற்குரியனவா? பகுத்தறிவுக் கொத்தனவா? சான்றுகள் உண்டா? என்ற வகையில் அவர் ஆய்வுகள் அமைந்தன. சேக்கிழார் தெய்வப் புலவர் என்பதில் பேராசிரியர் மறை. திருநாவுக்கரசனார்க்கு ஐயம் இல்லை. சேக்கிழார் திருவாக்கினுக்கே இப்படி ஓர் ஆய்வு தேவையா என்ற வினாவை மரபு நெறியாளர் எழுப்புவர். சேக்கிழாருக்குப் பிறகு சற்றொப்ப 800 ஆண்டுகளைக் கடந்த நிலையில், பல்வகை வினாக்களை மக்கள் மன்றம் அமைக்கும்போது, அவற்றிற்குரிய விடைகளைப் பெரிதும் மரபு வழிநின்றேயும், பிற சான்றுகளைக் கொண்டேயும் எடுத்துக்கூற வேண்டியது காலத்துக்கேற்ற இன்றியமையாப் பணி.

சேக்கிழார் காலத்துக்குப்பின், அடியவர்கள் வரலாற்று நுட்பம், தத்துவ விளக்கம், சமுதாயப் பின்னணி என்ற

அடிப்படையில் பல நூல்கள் வெளிவந்தமைக்குக் காரணம் சேக்கிழாரை மறுப்பதற்கன்று; காலத்துக்கேற்ற இன்றி யமையாப் பணியை ஏற்க வேண்டும் என்ற உறுதியைத் திருவருள் வலத்தால் பெற்றமையே.

மேலும், சேக்கிழார் காலத்துக்குப் பின் தமிழகத்தில் பல அருளாளர்கள் தோன்றியுள்ளார்கள். உலகளாவிய நிலையில் பல்வேறு இடங்களில் தோன்றிய அருளார்களின் கொள்கைத் தாக்கமும் தமிழகச் சிந்தனையில் காணமுடி கிறது. இத்தகைய சிந்தனை வளர்ச்சியில், உலகளாவிய நிலையில் தோன்றிய வாழ்வியல் கொள்கைகளுக்குத் தமிழகமும் தன்னுடைய பங்காக, தன்னுடைய மண்ணில் தோன்றிய அருளாளர்களின் கொள்கைகளை எடுத்து விளக்கி நிலைநிறுத்த வேண்டிய பணியை ஏற்றேயாக வேண்டும். சேக்கிழார் தொலைநோக்குணர்வு கொண்டு பல வினாக்களை எழுப்பி விளக்கங் கண்டிருக்கிறார் என்பது மறுக்க இயலாத ஒன்று. சேக்கிழார் சந்திக்காத சில வினாக்களை இன்று தமிழகம் காலப்பின்னணியால் சந்திக்க வேண்டிய கட்டாயத்திலிருக்கிறது. அத்தகைய ஒரு சூழலை நேர்நின்று ஏற்ற பெருமை மறை. திருநாவுக் கரசு அவர்களுக்கு உண்டு.

சென்னைப் பல்கலைக்கழகத் தத்துவத்துறை அவ் வகையில் சில வினாக்களை ஏற்க வேண்டிய கட்டாயத் தன்மையில் நின்றதால் சில நூல்கள் வெளிவரலாயின. அவ்வகையில் **திருமுறைத் தெளிவே சிவஞானபோதம், திருஞானசம்பந்தர் — ஓர் ஆய்வு — இரண்டு பாகங்கள், திருநாவுக்கரசர் — ஓர் ஆய்வு — இரண்டு பாகங்கள்** வெளி வந்தன.

நாயன்மார்களின் வரலாறுகள் உண்மையானவை களா சான்றுடையவைகளா என்ற ஆய்வு ஒருவகை. இத்தகைய வரலாறுகள் அமைவதற்குரிய பின்னணி என்ன? சமயப் பின்னணி, தத்துவப்பின்னணி, சமுதாயப் பின்னணி என்பவைகளெல்லாம் எவ்வாறு ஒரு வரலாற்றை அமைக்கின்றன என்ற அடிப்படையில் இன்றைய மக்கட் சமுதாயத்தை அணுக விரும்புவதே தத்துவத்துறை ஏற்றுக் கொண்ட பணியின் அடிப்படைத்திட்டம்.

சமயம், தத்துவம், சமுதாயம் என்பவைகளில் ஏதாவது புதுமையையோ, மாற்றத்தையோ, புரட்சியையோ இந்த நாயன்மார்களின் சிந்தனை வரலாறு என்பவைகள் சந்தித் திருக்கின்றனவா என்ற அடிப்படையில் ஆய்ந்து, சமய தத்துவக் கொள்கைகளை அமைத்துக் காட்டி விளக்குவதே தத்துவத்துறை மேற்கொண்ட பணி.

மேலும், இந்நூற்றாண்டில் அடியவர்கள் வரலாற்றை, அருளிப்பாடுகளை விளக்க எழுந்த நூல்களிற் சில சேக்கிழாரின் கூற்றுக்களை மறுக்கின்றன. சேக்கிழார் கூற்றைப் புனைந்துரை என்று சில ஆய்வுகள் தம்கருத்தை வெளியிட்டிருக்கின்றன.

அடுத்து அமைவது ஒரு சிக்கல். சேக்கிழாரின் வாக்குக் களின் அடிப்படையில் சில புறச் சமயத்தவர்கள் சைவ சமயம், சைவசமயத்தவர், சைவசமய அருளாளர் மேற் கொண்ட நிகழ்வுகளைக் குறைப்படுத்தியும் வினா எழுப்பிக் கண்டித்தும் எழுதிவருகின்றனர். அவ்வகையில், சேக் கிழாரை மறுக்காமலும், அதேசமயத்தில் புறச்சமயத்தவர் வினாக்களுக்கு உரிய விளக்கங்களை எடுத்துக் கூற வேண்டிய இன்றியமையாப் பணியும் அமைகிறது.

நம்பியாரூரரின் **திருத்தொண்டத்தொகை,** நம்பி யாண்டார் நம்பிகளின் **திருவந்தாதி** என்பவைகளை மூலங்களாகக் கொண்டே சேக்கிழார் திருத்தொண்டர் புராணத்தை அமைத்தாலும், வரலாற்று முறையில், பக்திச் சுவை பாரிக்கும் வகையில் நிகழ்வுகளை அமைப்பதால், பாராட்டும் முறையில் பிற அருளாளர்கள் அமைக்கும் செய்திகளை, நிகழ்வுகளை அவரால் ஏற்று அமைக்க இயல வில்லை. அவை இந்த நூற்றாண்டுக்கு மிகவும் பயன்தரும் கொள்கைகளாக இருப்பின் சேக்கிழார் கருத்துடன் இணைத்து ஒழுங்கு செய்து அமைத்துக்கொள்வது தவறான தன்று, தேவையான ஒன்று.

சேக்கிழார் விதந்து எடுத்துக் கூறாதவைகளை நாம் கொள்ள வேண்டியதில்லை என்பது சிலர் கருத்து. கொள்ள வேண்டியதில்லைதான். சிலவகைச் சிக்கல்களே நம்மை மீண்டும் சிந்திக்கத் தூண்டுகின்றன. உலகளாவிய சிந்தனைத் தாக்கம் காரணமாகச் சில சிக்கல்கள் தோன்றி

விடுகின்றன. சிக்கல் தோன்றாதவரையிலும் சிந்திக்க வேண்டிய கட்டாயம் இல்லை. சில சிக்கல்களுக்குத் தீர்வு காண முற்பட்ட சிலர் சேக்கிழார் வாக்குக்களில் ஒரு பகுதியைக் கட்டுக்கதை என்று கூறிவிடுகின்றனர்.

அருளாளர்களின் வரலாற்று நிகழ்வுகளுக்குத் தத்துவப் பின்னணியை அமைக்க முற்பட்டு, பொருத்தமில்லாத வகையில் சில தத்துவ இணைப்புக்களை எடுத்துக் காட்டி விளக்கியுள்ளமையையும் காண முடிகிறது. குறை இருப்பினும் கூட, இது ஒருவகைப் புதிய நோக்கு எனக் கொண்டு வரவேற்கத்தான் வேண்டும்.

மேலே குறிப்பிடப் பெற்றவைகளை உள்ளத்தே கொண்டு, மரபினை ஒட்டியும், சேக்கிழாரை முன்னிட்டுக் கொண்டும், தமிழக மக்கள் வாழ்க்கையில் அமைந்த சமய, தத்துவ, சமுதாய, பண்பாட்டுப் பின்னணிகளை விளக்கியும், அருளாளர்களின் சமுதாயத் தொண்டின் திறம் இன்னது என வரையறுத்தும், உலகச் சிந்தனை அரங்கில் அருளாளர்களின் வாழ்வும் வாக்கும் மூலமாக, தமிழகத்தின் சார்பில் வழங்க இருக்கும் கொள்கைகள் இவை இவை எனக் காட்டியும் முடிப்பதே தத்துவத்துறை மேற்கொண்ட பணித்திட்டம்.

இத்திட்டத்தின் அடிப்படையில் **சுந்தரர் — ஓர் ஆய்வு** என்ற நூல் இவ்வாண்டில் *(1986)* வெளிவருகிறது. அடுத்த ஆண்டில் **தேவார மூவரின் சமுதாயத் தொண்டு** என்ற பெயரில் மூவரையும் இணைத்து நிறுத்தி, சமுதாயக் கண்ணோட்டத்துடன் ஒரு தொகுப்பாய்வு நூல் வெளிவர இருக்கிறது. திருஞானசம்பந்தர் தமிழகத்தில் ஒரு புதிய சமய சமுதாயக் கொள்கைக்குத் தலைமை தாங்கித் தொடக்கம் செய்கிறார். அது எவ்வாறு இயக்க உருப் பெற்று, வளர்க்கப்பெற்று, திருநாவலூரரால் நிறுவப் பெறுகிறது என்பதும் இவ்வியக்கத்தை இணைந்து நின்று நடத்திச் சிறப்பித்தவர்கள் எவர் எவர்; அவர் தம் பங்கு என்ன என்ன என்பவைகளும் அந்நூலில் இடம் பெறும்.

**சுந்தரர் — ஓர் ஆய்வு** என்ற இந்நூலில் அவர் தம் வரலாறு காரணமாக எழும் சிக்கல்கள், அவர் தம் வாக்கின் நுட்பங்கள், அவர் மேற்கொண்ட தொண்டின் தன்மை முதலியன இடம் பெறும்.

சுந்தரர் வரலாற்றைத் தத்துவப் பின்னணியுடன் விளக்க முற்பட்டவர்கள் அவர் சைவசித்தாந்த நெறி களாகிய சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கனுள் மூன்றாவதாக நின்ற 'யோகம்' என்ற நெறியில் நின்றவர் எனக் கொண்டு, யோகமார்க்கத்தில் இறைவனும் ஆன்மாவும் தோழமை நெறியில் நிற்பார்கள் என்று விளக்கம் அமைத்து, அவ்வகையில் சுந்தரர் வரலாற்றை விளக்கிக் காட்டியுள்ளார்கள். ஆயினும், **திருக்களிற்றுப் படியார்** என்ற சாத்திரநூல் நால்வர் அடியவர்களின் அருளிப்பாட்டுச் செயல்களை எடுத்து விளக்கிய நிலையில், சுந்தரர் செயலை எடுத்துக்காட்டி, சுந்தரரின் தொண்டு எவ்வாறு அமைத்துக் கொள்வது என்ற பொருளில் தம் கருத்தை அமைத்திருக்கிறது.

"மோகம் அறுத்திடின் நாம் முத்தி கொடுப்பதென
ஆகமங்கள் சொன்ன அவர்தம்மைத் — தோகையர்பால்
தூதாகப் போகவிடும் வன்தொண்டன் தொண்டுதனை
ஏதாகச் சொல்வேன் யான்"

என்பது **திருக்களிற்றுப்படியார் 72–ஆம்** பாடல். இதனைச் சிவயோகத்தின் முடிநிலையாகிய சிவஞான வழியில் அமைந்த ஒருநிலை என்று விளக்கம் கூறுகிறது. அத்தகைய வாழ்வியற் குறிக்கோளை எடுத்தமைத்து விளக்கம் செய்யவேண்டிய வான்மையும் தத்துவத் துறைக்கு உண்டு. இனி, நம்பியாண்டார் நம்பிகள் தம் **அந்தாதியில்,**

"ஞானவா ரூரரைச் சேரரை
அல்லது நாம் அறியோம்
மானவ ஆக்கை யொடும்புக்
கவரை வளரொளிப் பூண்
வானவ ராலும்மருவற்
கரிய வட கயிலைக்
கோனவன் கோயிற் பெருந்தவத்
தோர் தங்கள் கூட்டத்திலே"

எனக் கூறும் *(86)* கருத்தையும் தத்துவ அடிப்படையில் சிந்திக்கவேண்டிய பணி உண்டு.

ஏழாந் திருமுறைப் பதிகம் நூறும், பாடல்கள் 1026ம் இவ்வாய்வின் முதன்மை மூலங்களாம்.

ஏழாந்திருமுறைப் பதிகமாகிய **திருத்தொண்டத் தொகைப்** பதிகத்தை மூலமாகக் கொண்டுஎழுந்ததும் நம்பியாண்டார் நம்பிகளால் அருளப் பெற்றதும் ஆகிய **திருத் தொண்டர் திருவந்தாதியில்** சுந்தரரைப் பற்றியனவாக உள்ள பதினொரு பாட்டுக்களும், சடையனார் இசைஞானியார் பற்றிய இரண்டு பாடல்களும் ஆய்வின் மூலங்களாக அமைவன.

அடுத்து, **திருத்தொண்டத் தொகைப் பதிகம், திருத் தொண்டர் திருவந்தாதி** என்ற இரண்டும் தொகையும், வகையும் ஆக அமைய, அவைகளின் விரியாக அமைந்த **திருத்தொண்டர் புராணம்** (சேக்கிழார் திருவாக்கு) ஆகியவைகள் ஆய்வுக்குப் பெரிதும் பயன் தருவன.

கி. பி. பதினேழாம் நூற்றாண்டில் வாழ்ந்த கற்பனைக் களஞ்சியம் சிவப்பிரகாச அடிகள் தம்முடைய **நால்வர் நான் மணி மாலையில்** சுந்தரரைப் பற்றிய ஆய்வியல் விளக்கங்களாகப் பத்துப் பாடல் அருளியுள்ளார்.

அவ்வாறே, சென்ற நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்த இராமலிங்க அடிகள் **ஆளுடைய நம்பிகள் அருள்மாலை** என்ற தலைப்பில் பத்துப் பாடல்கள் அருளியுள்ளார்.

மேலே குறிப்பிடப் பெற்றவர்களுடன் தருமபுர ஆதீன வெளியீடாக 1964ல் வெளிவந்த ஏழாந்திருமுறை, மகாவித்வான் அருணை வடிவேலு முதலியாரவர்களின் பொழிப்புரை குறிப்புரைகளும், ஆதீனத்துப் பேராசியர்களால் எழுதப் பெற்று இணைக்கப்பெற்ற கட்டுரைகளும் எப்புலத்து அறிஞர்களாலும் பெரிதும் போற்றப் பெறும் தகையன. அவைகளும், அவைகளை ஒத்த நிலையில் அண்மைக் காலத்து எழுந்த திருமுறை ஆய்வு நூல்களும் சான்றாக அமைய, **சுந்தரர்-ஓர் ஆய்வு** என்ற இந்நூல் சென்னைப் பல்கலைக் கழகத் தத்துவத் துறையின் 1986ம் ஆண்டு வெளியீடாக, திருவருளும் குருவருளும் முன்னிற்க மலர்கிறது.

# 2. அருட்டுறைப் பொலிவு

## முன்னுரை

திருநெறியத் தமிழ் எனப்பெறும் தேவாரத் திருப்பதிகப் பெரு நெறியைத் தோற்றியும் வளர்த்தும் தமிழகத்துச் சமுதாயத்துக்குத் தொண்டு செய்த அருளாளர்கள் மூவரும் முறையே தோணித்துறை, அறத்துறை, அருட்டுறை என்ற முப்பெருந் துறைகளிற் புகுந்து பொலிவு பெற்றவர்கள் எனக் கொள்வது சைவமரபுக் கொள்கை. தேவார மூவரைப்போலவே மாணிக்கவாசகரும் பெருந்துறை புகுந்தார் என முடித்துக் காட்டுவதும் முறையே.

திருவெண்ணெய் நல்லூர்த் திருக்கோயிலுக்குத் 'திரு அருட்டுறை' என்பது பெயர். திருநாவலூரிற் பிறப் புரிமை பெற்ற நம்பியாரூரர் திருவெண்ணெய் நல்லூர்த் திருவருட்டுறையிற் புக்கபோதுதான் அவர் தம்முடைய முன்னைய வரலாற்றையும், வந்து பிறந்த பிறப்பின் வான் மையையும், நின்று முடிக்க வேண்டிய நிலைபேற்றுப் பணியையும், சென்று முடிய வேண்டிய திருநிலைப் பேற் றையும் உணர்த்த உணர்ந்த வகையில் திருவருட்டுறை சார்ந்த திருத்தகு பொலிவைப் பெற்றார். திருவருட்டுறைப் பொலிவைப் பெற்றுச் சிறந்த நிலை வரையில் அமைந்த வாழ்வியல் விளக்கங்களை ஆய்வியற் கண்ணோட்டத்தில் அமைத்துக் காட்டுவதே இத்தலைப்பில் அமைந்த பொருண்மையாகும். தவநெறிப்பேறு, திருவடிப்பேறு, தில்லைத் திருக்கூத்து என்ற மூன்றையும் இணைத்த முழு மைப் பொலிவே அருட்டுறைப் பொலிவு.

## செம்மை நெறிச் சேக்கிழார்

(1) "உலகெலாம் உணர்ந்து ஓதற் கரியவன்
நிலவுலாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்"

என்று அம்பலவாணர் வணக்கங்கூறி, பின்னர்,

''மதிவளர் சடைமுடி மன்று ளாரைமுன்
துதிசெயும் நாயன்மார் தூய சொன்மலர்ப்
பொதிநலன் நுகர்தரு **புனிதர் பேரவை**
விதிமுறை உலகினில் விளங்கி வெல்கவே''

என்று புனிதர் பேரவைத் திருக்கூட்டத்தார்க்கு வணக்கம் கூறி, இறுதியில்,

''என்றும் இன்பம் பெருகும் இயல்பினால்
ஒன்று காதலித்து உள்ளமும் ஓங்கிட
மன்றுளார் அடியார் அவர் வான்புகழ்
நின்றது எங்கும் நிலவி உலகெலாம்''

எனக் கூறி முடித்தவகையில், சைவசமயத்துக்கு வரலாற்று முறையில் அமைந்துவிட்ட ஒரு புதிய திருப்பத்தை எடுத்துக் காட்டி, அதனை மேலும், தெய்வ முறையான வான்மைப் படுத்திவிடுகிறார், தெய்வப் புலமைச் செம்மை நெறிச் சேக்கிழார்.

சிவனெனும் நாமம் தனக்கே உடைய செம்மேனி எம்மானை முதற்பொருளாகக் கொண்டு வழிபட்டுய்யும் நெறியாகிய சைவசமயத்தில் கொள்கைகளை வகுக்கவும், வரையறைப் படுத்தவும் செயல்முறைப் படுத்திச் சிறப்புறுத் தவும் கால மாற்றங்களினால் கொள்கை மாற்றமோ கொள்கை விளக்கமோ அமைத்து ஒழுங்கு பெறுத்தவும், நெறிவழுவினாரை ஒறுத்தும் பேணியும் ஒழுங்கில் நிறுத்த வும் வல்லதாய், வாய்மையுடையதாய், புனிதம் தேர்ந்ததாய், துங்கமுறு **பேரவை** ஒன்று உண்டு என எடுத்துக்காட்டி, அப்பேரவையே விதிகளை வகுக்கவும் செயல்முறைகளை அமைத்து நெறிப்படுத்தவும் உரிமையுடையது என்று தெளிவாக அமைத்துக் காட்டிய பெருமை சேக்கிழாருக் குண்டு.

திருவாரூர்த் தேவாசிரிய மண்டபத்து அடியவர் கூட்டத் துக்கு அடியேன் என வணக்கங் கூறிய பெருமை நம்பி யாரூரருக்கு உண்டு என்றால், அத்திருக் கூட்டத்தைச் சைவப் பெருநெறிக்குத் தலைமை யாக்கி, அந்நெறியை ஒரு கட்டுக்கோப்பான முறையில் அமைத்து, உயிரோட்டத் துடன் வாழவைக்கும் உரிமை உடைய இயக்கவழித் தொண்டு நிலையமாக அமைத்து, அதற்கு வரலாற்றுப்

பெருமை அளித்து வாழ்த்திய பெருமை சேக்கிழாருக்கே உண்டு. மேலும், சேக்கிழார் ஒரு புரட்சிகரமான கருத்தையும் இணைத்துக் காட்டுகின்றார். சிவ பரம்பொருளால் ஆகமங்களாலும் அருளுரைகளாலும் வகுத்தும், வழி காட்டியும், வாழ்ந்து காட்டியும் அமைக்கப்பெற்ற சைவ விதிமுறைகள் சிறப்புறுக என்று கூறாமல்,

> "புனிதர் பேரவை விதிமுறை உலகினில்
> விளங்கி வெல்கவே"

என்று, **புனிதர் பேரவை** எனப்பெறும் திருக்கூட்டத்தார் அமைத்த விதிகள் உலகில் விளங்கி வெல்க என்று கூறியமையால் ஒரு வரலாற்றுத் திருப்புமுனையை அமைத்துக் காட்டினார். சைவ சமயத் தனிப்பெரு நாயகனாகிய சிவனும் அவன் செயல்களும்கூட, புனிதர் பேரவையின் ஆய்வு முறைகளுக்கு உட்பட்டவைகளே என்று கூறுவதன் மூலம் புனிதர் பேரவையைவரலாற்றுப் பெருமை பொருந்திய வாழ்வியல் இயக்க நிலையமாக அமைத்து வாழ்த்துகின்றார். சைவப் பெருநெறியில் வாழ்பவர்களுக்குரிய வாழ்வியற் சிக்கல்களை ஆராயவும், வாழ்முறைகளை அமைத்துத் தரவும், அரசோ திருமடமோ என்று இன்னோரன்னவற்றில் எந்த ஒன்றையும் சாராத தனித்தன்மையுடைய ஒரு செயல் நிறுவனம் சைவத்துக்கு, சைவநெறி பேணும் மக்களுக்கு உண்டு என்று எடுத்துக்காட்டி, விளக்கிக்கூறி, வாழவைத்த சேக்கிழாரின் தொண்டு, அவர் திருத்தொண்டர் புராணம் அருளியதைவிடப் பல்லாற்றானும் உயர்ந்ததும், சிறந்ததும், காலத்துக்கேற்ற கருத்தாழமுடையதுமான சைவ நன்னெறி நலத்தொண்டு எனக்கொள்ளவேண்டும்.

நம்பியாரூரர் காலத்தில் வாழ்நிலையில் இருந்த பேரவையானது சேக்கிழார் காலத்தில் வாழ்வுடையதாக உயிரோட்டமுடையதாக இருந்ததா என வினவின் ஐயத்துக்கிடமானதே. திருவாரூர்த் தேவாசிரிய மண்டபத்துப் புனிதர்பேரவை அப்படித்தான் அமையவேண்டும், அமைந்திருக்கவேண்டும் என நினைந்து போற்றுகிறார் சேக்கிழார்.

சேக்கிழார் நினைந்து போற்றிய ஒன்று செயல்முறை பெற்று, உயிரோட்டத்துடன் வாழ்நிலை பெற்று, வளர்ந்து வந்திருக்குமானால் இன்றையநாள் சைவசமயக் கொள்கைச் சிக்கல், செயல்முறைச் சிக்கல் ஆகியவை தோன்றுதற்கு

இடமே ஏற்பட்டிராது என்று துணிந்து கூறலாம். பிற சமயங்களுக்குக் காப்பகங்கள் இருப்பன போல, சைவ சமயமும் தனக்கே உரிய பேரவை என்ற காப்பகம் அமைய, இதன்மூலம் வலிவும் ஊட்டமும் பெற்று அச்ச நீங்கி, அமைதியுறு வாழ்வியற் பாதையை அமைத்து வாழும் நிலையைப் பெற்றுச் சிறந்திருக்கும்.

சேக்கிழாரின் நினைவு சைவப் பெருமக்களால் நடை முறைப்படுத்தப் பெறாதது நல்லூழின்மையே.

(2) அடுத்து, அடியார்க்கு ஆளாதல் என்ற வகையில் நம்பியாரூரர் அருளிய திருத்தொண்டத் தொகைப் பதிகத் துக்கு ஏற்றங் கொடுக்கும் வகையில் நம்பியாண்டார் நம்பிகளே **திருத்தொண்டர் திரு அந்தாதி** அமைத்திருந் தாலும் அது ஒரு தோத்திர நூலாகவே அமைந்துவிட்டது. அதன் மூலம் சைவ நன்மக்களின் வாழ்வியலைப் புனித மானதாக அமைத்துவிட முடியும் எனக் கருதமுடியாது. அடியவர்களின் வாழ்க்கையை விரிவும் தெளிவும் வீறும் அமையும் வகையில் **'திருத்தொண்டர் புராணம்'** என்ற வாழ்வியல் நூலை அமைத்துத் தந்தது சேக்கிழார் பேணிய சமுதாயத்தொண்டு. தாம் மேற்கொண்ட சமுதாயத் தொண்டின் உயிரோட்டத்தை வலுப்படுத்தவே, சேக்கிழார் நம்பியாரூரரைத் தலைமைப் பொறுப்பில் நிறுத்த எண்ணு கின்றார்; **திருத்தொண்டத்தொகை** அமைப்பும், **திருத் தொண்டர் திருவந்தாதி** அமைப்பும் அவருக்குக் கை கொடுக்கின்றன. அவ்வகையில் தனித்தனி, சிறுசிறு வரலாறுகளை — தனித்தனித் தலைவர்களைக் கொண்ட வரலாறுகளை இணைத்து நிறுத்தி ஒரு காப்பியமாக அமைத்து, காப்பியத் தலைவராக நம்பியாரூரரை அமைத்து, திருத்தொண்டர் புராணத்தை வாழ்வியற் காப்பியமாக்கி, தாம் அமைத்துக் கொண்ட சமுதாயத் தொண்டுக்கு வாய்மையும் வளமும் அமைந்த ஒரு குறிக்கோள் விளக்கப் பெயராக **"எடுக்கும் மாக்கதை"** என்பதை அமைத்துக் கூறிச் செயற்படுத்திவிடுகின்றார் சேக்கிழார்.

பல்லாற்றானும் ஆய்ந்து, தேர்ந்து, காப்பியத் தலை வராக அமைத்து நிறுத்தப்பெற்ற நம்பியாரூரர் வரலாற் றுண்மைகளைச் சேக்கிழார் வழிநின்று, சிந்திக்கும் ஆய்வுப் பாதையை அமைத்துக் கொள்வதே நம் கடமை.

நம்பியாரூரரின் வாழ்வியல் நிகழ்வுகளை முன் பின்னாக மாற்றவோ, சிலவற்றைத் தள்ளவோ அமைந்த உரிமை ஏதும் இங்கில்லை. சேக்கிழார் அடிச்சுவட்டின் வழியே சென்று, வாழ்வியல் நிகழ்வுகளில் அமைந்த ஆய்வியல் முறைகளை, விளக்கவியலான திருத்தங்களை அமைத்துக் கொடுக்கும், அந்த அளவில் இந்த ஆய்வு நூல் தன்னுடைய பணி எல்லையை வறையறை செய்து கொள்கின்றது.

**''ஆரூரா கயிலையா**

திருக்கயிலையிலிருந்து வந்தவரே ஆனாலும், திருநாவலூரில் அவதாரம் செய்தவரே ஆனாலும், வெண்ணெய் நல்லூரில் ஆட்கொள்ளப் பெற்றவரே யானாலும், சேர நாட்டுத் திரு அஞ்சைக் களத்தேயிருந்து மத்தயானை மேல் ஏறித் திருக்கயிலை புக்கவரே யானாலும், திருநாவலூராளியைத் திருவாரூருக்கே குடியுரிமை ஆக்கிவிடுவது இறைவன் பணி. திருவாரூருக்கு வந்தேறிய பெருமான் என்றோ, ஆரூர் அவருக்குத் திருமணத்தலமே ஒழிய, பிறப்பு நிலைத் தலமன்று என்றோ கருதாமல்,

**''ஆரூரன் ஆரூரில் அம்மானுக்கு ஆளே''**

எனத் திருத்தொண்டத் தொகைப் பதிகப் பாடல்கள் தோறும் வரும் இறுதிவரியை மூலமாகக் கொண்டு, காப்பியத் தலைவருக்கு உரிய நாடு, நகரம் ஆகியவைகளைச் சோழநாட்டுத் திருவாரூராகவே அமைத்து விடுகின்றார். ஆயினும், காப்பியத் தலைவர் வரலாறு திருக் கயிலையிலிருந்தே தொடங்குவதால், திருக்கயிலையையே காப்பியத்தலைவருக்குரிய இடமாகக் கொண்டு நாட்டுச் சிறப்பு, நகரச்சிறப்பைச் சேக்கிழார் அமைக்கவில்லை. திருக் கயிலையை அமைத்து, அதன் சிறப்பியல்புகளாகச் சில வாழ்வியல் நிகழ்வுகளை அமைத்தால், அவை இவ்வுலக மக்களுக்கு மேல்வரிச் சட்டமாக அமையக் கூடிய வாழ்வியற் பாடமாக அமையா என்ற காரணம் பற்றியே சேக்கிழார் இவ்வுலகச் சமுதாய வாழ்வியலுக்கு ஒத்த வகையில் திருவாரூரை அமைத்துக்கொள்ளுகின்றார்.

அடுத்து, திருவாரூரை அடிப்படையாகக் கொண்டு நாடு, நகரச் சிறப்புக்களைக் கூற முற்படும்போதும் அவர்

மனுநீதிச் சோழன் வரலாற்றை மட்டுமே எடுத்துக்கொள்கிறார். தமிழகப் பண்புக்கும், சோழர்குல மன்னர்களின் ஆட்சியின் தனிச் சிறப்புக்கும், சமயம், கலை, ஆட்சி, அறம், செங்கோன்மை ஆகியவைகளை இணைத்த சமுதாயக் கொள்கைக்கும் உரிய வரலாற்றுக் கருவை மூலமாக எடுத்துக்கொண்டு, சமயம், ஆட்சி, அறம் ஆகியவைகளை இணைத்த சமுதாய அறம் பேசுகிறார். அது ஆறறிவு படைத்த மனிதனுக்குரிய நீதியாகவோ ஐயறிவு பெற்ற பசு, அதிலும் பயமறியா இளங்கன்று பற்றிய நீதியாகவோ, மனித உயிரையும் மாட்டின் உயிரையும் வேறுபட நிறுத்திக் காணும் முறையில் மலர்ந்த நீதி ஆகவோ கொள்ளத் தக்கது அன்று. உயிர்களனைத்தையும் ஒப்ப நிறுத்தி, அனைத்துயிர்களையும் சமநிலைச் சமுதாயமாக அமைத்துக்கண்ட பொதுமை நோக்கின் அடிப்படையில் மலர்ந்த சமுதாய ஒருமைப் பாட்டுப் பேரறம்.

அடுத்து, கழுவாயின் அடிப்படையில், உயிர்க் கொலையை மதிப்பீடு செய்து நீதி வழங்கலாகாது என்ற கொள்கை தமிழகத்துச் சோழப் பேரரசால் வழிவழி மரபாகப் பின்பற்றப் பெறும் முறை என்பதையும் எடுத்துக் காட்டி, சோழப் பேரரசின் ஆட்சிக் கொள்கையை விளக்கியிருப்பது சேக்கிழாரின் சமுதாய வாழ்வியற் சீரமைப்புப் பணியை உள்ளிட்ட ஆய்வியற் கண்ணோட்டத்தின் விளைவு எனக் கொள்ள வேண்டும்.

மேலும், மனுநீதிச் சோழன் வரலாற்றை எடுத்துக் கூறுவதன் மூலம் இரண்டு அடிப்படைக் கொள்கைகளைச் சேக்கிழார் வகுத்துக் காட்டுகின்றார்.

1. கன்று இறந்தமைக்கு உரிய தீர்ப்பு என்ன என்று வினவிய அரசனுக்கு,

> "சிந்தை தளர்ந்தருளுவது மற்றிதற்குத் தீர்வு அன்றால்
> கொந்தலர் தார் மைந்தனை முன் கோவதை செய்தார்க்கு மறை
> அந்தணர்கள் விதித்த முறை வழி நிறுத்தல் அறம்"

என்று அமைச்சர்கள் (பெரியபுராணம் 119) கூற,

> "என்மகன் செய் பாதகத்துக்கு இருந்தவங்கள் செய இசைந்தே
> அன்னியன் ஓர் உயிர் கொன்றால் அவனைக் கொல்வேனானால்

தொன்மனுநூல் தொடை மனுவால் துடைப்புண்டது எனும் வார்த்தை
மன்னுலகில் பெற மொழிந்தீர்''

என்று (பெரிய புராணம் 122) மன்னன் விடையிறுத்ததன் மூலம் குற்றத்துக்குக் கழுவாய் செய்தல் என்பது நீதியொடு பட்ட தருமமாகாது என்பதை வலியுறுத்துகிறார் சேக்கிழார்.

2. அரசன் இரண்டாவதாக ஒரு கொள்கையையும் வலியுறுத்திக் கூறுகின்றான். உயிர்க்கொலை வேறு ஊரில் நடந்தால் அதற்குரிய நீதி எப்படியும் அமையலாம். ஆனால், **திருவாரூர் உறப் பிறந்த உயிர் என்றால்** அதற் கென அமைக்கப்பெறும் நீதி வேறு என்பதை மன்னன் வாயிலாகச் சேக்கிழார் அமைத்துக் காட்டுகின்றார்.

''போற்றிசைத்துப் புரந்தரன்மாலயன் முதலோர் புகழ்ந்திறைஞ்ச
வீற்றிருந்த பெருமானார் மேவியுறை **திருவாரூர்த்**
**தோற்றமுடைய உயிர் கொன்றானாதலின்** துணி பொருள்தான்
ஆற்றவும் மற்று அவன் கொல்லும் அதுவேயாம் எனநினைமின்''

என்ற மன்னவன் கூற்றை (பெரிய புராணம் 126) நன்கு சிந்தித்தல் வேண்டும்.

''திருவாரூர்த் தோற்றமுடைய உயிர் கொன்றான்'' என்று மன்னவன் வாக்காகச் சேக்கிழார் அமைத்த தற்குக் காரணம் நம்பியாரூரர் அருளிய **திருத்தொண்டத் தொகையே.**

**''திருவாரூர்ப் பிறந்தார்கள் எல்லார்க்கும் அடியேன்''**

என்பது நம்பியாரூரரின் திருத்தொண்டத் தொகைவரி. திருவாரூர் மனுநீதிச் சோழன் வரலாற்றின் மூலம் மேலே குறிப்பிடப் பெற்ற இரண்டு அடிப்படைக் கொள்கைகளை மக்கள் மனத்தில் நிறுவ முயன்றார் சேக்கிழார் எனக் கொள்ளுதல்வேண்டும்.

சேக்கிழாருக்கு அடுத்த நிலையில், மனுமுறை கண்ட வரலாற்றுக்குத் தமிழகத்துப் பண்பாட்டு விளக்கம் தந்து விரிவாக எழுதியவர் வடலூர் **வள்ளற்பெருமானே. மனுமுறைகண்ட வாசகம்** என்ற தலைப்பில் சீவகருணை

முதலிய பல்வேறு கொள்கைகளை விரிவாகவும் வலிவாக வும் அமைத்து எழுதியுள்ளார்.

அடுத்து, திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் காலங் களில் இருந்ததைவிட, நம்பியாரூரர் காலத்தில் திருவாரூர் மிகவும் ஏற்றம் கொள்கிறது.

திருநாவுக்கரசர் திருப்பதிகங்களை நோக்கினால், அவர் காலத்தில் ஆரூர் ஏற்றம் கொள்வதற்குரிய பல தொண்டுகள் நிகழ்ந்தன என்பதை அறியலாம். நமிநந்தி அடிகள் பங்குனி உத்தரம் பாற்படுத்தல் என்றாற்போன்ற பணிகள் பலவற்றை அமைத்துச் செய்துள்ளார். புற்றிடங்கொண்ட பெருமான் பூங்கோயிற் பெருமானாக வளர்தல், தியாகேசப் பெருமான் இணைந்து பணிமேற்கொளல் போன்ற வளர்ச்சி நிலைகள் பேசப்பெறுகின்றன. அவை உரிய இடங்களில் தக்க சான்றுகளுடன் எடுத்துக் காட்டப் பெறும்.

**சுந்தரரின் கயிலை வாழ்வு**

திருநாவலூரை இடமாகக் கொண்டு தோன்றிய கார ணத்தால் திருநாவலூரர் எனவும் இவ்வாறே ஆரூரர், தம்பி ரான் தோழர் போல்வனவும் அவருக்கு இடப்பெற்ற பெயர் களேயாயினும் சான்றோர்களின் எழுத்துக்களிலும் மக்கள் வழக்கிலும் இன்று பெரிதும் பயின்று வழங்கப் பெறுவது **'சுந்தரர்'** என்பதே. சுந்தரர் என்ற சொல் அவருடைய திருக்கயிலை வாழ்வை அடிப்படையாகக் கொண்டது. திருக்கயிலையிலிருந்து வந்ததாலோ, ஒருவருடைய முற்பிற வியை ஒட்டிய ஒரு பெயர் அவருக்கு இப்பிறவியில் இணைத்துக் கூறலாம் என்ற வாய்ப்பு ஏற்பட்டிருந்த தாலோ முற்பிறவியின் பெயரை இப்பிறவிக்குரியதாக்கி வழங்கும் மரபு இல்லை. ஆனால், நம்பியாரூரரைப் பொறுத்த வரையில், அவருடைய திருக்கயிலைப் பெயரோ டன்றி, திருக்கயிலையில் நடந்த சில வாழ்வியல் நிகழ்வு களுங்கூட, எடுத்த இப்பிறவியில் அவர்பால் வந்து சேர்ந்து விடுகின்றன. முற்பிறவிச் சூழலைச் சுட்டாமலேயே நம்பியாரூரர் வரலாற்றை அமைக்க முடியாத ஒரு சிக்கல் நம்பியாரூரர் வரலாற்றமைப்பில் இருந்த காரணத்தாற் போலும், அவருடைய திருக்கயிலை வாழ்வியல் நிலையை

உபமன்யு முனிவர் வாக்காக அமைத்து மிகச் சுருக்கமாகக் கூறிவிடுகின்றார் சேக்கிழார்.

**திருக்கயிலை வாழ்வு தேவையா?**

I. நம்பியாரூரரின் திருக்கயிலை வாழ்வைச் சேக்கிழார் கூறியிருக்க வேண்டியதில்லை என்பது ஆய்வாளர்களின் பொதுவான. கருத்து.

1. மறைமலையடிகளும் அவர்தம் திருமகனாராகிய மறை — திருநாவுக்கரசனார் அவர்களும் சேக்கிழார் சுந்தரரின் கயிலை வாழ்வைக் கூறியிருக்க வேண்டியதில்லை என்று கருதினாலும், சேக்கிழார் எழுதியமைக்கு ஒரு காரணத்தையும் அமைத்துக் காட்டியுள்ளார்கள்.

"சுந்தரர் ஆதிசைவ அந்தணர். ஆயினும், சாதி முறையை மீறி அவர் இந்நிலவுலகில் இருமணம் செய்து கொண்டமையால் சாதியை விரும்புபவர்கள் சுந்தரரின் பெருமையறியாது அவரை இழிவுபடுத்திப் பேசிவிடலாம். அவ்வாறு நேராமல் இருக்கவே, சுந்தரரின் தெய்வத் தன்மையை நிறுவ வேண்டும் என்று கருதிய சேக்கிழார் அவரது திருக்கயிலைக் கதையை ஆக்கி இருக்கலாம்" (மறை. திருநாவுக்கரசு, **பெரிய புராண ஆய்வுரை**, முதல் தொகுதி, பக்கம் 10)

2. பேராசிரியர் கா. சுப்பிரமணிய பிள்ளை எம்.ஏ., எம்.எல். அவர்கள் **சுந்தரமூர்த்தி சுவாமிகள் சரித்திரம்** என்ற பெயரில் அமைத்த நூல், சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தால் (1961-ல் மூன்றாம் பதிப்பு) வெளியிடப் பெற்றுள்ளது. திருக்கயிலாய வாழ்வை ஏற்றுக்கொண்டு விளக்கம் எழுதிச் செல்பவர் திருக்கயிலையிலிருந்து போந்த கமலினியாரே பரவையார் என்ற கருத்தை ஏற்றுக்கொள்ளுகின்றார். பின்னர்,

"அநிந்திதையே சங்கிலியாராக அவதரித்தாரென்று ஆசிரியர் சேக்கிழார் கூறுகின்றார். அதனை அவர் எவ்வாறுணர்ந்தாரென்பது தெரியவில்லை." (பக்கம் 107) என்று குறிப்பிடுகின்றார். கமலினியே பரவையாராக அவதாரம் செய்தார் என்பதை ஏற்றுக்கொள்ளும் பேராசிரியர், அநிந்திதை வரலாற்றில் மட்டும் ஐயங்கொள்வதன் காரணம் தெரியவில்லை.

இங்கே ஒரு கருத்தை உளங்கொள்ள வேண்டும். நம்பியாரூரரின் கயிலை வாழ்க்கையைத் திறனாய்வு செய்து எழுதுகின்ற சான்றோர்கள் அது கற்பனைக்கதை என்றும் தேவையில்லாத மிகை என்றும் அமைத்துக் காட்டுகின்ற அதே சமயத்தில், நம்பியாரூரர் என்ற பெயரைவிட, சுந்தரர் என்ற பெயராலேயே அவரைக் குறிப்பிட்டு எழுது வதில் தவறுவதில்லை. சுருங்கக்கூறின், நம்பியாரூரர் என்ற சொல்லால் அவரைப் புரிந்து கொள்ளுகின்ற சைவ மக்களின் எண்ணிக்கையை விட, சுந்தரர் என்ற சொல்லாற் புரிந்துகொள்ளுகின்றவர்களே பன்மடங்கு அதிகம் என்று கூறினால் மிகையாகாது.

அடுத்து, "சங்கிலியாரின் தந்தைபால் மகட்பேசச் சிலரை விடுத்த ஓர் ஆண்மகன், பேசச் சென்றவர் வருவ தற்குமுன் இறந்தமை, பெருங்கேடு செய்தவன் அதன் பயனாக உடனே இறந்தமை போன்றது என்று ஆசிரியர் சேக்கிழார் செப்பியது, குருவியிருக்கப் பனம்பழம் விழுந் தது என்பதோடு ஒக்குமெனினும், உலக வழக்கிலுள்ள மக்கள் மனப்பான்மையைத் தெரிவித்தவாறாம்" (பக்கம் 109) என்று திரு. கா. சு. பிள்ளை, அவர்கள் எழுதியதன் மூலம், அவன் இறந்தமையை, சங்கிலியாரோடு இணைந்த ஒரு வரலாற்று நிகழ்வாகக் கொள்ள அவர்மனம் இடந்தர வில்லை என்பது தெரிகிறது.

II. இனி, சுந்தரரின் திருக்கயிலை வாழ்வை அமைத் துக்காட்டும் சேக்கிழார் அதனை முழுமையாக அமைத்துக் காட்டவில்லை என்றும், ஒரு குறிப்பிட்ட அளவு மட்டுமே அமைத்துக் கொள்ளுகிறார் என்றும், இவ்வாறு, சேக்கிழார் பிறமொழி நூல்களிலிருந்து எடுத்துக் கொண்ட ஒருசில வரலாறுகளிற்கூட, முழுமையாகக் கொள்ளாமல் ஒருசில பகுதிகளை மட்டும் ஏற்றுக் கூறியிருப்பதன் காரணம் தெரியவில்லை என்றும் சில ஆய்வறிஞர்கள் குறிப்பிட் டுள்ளனர்.

திரு. வா. மகாதேவமுதலியார் அவர்கள் தாம் எழுதி, 1970-ல் சென்னை, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத் தாரால் வெளியிடப்பெற்ற **பெரிய புராண ஆராய்ச்சி** என்ற நூலின் 44-45 ஆகிய பக்கங்களிற் கீழ்க்குறித்த செய்திகள் காணப்பெறுகின்றன.

"திருக்கயிலாயப்பெருமான் ஒருநாள் தனது வடிவத்தை நிலையாடியிற் கண்டு தலையசைத்து, 'வருக', 'வருக' என்றழைக்க, அழகெல்லாம் திரண்டுவந்து, திருமுன் நின்று வணங்க, பெருமான் **சுந்தரா** என்றழைத்தனன். தேவர்களும் அசுரர்களும் அமுதம் பெறல் வேண்டி மந்தர மலையை மத்தாக நாட்டி, வாசுகியைக் கயிறாகப் பூட்டி, திருப்பாற்கடல் கடைந்த ஞான்று, வாசுகியென்னும் பாம்பு ஆற்றாது நஞ்சினை உகுப்ப, அஃது உயிர்களை அழிக்க முற்பட, அப்போது திருமால் பெருமானை அணுகி,

"இதுபொழுது காத்திலையேல் எமக்கிறுதி இன்றேயாம்
விதுமுடித்த பெருங்கருணை வெள்ளமே"

என்றிரப்ப, பெருமான் சுந்தரனை நோக்கி, 'அந்நஞ்சினைக் கொணர்தி' என்ன, அங்ஙனமே கொணர்ந்த காரணம் பற்றி, **'ஆலால சுந்தரன்'** எனப் பெற்றான். அதுநிற்க, சுந்தரன் நிலைஆடியினின்றும் வெளிவந்த அப்போதே அம்பிகை தனது வடிவத்தை அந்நிலையாடியிற் கண்டு இரண்டு கண்களாற் குறிசெய்து 'வருக' என்றழைத்தமையால் மகளிர் இருவர் வெளிப்போந்து அம்மை திருவடியின் கண் வீழ்ந்து வணங்கினர். அவர்கள் **அநிந்திதை, கமலினி** எனப் பெற்றனர்.

"ஒருதினம் ஆடியில் தன் ஒளிகெழு விம்ப நோக்கிச்
சுருதியோர் நான்கும் காணாத் தூய எம்பெருமானிங்கு
வருதியென்று உளமகிழ்ந்து மலர் முடி அசைக்க மற்றும்
திருவமர் கைலை வாழும் சிவகணங் களிற் சிறக்க"

"அந்த முற்றுந் திரண்டுரு வாகிய
சுந்த ரன்எனத் தோன்றினன் அண்ணன்முன்"

"அன்ன சுந்தரற்கு ஆலாலம் ஆழியின்
முன்ன முன்இவன் உண்ணமற் றன்னதைத்
தன்ன கங்கை தழீஇக்கொடு நல்கலால்
துன்னும் **ஆலால சுந்தர** நாமமே."

"அம்பிகை விளங்கு ஆடியில் தன்னுரு
விம்பம் தன்னை விழிகொடு அழைத்தனள்"

"கருணைகூர் இரு கண்கள் அழைக்கவே
இருமடக்கொடி இன்னெழில் தாங்கிவந்து
இரு இமாசல மீன்றம னோகரி
மருமலர்ப் பதம் மேவி வணங்கினார்"

எனப் புராணங்களை மொழிபெயர்த்த பின்னோர் நூல்களுங் கூறுகின்றன. சுந்தரர், அநிந்திதை, கமலினி இவர்கள் வரலாற்றைப் பற்றி ஆசிரியர் ஒன்றும் உரைத்தாரில்லை" என்று குறிப்பிட்டுக் காட்டுகின்றார்.

அடுத்து, சிவக்கவிமணி, C. K. சுப்பிரமணிய முதலியார் அவர்கள் பெரிய புராணத்துக்கு, மாபாடியம் என்ன ஒரு பேருரை வரைந்துள்ளமை சைவஉலகம் பெரிதும் நன்கறிந்த செய்தியாகும். அதன் முதற்பகுதி **திருமலைச் சருக்கம் 35-ம்** பக்கத்தில்,

"சுந்தரமூர்த்திகள் சிவபெருமானது பேரொளியைப் பெற்றவர் என்பது இங்குக் குறிக்கப் பெற்றது. சிவபெருமான் ஒருகாலத்திலே தமது திருவுருவைக் கண்ணாடியில் பார்த்து அதில் தோன்றிய உருவத்தை 'வா' என்றழைக்க, அதுவே **சுந்தரராக** வந்தது என்னும் வரலாறும் இங்கே குறிக்கத்தக்கதாம். இதுபற்றி,

"கயிலை நாயகன் காமரு தன்னுருப்
பயிலும் ஆடியிற் பார்த்தங் கழைத்தலும்
வெயில் செய் **வெங்கதிர் கோடி விராய்** எனச்
செயிரி லாத மெய்த் **தேசொடும்** தோன்றினார்"

எனும் **பேரூர்ப் புராணம்**, பள்ளுப் படலம் (1) பாட்டும் காண்க." என்று எடுத்துக் காட்டியபின், சுந்தரர் ஆலால சுந்தரர் என்ற பெயர் பெற்றார் என்பதை,

"அன்ன சுந்தரற்கு ஆலாலம் ஆழியின்
முன்னம் முன்னவன் உண்ண மற்று அன்னதைத்
தன் அகங்கைத் தழீஇக்கொடு நல்கலால்
துன்னும் **ஆலால சுந்தர நாமமே**"

என்ற பேரூர்ப் புராணப் பாட்டின் துணைக்கொண்டு விளக்கினார்.

இனி, சுந்தரரின் தோற்றத்துக்கும், அவர் ஆலால சுந்தரர் ஆயினமைக்கும், சேக்கிழாரின் வரையறைக்கு அப்பாற்பட்டு, பேரூர்ப் புராணத்தின் துணைக்கொண்டு, விளக்கம் எழுதும் சிவக்கவிமணி அவர்கள் உமையம்மையால் ஆடியிற்கண்டு அழைக்கப் பெற்றவர்களே கமலினியும் அநிந்திதையும் என்ற கருத்தைக் கூறவில்லை.

அடுத்து, சுந்தரரின் திருக்கயிலை வாழ்வை முற்றாகக் கூறவில்லையானால், என்ன குறை வந்து விடும் என்பதையும் நாம் ஆய்ந்து காண வேண்டும். மறைமலை அடிகளின் கருத்தும் அவர் தம் திருமகனார் கருத்தும் முன்பே குறிக்கப் பெற்றுள்ளன. சுந்தரருடைய தெய்வத் தன்மையை உணர்வதற்கு வாய்ப்பு இல்லாதுபோவதோடு, அவரை இழிவாகப் பேச வேண்டியும் வரும் என்பதே மறைமலையடிகள் கருத்து.

இங்கே, தத்துவத்துறை ஆய்வின் அடிப்படையில் எழும் ஒரு இன்றியமையாத வினாவைச் சந்தித்தல் மிக மிகத் தேவையான ஒன்று.

திருக்கயிலையிலிருந்து சிறுமையுற்று இந்நிலவுலகிற்கு வருபவர் மீண்டும் திருக்கயிலையை அடையும்போது பெருமையுற அனைவரும் வாழ்த்தெடுப்பச் செல்லுகின்றார். அத்தகு பெருமையை அளித்த நிலவுலக வாழ்வை அல்லது நிலவுலக வாழ்வில் ஏற்றுச் செய்த செயல்களை எந்த ஒரு அடிப்படை கொண்டு இழிவுபடுத்திப் பேச இயலும்!

மேலும், இம்மூவரும் நிலவுலகம் வரும்போது இன்ன இன்ன சாதியிற் பிறக்க வேண்டும் என்ற வரையறையை அமைப்பது யார்? அந்த வரையறை எந்த ஒரு அடிப்படையில் அமைக்கப் பெறுகிறது? சுந்தரர் வேண்டுமென்றே சாதி விட்டுச் சாதி சென்று கலப்பு மணம் செய்து கொள்கிறாரா அல்லது கட்டாய மணத்தை ஏற்றுக்கொள்ள வேண்டிய இடர்ப்பாட்டில் நிற்கிறாரா? இத்தகைய வினாக்களைக் கேட்க அஞ்சும் சைவ மரபு கலப்பு மணத்தை வரையறை செய்வது சிவபரம் பொருளின் எல்லைக்கு அப்பாற்பட்ட ஒன்றாக எண்ணுவானேன்?

சுந்தரர் திருக்கயிலையிலிருந்து சிறுமையுடன் வெளிப் போந்தமைக்குக் காரணம் அவர் மாதர்மேல் மனம் போக்கியமையா? சுந்தரர் கயிலையை நீங்கி வருவதற்குக் காரணம் திருத்தொண்டத் தொகையை வெளிப்படுத்தவே என்பதும் காரணமாக்கப் பெறுகிறது. இவ்விரண்டையும் முதன்மைக் காரணம், துணைமைக் காரணம் என்றே

அறிஞர்கள் கொள்ளுகின்றார்கள். ஒரு செயலுக்கு இரண்டு மூலகாரணங்கள் அமைதல் ஏற்புடையதாகுமா?

மேலே கூறப்பெற்ற வினாக்களுக்கு உரிய விடைகளை நாம் சேக்கிழாரிடத்தில் எதிர்பார்க்க முடியாது. சுந்தரர் பெருமையுடன் கயிலையை அடையும்போது உபமன்யு முனிவர் கூறியதாக அமைத்து விடுவதால் இத்தகைய வினாக்களையே எழுப்புதல் மரபாகாது என்றே கொள்ளவேண்டிய நிலை அமைந்துவிடுகிறது.

சுந்தரரின் திருக்கயிலை வாழ்வை மேலான போக்கில் செவி மடுத்தாலே — திருக்கயிலையில் உள்ளவர் தம் வாழ்க்கை எப்படியிருக்கும் என்பதை உணரலாம். சுந்தரரின் கயிலை வாழ்வைத் தெரிந்துகொள்ள முற்பட்டால் பல்வேறு ஐயங்கள் தோற்றம் பெறுகின்றன. சில ஐயங்கள் கீழே சுட்டப்பெறுகின்றன.

(1) சிவபெருமான் தன்னைச் சிறப்பாக அலங்காரம் செய்துகொண்டு ஆடி (கண்ணாடி)யின் முன்னர் அமர்ந்து தன்னுடைய உருவத்தைப் பார்த்தார். ஆடியில் தோன்றிய உருவத்தைப் பார்த்து இறைவன் 'வருக' என அழைத்தார். வந்த உருவத்துக்குச் 'சுந்தரன்' என்ற பெயர் அமைக்கப் பெறுகிறது.

உண்மைச் சுந்தரர் இறைவனே. ஆடியில் தோற்றம் பெற்று, அழைக்கப்பெற்றதும் வெளிப்போந்ததும் பிம்பம். அவ்வகையில் உண்மைச் சுந்தரர் — பிம்பச் சுந்தரர் என்ற இரண்டில் முன்னது உண்மை; பின்னது கற்பனை. இது **பிம்பப் பிரதிபிம்ப வாதம்** என்ற சங்கர அத்வைதக் கொள்கையாக அமையாதா?

(2) சுந்தரர் அணுக்கத் தொண்டராகிறார். திருநீற்றுத் தொண்டும் திருமலர்த் தொண்டும் மேற்கொள்ளுகின்றார். பின்னர் நஞ்சு வருகிறது. இருவகை நஞ்சு. பாற்கடலைக் கடைந்தபோது அதிலிருந்து தோன்றிய நஞ்சு ஒன்று. வாசுகி என்னும் பாம்பைக் கயிறாகக் கொண்டு கடைந்ததால் தாங்க இயலாத நிலையில் வாசுகி தன்னுடைய ஐந்து தலைகளிலிருந்தும் சிந்திய ஐவகை நஞ்சு. கடல் தந்த ஆலம் + வாசுகி தந்த ஆலம் என்ற இவ்விரண்டும் ஒரே

ஆலமாக இணையாமையால் ஆலம் ஆலம் சேர்ந்து 'ஆலாலம்' என நின்றன. அவையிரண்டும் அனைத்து உலகங்களையும் அழிக்கும் வகையில் பெருக்கெடுத்த போது, அவைகளைத் திரட்டி, பெரியதைச் சிறியதாக்கி, இரண்டாக நின்றதை இணைத்து ஒன்றாக்கி, மிகச் சிறிய உருண்டையாக ஆக்கிக் கொண்டுவந்து இறைவனிடம் கொடுத்தார். இந்நிலை அவருக்குத் திருநீற்றுத் தொண் டாலும் திருமலர்த் தொண்டாலும் வந்த சிறப்பு. நஞ்சை விழுங்கிய இறைவனுக்குக் கண்டத்தில் கறை. ஆனால் கறைபடாத கை சுந்தரருக்கு மட்டுமே.

மேருமலையின் மேம்பட்ட தவத்தான் என்று இறை வனே புகழுமளவுக்குத்தவவாழ்வை — தொண்டு வாழ்வை மேற்கொண்டிருந்த சுந்தரருக்கு மாதர் இருவர்மேல் மனம் போக்கும் நிலை அமையுமா ? திருக்கயிலையானது காதன்மை நிகழ்தற்கு உரிய இடமா?

(3) மாதர் இருவர்மேல் மனம் போக்கியது உண்டு என்னில், இருவர் மாதரையும் சுந்தரருக்கு ஒத்த நிலையில் நிறுத்தியதாக அம்மூவர்தம் மண்ணுலக வாழ்வை அமைத் திருக்கலாமே! பரவையை மறக்க இயலாது எனவும் தூளுரை தந்தாலும் சங்கிலியைப் பிரியத்தான்வேண்டும் எனவும் நிறுத்தி, பிரியவைத்து, அதனால், சுந்தரர் துன்புறு மாறு ஒரு வரலாறு அமைவானேன்?

(4) சடங்கவி சிவாசாரியாருடைய மகள் இவரையே நினைந்தும், பெயரை மந்திரமாகக் கொண்டும் முத்திபெற் றாள் எனில் சுந்தரரோடு அவள் வரலாறு இணைவது ஏன்?

(5) முரண்பாடுகள் உண்மை ஆகா. உலகில் இல் லாத வழக்கு. பொய்யை மெய்யாக நிறுத்த ஓர் ஓலை. அதுவும் இசைவால் வந்தது. பொய்மையின் வெற்றியும், மெய்மையின் தோல்வியும். மெய்மை என்று நிறுவப் பெற்ற எல்லாம் பின்னர்ப் பொய்மை என அறியப்பெறு கிறது. அவ்வாறே, மெய்மை என நிறுவப்பெற்றனவெல் லாம் பொய்மை என மறுக்கப்பெறுகிறது; இந்த வழக்கில் தொடர்பு கொண்ட எல்லாமே உண்மையா பொய்யா என்றால் சொல்ல இயலவில்லை என்பதே விடை. சொல்ல

இயலவில்லை என்பதையே '**மாயை**' என்று சொல்லு கின்றார் திருநாவலூரர்.

> "அனைத்து நூல் உணர்ந்தீர்! ஆதிசைவன் என்றறிவீர் என்னைத்
> தனக்கு வேறடிமை என்றிவ் வந்தணன் சாதித்தானேல்
> **மனத்தினால் உணர்தற்கெட்டா மாயை** என் சொல்லுகேன்யான்
> எனக்கிது தெளியவொண்ணாது என்றனன்" எண்ணம் மிக்கான்

என்பது சேக்கிழார்(பெரிய புராணம் 200) வாக்கு.

எனவே, ஆடியில் தோன்றிய பிம்பத்தை அழைத்தது முதலாக, திருவெண்ணெய் நல்லூரில் சுந்தரரே அனைத் தும் மாயை என்று கூறி அருட்டுறை புகுந்தார் என்பது வரை மாயாவாதத் தத்துவக் கொள்கை விளக்கமே என்று கொண்டால், அக்கொள்கையை மறுக்கும் சித்தாந்தக் கொள்கையின் அடிப்படையில் எத்தகைய விளக்கத்தைக் கொள்ளமுடியும்? இத்தகைய அடிப்படைத் தத்துவச் சிக்கல் காரணமாகத்தான் சுந்தரரின் திருக்கயிலை வாழ்வு பேசப்பெறவில்லை என்று கூறுவதும் ஒருவகையில் பொருத்தமுடையவிடையாக அமையுமோ என்று எண்ணத் தோன்றுகிறது.

(6) 'நொடித்தான் மலை உத்தமன்' என்ற பதிகம் முழுவதும் அமைக்கும் செய்திகளில் ஊன் உயிர் வேறு வேறு செய்தல், உடல் காட்டுவித்தல், துஞ்சுதல் மாற்று வித்தல், உடல் அழியாதே உயர்ந்திருக்கும் நிலை, 'நந்தமர் ஊரன்' எனல், என்பவை மிகவும் இன்றியமையாதவை. இவைகள் பின்வரும் இராமலிங்க சுவாமிகளால் பெரிதும் போற்றப் பெற்றவை. இத்தகைய பேறுபெறுகின்ற அள வுக்கு, அவர் மேற்கொண்ட வழி என்ன, அதன் இயல்பு என்ன என்பவைகளையும் ஆய்ந்து தெளிதல் வேண்டப் படுவதொன்றாம்.

திருக்கயிலைக்குச் சென்று சேர்ந்த வாழ்வை நாம் சிறப் பாகச் சிந்திக்கவேண்டியிருப்பதால் சுந்தரர் வாழ்வைத் திருக்கயிலையிலிருந்து தொடங்கித்தான் ஆய்வு செய்தல் வேண்டும்.

கண்ணாடியில் தோன்றிய உருவத்தைச் சுந்தரா வருக என அழைக்க வந்தவர் சுந்தரர் என்ற ஒரு நிகழ்வைத் தவிர ஏனைய நிகழ்வுகளைச் சேக்கிழார் உடன்பட்டுக்

கூறியிருப்பதால் அவர் சென்ற அடிச்சுவட்டையே பின் பற்றிச் சென்று, உரிய இடத்தில் கண்ணாடி நிகழ்வையும் இணைத்து அமைத்துக் கொள்ளுதல் நடுநிலை ஆய்வுக்குப் பொருந்துவதே எனக் கொள்ளல்வேண்டும்.

**நாவலூர் நற்றவம்**

திருத்தொண்டர் திருத்தொகையிற் காணப்பெறும் தனியடியார்கள் அறுபத்துமூவரில் எண்மரைத் தன்னகத்தே தாங்கி வெளிப்படுத்திய பெருமையுடையது **நடுநாடு**.

நம்பியாரூரரின் தந்தை சடையனார், தாயார் இசைஞானியார், நம்பியாரூரரை எடுத்து வளர்த்த நரசிங்க முனையரையர், என நம்பியாரூரரை உள்ளிட்ட நால்வர் நடுநாட்டில் தோற்றம் பெற்றவர்களே.

சைவசமய அருளாளர்கள் நால்வரில் இருவரைத் தன்னகத்தே கொண்டது நடுநாடு என்ற வகையில் நம்பியாரூரருடன் அறந்தரு நாவுக்கரசும் நடுநாட்டில் தோற்றம் பெற்றவரே. திருஞானசம்பந்தருடன் இசைவேந்தராக விளங்கிய திருநீலகண்ட யாழ்ப்பாணரும், கலிக்கம்ப நாயனாரும், மெய்ப்பொருள் நாயனாரும் நடுநாட்டைச் சேர்ந்தவர்களே.

நடுநாடு என்பதற்குத் திருமுனைப்பாடி நாடு என்ற பெயரும் உண்டு. ஆயினும், நடுநாடு என்ற பெயர்க்காரணம் தத்துவ நோக்கில் பின்னர் அமைக்கப்பெறும்.

திருமுனைப்பாடி நாட்டின் தலைநகராகிய திருநாவலூரில், முப்போதும் திருமேனி தீண்டிப் பூசையும் வழிவழி அடிமையும் செய்யும் ஆதிசைவ அந்தணாளர் சடையனார்க்கும் அவர்தம் ஏதமில் கற்பின் மிக்க மனைவியார் இசைஞானியார்க்கும் தீதகன்று உலகமுய்யத் திருவவதாரம் செய்த குழந்தைக்கு 'நம்பியாரூரர்' என்ற பெயரை அமைத்தார்கள்.

நம்பியாரூரர் தெருவில் தேர் உருட்டி விளையாடிய இளமைக் காலத்தே அந்நாட்டில் குறுநில மன்னராக வாழ்ந்த நரசிங்க முனையரையர், அக்குழந்தையின் அழகில் ஈடுபட்டு, பெற்றோர்களிடம் நண்பின் மிகுதியாற் பேசி,

வேண்டிப்பெற்ற அக்குழந்தையை அரசிளங்குமரராக்கி, அரண்மனையிலே தங்க வைத்து வளர்த்து வருவாராயினர்.

நம்பியாரூரரின் தாய் வழிப்பாட்டனாரும் தந்தை வழிப் பாட்டனாரும் திருவாரூரைத் தாயகமாகக் கொண்டவர்கள் ஆதலின், 'ஆரூரன்' என்ற பெயர் குழந்தைக்கு இடப் பெற்றதாயிற்று. நம்பியாரூரரின் தாயார் இசைஞானியார் திருவாரூரில் ஞானசிவாசாரியாரின் மகள் என்பது கல்வெட் டுச் செய்தி. நம்பியாரூரரின் தந்தையாகிய சடையனாரின் தந்தையும் ஆரூரர் என்ற பெயருடையவரே என்பது ஓலை காட்டி ஆட்கொள்ள வந்த காலத்தில், காட்டப்பெற்ற ஓலையின் மூலம் உறுதியாகிறது.

ஆரூர்த் தொடர்பு காரணமாக 'ஆரூரன்' என்பதும் ஆடவர்களுள் சிறந்தார் என்பதைச் சுட்டும் வகையில் 'நம்பி' என்பதும் அமைய, இரண்டன் இணைப்பாக 'நம்பி யாரூரர்' என்ற பெயர் அக்குழந்தைக்கு இடப் பெறுகிறது.

வேறொரு சிறப்பையும் இங்கே காணுதல் வேண்டும். திருக்கயிலையில் **சுந்தரர்** என்பதே அவருடைய பெயர். அப்பெயர் இங்கே இயற்பெயராக அமையவில்லை என்றா லும், நரசிங்க முனையரையர் விரும்பி வந்து ஏற்று, இளவர சாக அமைக்கும் அளவுக்கு அழகுடையதாக அக்குழந்தை இருந்தது என்று கொள்வது திருக்கயிலைப் பெயரை நினைவு கொள்வதாக அமையலாம். நம்பியாரூரர் நரசிங்க முனையரையரால் வளர்க்கப் பெற்ற செய்தியை,

> ''நாதனுக்கூர் நமக்கு ஊர் நரசிங்க முனையரையன்
> ஆதரித்து ஈசனுக்கு ஆட்செயும் ஊர் அணிநாவலூர் என்று
> ஓத நற்றக்க வன் தொண்டன் ஆரூரன்'' (7—17—11)

என்று அவரே எடுத்துக் கூறும் வாக்கின் மூலம் தெளிய உணரலாம்.

## இருவகைத் திரு

நம்பியாரூரர் நரசிங்க முனையரையரின் அன்புமகவாக அமைந்தமையால் மன்னவர் திருவும் வைதிகத் திருவும் இணைய நின்று பொலிவு அமைக்கும் வகையில் நம்பியா ரூரர் இருவகைத் திருவும் பொங்க விளங்கினார்.

முந்நூல் அணிந்து, மறை ஓதி, அளவில் கலைகள் ஆர்ந்து மன்னு புலவன் வயல் நாவலர் கோன் என்ன

விளங்கினார். இளவரசராக இருந்து அரசுசார் கலைகள் பலவும் கற்று விளங்கினார்.

> ''வேந்தராய் உலகாண்டு அறம்புரிந்து
> வீற்றிருந்த இவ்வுடல்'' (7—64—6)

என்றும்,

> ''ஞாலந்தான் பரவப் படுகின்ற
> நான்மறை அங்கம் ஓதிய நாவன்
> சீலந்தான் பெரிதும் மிகவல்ல
> சிறுவன்'' (7—54—10)

என்றும், நம்பியாரூரர் வாக்குக்களாக வருவன கொண்டு உணரலாம். நம்பியாரூரர் வாழ்வியல் நிகழ்வுகளில் 'இருமை' என்ற கருத்தமைவு எல்லா இடங்களிலும் பங்குகொண்டு, உயிரோட்டப் பின்னணி ஒன்றை அமைத்து வருவதை இந்த இடம் தொடங்கி, இறுதிவரையில் தெளிவாகக் காண லாம்.

நம்பியாரூரர் மணப்பருவம் எய்துகிறார். திருநாவலூரை அடுத்த 'புத்தூர்' என்ற ஊரில் சடங்கவி சிவாசாரியார் மகளாரை மணம் பேச முற்பட்டார்கள். இசைவு பெறப் பெற்றது. நாவலூரர் திருமணம் மணப்பெண் ஊராகிய புத்தூரில் நடப்பதாக அமைந்தது.

மணநாளன்று மங்கல அணி, ஆடை முதலியவைகளை அணிகிறார். அங்கேயும் இருவகைத் திருவுக்கும் இயையவே அலங்காரம் அமைகிறது. எல்லா அணிகளையும் பிறர் அணிவிக்க அணியும் நம்பியாரூரர் 'திருநீறு' மட்டும் தாமே அணிந்து கொள்கிறார். இதுவும் இவர்தம் கயிலை வாழ்வை நமக்கு நினைவூட்டுகிறது. இறைவனுக்குத் திருநீற்றுத் தொண்டு செய்தவராதலின், இங்கே, திருநீற்றைத் தாமே தகும்முறையில் அணிந்து கொள்கிறார். அரச மரபை உடன் கொண்ட நிலையில் குதிரைமேல் ஏறி மண உலாக் கொள்கிறார். புத்தூரை அடைந்து, மணவிழா மாளிகை முன்னர்க் குதிரையிலிருந்து இறங்கி, மணமேடையில் அமர்ந்தார்.

### மண வோலையும் ஆளோலையும்

திருமண ஓலையின் வண்ணம் மணம் செய்துகொள்ள வந்தவர் ஆளோலையைப் பின்பற்றிச் செயற்படவேண்

டியவராக அமைந்தார் நம்பியாரூரர். இங்கேயும் ஓலை இரண்டாக அமைந்தது.

தளர்நடையோடு திருமணப் பந்தரை அடைந்த கிழ வேதியர் நம்பியாரூரரை அணுகி, எனக்கும் உனக்கும் ஒரு பெரு வழக்கு உள்ளது. அதனைத் தீர்த்த பின்னரே நீ திருமணம் செய்து கொள்ளவேண்டும் என்றார். "என்பால் உனக்கு வழக்கு இருக்குமாயின் அதனைத் தீர்த்தன்றித் திருமணம் செய்யேன்; கூறுக" என்றார் நம்பியாரூரர்.

"வேதியர்களே! என் வழக்கு இதுவே; நாவலூரரனாகிய இவன் எனக்கு வழி வழி அடியனாவன்" என்றார் கிழவேதியர்.

இதைக் கேட்டதும் சபையிலிருந்த அனைவரும் திகைப்படைந்தனர். இவன் வார்த்தை நன்று, நன்று என நகைத்து ஏளனம் செய்தார் நம்பியாரூரர்.

"ஏடா! அக்காலம் உன்பாட்டன் எழுதிக் கொடுத்த அடிமை ஓலை என் கையில் இருக்கிறது; இக்காரியத்தை நீ இகழ்ந்து சிரிப்பது ஏன்?" என்று குரலெழுப்பினார் முதியோர்.

"அந்தணர் வேறோர் அந்தணர்க்கு அடிமையாதல் என்பது இவ்வுலகில் எங்கும் கேட்டதில்லை; பிழையான, உலகிலேயே இல்லாத புதிய வழக்கைக் கொண்டு வந்த நீ **பித்தனோ"** என்றார் நம்பியாரூரர்.

"பித்தனாக இருந்தால் என்ன; பேயனாக இருந்தால் என்ன ? எத்தனை முறை இகழ்ந்துரைத்தாலும் அதற்காக நான் நாணமுறேன். நீ என்னை அறிந்துகொள்ளவில்லை. **வித்தகம் பேச வேண்டாம்;** பணி செய்ய வேண்டும்" என்றான் வந்த முதியவன்.

ஆளோலை உண்டு என்று சொன்ன காரணத்தால், அதன் உண்மையைத்தான் அறிவோமே என்ற கருத்தில், நம்பியாரூரர் "ஓலையைக் காட்டுக" என்றார். அதற்கு வேதியர்,

"ஓலையைக் காண்பதற்கு உனக்கு என்ன தகுதி இருக்கிறது? அடிமைத் தொழில் செய்வதற்கே உரிமை உடையவன் நீ" என்று மறையவர் கூறியதும் நம்பியாரூரருக்குச் சினம் மூண்டது. விரைந்து வேதியர் கையிலுள்ள ஓலையைப் பறிக்கச் சென்றார். முதியவர் ஓடினார். பின் தொடர்ந்தார் நம்பியாரூரர். அம்மறையவர் கையிலுள்ள ஓலையைப் பற்றி "**அந்தணர்கள் வேறோர் அந்தணர்க்கு அடிமையாதல் என்ன முறை**" என்று சொல்லிக் கொண்டே அந்த ஓலையைக் கிழித்தெறிந்தார்.

ஓலையைப் பறிகொடுத்த முதியவர் 'இது முறையோ' எனக் கூவி அழுதார். அங்கிருந்தவர்கள் இருவரையும் விலக்கி நிறுத்தி,

"உலகில் எங்கும் இல்லாத வழக்கினைக் கொண்டு வந்து, அனைவர் கருத்துடனும் மாறு கொண்டு நிற்கும் மறையவரே உம் ஊர் எது?" என்று கேட்டார்கள். "யான் வாழும் ஊர் நெடுந்தூரத்தில் இருப்பதன்று; அண்மையிலுள்ள திருவெண்ணெய் நல்லூரே" என்று கூறிய மறையவர், "என் கையிலுள்ள ஓலையைப் பிடுங்கிக் கிழித்தெறிந்து விட்டமையால், இந்த நம்பியாரூரன் எனக்கு அடிமை என்பதைத்தானே உறுதிப்படுத்திவிட்டான்" என்றார், "**இவன் பழைய மன்றாடி போலும்**" என்றது நம்பியாரூரரின் மறுமொழி. இதுவும் இருமையில் நின்று வரலாற்றுக்குத் துணைபுரிகிறது.

புத்தூருக்கும் இருமை. மணம் வந்த புத்தூர் மணம் தவிர்ந்த புத்தூராயிற்று.

மணப் பெண்ணுக்கும் இருமை. இம்மையில் மணத்தால் நம்பியாரூரரின் கரம் பற்றி இன்ப வாழ்வு பெற வந்த மணப்பெண் அதே நம்பியாரூரரின் ஒலி உருவாம் திருநாமமே துணையாக, அம்மையிற் பெறலாகும் சிவலோக இன்பவாழ்வைப் பெற்றாள்.

> "அயல் ஓர் தவம் முயல்வார் பிறர் அன்றே மணம் அழியும்
> செயலால் நிகழ் புத்தூர் வரு சிவ வேதியன் மகளும்
> உயர் நாவலர் தனிநாதனை ஒழியாது உணர் வழியில்
> பெயராது உயர் சிவலோகமும் எளிதாம் வகை பெற்றாள்"

என்பது (பெரியபுராணம் 223) சேக்கிழார் வாக்கு.

**நாவலூர்-புத்தூர்-நல்லூர்**

நாவலூர், புத்தூர் பின்னர் நல்லூர் ஆகிறது. நாவலூரர் புத்தூர் மணத்துக்கு வந்தார். புத்தூரிலிருந்து திருவெண்ணெய் நல்லூருக்குச் செல்கிறார். மன்றல் (மணம்) ஆடவந்தவர் பழைய மன்றாடிபோலும் என்ற நினைவுடன் பின் தொடர்கிறார். பயணம் ஒன்றே; தொடக்கம் நாவலூர், இறுதி நல்லூர்; திருமணத்தை முடித்ததும் அருள் மணத்தைத் தொடர வைத்ததும் ஆகிய பெருமை புத்தூருக்கு உண்டு. திருமணத் தொடக்கம் அருள்மணத்தை அடைந்து நிறைவுறுகிறது.

திருவெண்ணெய் நல்லூர் அவையினர் முன்பாக வேதியர் கொண்டுவந்த வழக்கைச் சாரச் சொன்னார். "திருநாவலூரனாகிய இவன் எனக்கு அடியான்; அதைக் குறிப்பிட்டிருந்த ஓலையை வலிந்து பிடுங்கிக் கிழித்தெறிந்துவிட்டு, மூதறிஞர்களாகிய உங்கட்குமுன் வந்தான்; இதுவே என் முறைப்பாடு" என்றான்.

"மறையவர் அடிமை ஆதல் இந்த மாநிலத்தில் இல்லை என் சொன்னாய் ஐயா?" என்று அவையோர் கூற, அது வந்த முறை 'இசைவு' காரணம். இவன் தந்தையின் தந்தை **நேர்ந்தது**. எனக்கு எழுதிக் கொடுத்த ஓலையைத் தான் இவன் கிழித்தான்" என்று முதியோர் கூறினார்.

அவையோர் நம்பியாரூரரைப் பார்த்து, இசைவினால் வந்த ஓலையை விசையினால் பற்றிக் கிழித்தால் வெற்றி எய்துமா? என்று கேட்டு, உம் கருத்து என்ன? எனக் கேட்டனர்.

"அனைத்துநூல் உணர்ந்தீர்! ஆதிசைவன் என்றறிவீர் என்னைத்
தனக்கு வேறு அடிமை என்று இவ்வந்தணன் சாதித்தானேல்
மனத்தினால் உணர்தற் கெட்டா மாயை என் சொல்லுகேன் யான்
எனக்கிது தெளிய ஒண்ணாது"

என்று (பெரியபுராணம் 200) நம்பியாரூரர் கூறினார். பின்னர் அவையோர் வழக்கை நிறுவுவதற்குரிய மூலஓலை உண்டெனக் கூறியதால், அதை வாங்கிப் படிக்கச் சொல்ல, கரணத்தான் படித்ததில்,

"அருமறை நாவல் ஆதிசைவன் ஆரூரன் செய்கை
பெருமுனி வெண்ணெய் நல்லூர்ப் பித்தனுக்கு யானும் என்

வருமுறை மரபுளோரும் வழித்தொண்டு செய்தற்கு ஓலை
இருமையால் எழுதி நேர்ந்தேன் இதற்கிவை என் எழுத்து"

என்பதே அந்த ஓலையில் கண்டிருந்த வாசகம். பிறகு எழுத்து, மேல் கையெழுத்திட்டார்களின் கையெழுத்து ஆகிய அனைத்தும் ஒத்து இருக்கின்றனவா என்ற பரிசோதனைகளும் மறைமுதியவனுக்குச் சாதகமாகவே அமைந்து விடுகின்றன.

"நான்மறை முனிவனார்க்கு நம்பியாரூரர் தோற்றீர்
பான்மையில் ஏவல் செய்தல் கடன்"

என்பது (பெரியபுராணம் 209) அவையோர் தீர்ப்புரை.

"விதிமுறை இதுவேயாகில்,
யானிதற்கு இசையேன் என்ன இசையுமோ!"

என்பது நம்பியாரூரரின் (பெரியபுராணம் 209). ஏற்புரை.

பின்னர் அவையோர், மறையவரை நோக்கி, "உம்முடைய ஆவணத்தில் உம்முடைய பதி இதுவே என்று கூறப் பெற்றுள்ளது. அப்படியாயின், இவ்வூரில் வருமுறை **மனையும், நீடு வாழ்க்கையும்** காட்டுக" என்று கூற, **"என்னை ஒருவரும் அறியீராகில் போதும்"** என்று வழக்கில் வென்ற புண்ணிய முனிவர் புறப்பட்டுச் செல்ல, அனைவரும் பின் தொடர்ந்தனர்.

மறைமுனியைப் பின் தொடர்ந்தார் நம்பியாரூரர். அவர் திருவெண்ணெய் நல்லூர்க் கோயிலாகிய திருவருட்டுறையில் புக்கார். உடனே யாவர் கண்களுக்கும் காணாதவரானார். தொடர்ந்து சென்ற நம்பியாரூரர் இவர் கோயிலில் புகுந்தது ஏன்? என்ற ஐயத்துடன் திருக்கோயிலின் உட்சென்றார், காணாமையின் திகைத்தார். பின்னர் அவரைக் கூவி அழைத்தார். அவ்வளவில், இடபத்தின் மேல் உமையொடும் பெருமான் தோற்றம் பெற்று,

"நீ முன்பே நமக்குத் தொண்டன்; பிற ஒன்றன்மேல் முன்னிய விருப்புக் காரணமாக, நம் ஏவலால் மண்ணின் மீது பிறந்தாய், துன்புறு வாழ்வு நின்னைத் தொடர்வதை அறுப்பதற்காக, நாம் தொடர்ந்து வந்து, மறையோர் முன்னர் **தடுத்தாண்டோம்"** என்றான். கேட்ட நம்பியாரூரர்,

"மன்றுளீர் செயலோ வந்து வலிய ஆட்கொண்டது" என்றார். அப்போது, ஓலை காட்டி ஆண்டவர்,

"நீ வன்மை பேசி வன் தொண்டன் என்னும் நாமம் பெற்றனை; நமக்கும் அன்பில் பெருகிய சிறப்பில் மிக்க அர்ச்சனை பாட்டே ஆகும்; ஆதலால், மண்மேல் நம்மைச் சொற்றமிழ் பாடுக" என்றார்.

ஐந்தெழுத்தும் பாடிய பொருளாக உள்ளவன் "பாடு வாய் நம்மை" என்று கூறக் கேட்ட நம்பியாரூரர் **மன்றுள் ஆடிய செய்ய திருவடியை நினைத்து,**

"வேதியன் ஆகி என்னை வழக்கினால் வெல்ல வந்த
ஊதியம் அறியாதேனுக்கு உணர்வு தந்து உய்யக்கொண்ட
கோதிலா அமுதே! இன்றுன்குணப் பெருங் கடலை நாயேன்
யாதினை அறிந்து என் சொல்லிப் பாடுகேன்"

என்று (பெரிய புராணம் 218) கூ.ற,

"முன்பு எனைப் பித்தன் என்றே மொழிந்தனை ஆதலாலே
என் பெயர் பித்தன் என்றே பாடுவாய்"

என்று (பெரிய புராணம் 219) இறைவன் கூறவே,

"பித்தா பிறைசூடி" என்று தொடங்கும் பதிகத்தைப் பாடி முடிக்கிறார் நம்பியாரூரர். இறைவனும்,

"இன்னும் பல்லாறு உலகினில் நம்புகழ் பாடு"

என்று (பெரிய புராணம் 222) அருள் செய்து மறைந்து விடுகிறான்.

**அருட்டுறைப் பொலிவு** என்பது நான்கு பிரிவுகளைக் கொண்டது. (1) அருட்டுறைக் கோயிலிற் பெற்றது. (2) திருத்துறையில் தவநெறிபெற்றது. (3) அறத்துறையாம் அதிகைப்பதியைச் சார்ந்த வடபக்கத்துச் சித்தவடமடத் துறையிற் பெற்றது. (4) தில்லை அம்பலத் துறையிற் பெற்றது என்ற நான்கு பிரிவுகளில் முதற்பிரிவுக்குரிய நிகழ்வுகள் இத்துடன் நிறைவுறுகின்றன.

ஏனைய முப்பிரிவுகளும் இத்துணை விரிவு இல்லா தவை.

**திருத்துறையும் தவநெறியும்**

திருவெண்ணெய் நல்லூர் நிகழ்வுக்குப்பின் திருநாவலூர் செல்கிறார். அங்கே நாவலூர் இறைவனைப் புகழ்ந்து பதிகம் பாடுகிறார். (பதிகம் கிடைக்கவில்லை)

பின்னர், **திருத்துறையூர்** சென்று இறைவனை வணங்கிப் பதிகம் பாடுகிறார். அப்பதிகப் பாடல்கள் முழுவதிலும் **"உனை வேண்டிக் கொள்வேன் தவ நெறியே"** என்று பாடுகிறார்.

**அடியும் முடியும்**

திருத்துறையூர் இறைவர்பால் தவநெறி வேண்டிப் பெற்ற நம்பியாரூரர் தில்லையை நோக்கிய தம் பயணத்தின் இடையே திருவதிகையை அடைகிறார்.

**"அப்பரடிகள் உழவாரத் திண்படை கையிலேந்தித் திருத்தொண்டு புரிந்த பெரும்பதியாகிய திருவதிகையை மிதித்து உள் புகமாட்டேன்"** என நினைந்து, திருவதிகைக்குள் செல்லாமல், புறத்தே உள்ள **சித்த** வடமடம் என்ற பொதுமடத்தில், அதிகை வீரட்டானேசுரர் அடிகளைச் சிந்தித்து, அம்மடத்துத் திண்ணையில் துயில் கொண்டார். அப்போது, அங்கே, முன்னமேயே துயில் கொள்பவராகிய வயது முதிர்ந்த மறையவர் ஒருவர் நம்பியாரூரர் முடிமேல் படுமாறு தம்முடைய திருவடிகளை நீட்டிக் கொண்டு துயின்றார். விழித்துக்கொண்ட நம்பியாரூரர், "பெரியவரே! உன்னடி என் சென்னிமேல் வைத்தனையே!" என்று கூற, "திசை தெரியாமை என்னுடைய முதுமையால்" என்றார். பின்னர், நம்பியாரூரர் வேறுபக்கம் தலை வைத்துப் படுத்தார். சற்று நேரம் சென்றதும், அங்கும் திருவடியை நீட்டினார், நம்பியாரூரர் எழுந்து "இங்கு, என்னைப் பலகாலும் மிதித்தனை நீ யார்?" என்றுகேட்க, "நீ அறிந்திலையோ" எனக் கூறி மறைந்து விட்டார்.

தலைமேல் திருவடியை வைத்த முதியவர் இறைவனே என்றுணர்ந்த நம்பியாரூரர் **"தம்மானை அறியாத சாதியார் உளரே"** எடுத்த வரியையுடைய பதிகம் பாடித் துதித்தார்.

திருவதிகை இறைவரால் திருவடி சூட்டப் பெற்ற நம்பியாரூரர் திருமாணிகுழி, திருத்தினைநகர் முதலிய தலங்களை வணங்கிச் சென்று தில்லையை அடைந்தார்.

### திருக்களிற்றுப்படிப் பேறு

நம்பியாரூரர் தில்லையின் வடதிசை வழியாக வந்து, திருவளர் ஒளிதிகழ் ஞான அம்பலத்தின் முன் உள்ள அணுக்கன் திருவாயிலை அடைந்தார். மன்றுளே திருக் கூத்தியற்றும் அம்பலவன் திருவடியைக் கண்டு, தலை மீது குவித்த கையினராய்த் **திருக்களிற்றுப்படி**யின் பக்கம் நின்று வீழ்ந்து வணங்கினார்.

தில்லைத் திருக்கூத்து அனுபவம் நம்பியாரூரருக்கு ஒருவகைப் புதுமையும் செழுமையும் கலந்த பேரின்பமாக அனுபவப்பட்டது. அவ்வளவில்,

"தேய்ந்து இறக்கும் இடர்நிலை எய்திய பிறைமதியும் தெளிவு பெற்றுக் குறைவிலா ஒளியுடன் வளர்வதற்கு இடமாகிய செஞ்சடையை உடைய பெருமானே! நின் அருட் கூத்தைக் கண்டு கும்பிடும் இப்பேறு பெற்றமை யால், மண்ணுலகில் வந்த இம் மனிதப் பிறவியே அடியேற்குத் தூய்மையான பேரின்பத்தை நல்குவதா யிற்று."

என்று புகழ்ந்து பதிகம் பாடி வணங்குவாராயினர். முதன் முதலில் தில்லைப் பெருமானை வணங்கியபோது நம்பியா ரூரர் அருளிய பதிகம் ஏதும் கிடைக்கவில்லை.

இறைவனின் திருவடியே திருவருள் என்ற வகையில் அருட்டுறை புகுந்த நம்பியாரூரர் தவப்பேறும், திருவடி சூட்டுப்பேறும், திருக்கூத்துத் திருவடி அனுபவப்பேறும் என்ற நான்கையும் திருவருளாகவே அனுபவித்தார் ஆதலின், நம்பியாரூரர் வரலாற்றில் நிகழ்ந்த இந்த நான்கு நிகழ்வுகளும் **அருட்டுறைப் பொலிவு** என்ற ஒரு அடிப் படைத் தலைப்பிலேயே அமைக்கப்பெற்றன. அருட் டுறைப் பொலிவில் அமைந்த நாற்பிரிவுகளையும் ஒன்றன் பின் ஒன்றாக நிறுத்தி ஆய்வதே அடுத்த பணி.

### நடுநாடும் நாவலூரும்

சேக்கிழார் அமைத்துக் கொடுத்த வழியில் சென்று வரலாற்றை அமைத்துக் கொண்டாலும், சில அடிப்படை நிகழ்வுகளிலும் விளக்கங்களிலும் நமக்குத் தெளிவு தோன்றாத நிலையே அமைகிறது. தெளிவு பெறாமைக்குத்

திருவருள் இல்லை என்பதைப் பொதுக் காரணமாக அமைத்துக் காட்டுவது மரபு. சான்றோர் சிலரின் விளக்கங்கள் திசைமாறிச் சென்றுவிட்டோம் என்பதை வெளிப்படத்தெரிவிப்பனவாக அமைதலின், இங்கே குறிப்பிடப் பெற்ற வரலாற்று நிகழ்வுகளை ஆய்வு செய்தல் கடமையாகின்றது.

நம்பியாரூரர் இந்நிலவுலகில் வந்து தோன்றிய இடம் நாவலூர். அது திருமுனைப்பாடி மேலூர் நாட்டுத் திரு நாவலூர் என்றே கல்வெட்டுகளிற் குறிக்கப்பெறுகின்றது. திருமுனைப்பாடி நாட்டுக்கு நடுநாடு என்ற பெயரும் காணப் பெறுகிறது. திருமுறைகளில் உள்ள தலங்களைக் குறிப்பிடும்போது சோழநாட்டுத் தலங்கள், பாண்டிய நாட்டுத் தலங்கள் என்று குறிப்பிடும் வகையில் நடுநாட்டுத் தலங்கள் என்றே குறிப்பிடும் வழக்கு உள்ளது. திருமுனைப் பாடி நாட்டுத் தலங்கள் என்ற வழக்கியல் யாண்டும் சுட்டப்பெறவில்லை.

இங்கே, **நடு நாடு** என்று குறிக்கப்பெறுவது சோழ நாட்டுக்கு வடக்கே, தொண்டை நாட்டுக்குத் தெற்கே மலைநாட்டுக்குக் கிழக்கே உள்ளதாக, இன்றுள்ள தென்னார்க்காடு வடார்க்காடு மாவட்டங்களை இணைத்து நின்ற நிலப்பகுதி. நடுநாடு என்ற பெயர் பெரிதும் சமய நூல்களில் பயின்று வந்த பெயராகவே அறியப் பெறுகிறது.

நடுநாட்டில் தோற்றம் கொண்ட நாயன்மார்கள் பெரிதும் நாவலர்களாகவே இருப்பது குறிப்பிடத்தக்க ஒன்று. திருநாவுக்கரசரும் நம்பியாரூரரும் நாவலர்களே. நடுநாட்டுத் தலங்களில் வாழ்ந்த காரணத்தாற் போலும் இறைவனும் கூட நாவலனாக அமைந்து விடுகிறான். பாண்டிநாட்டு மதுரையில் அவன் பாவலனாக, சங்கத் தமிழ்க் கவிஞனாக விளங்கியமை போலவே, நடுநாட்டில் அவன் நாவலனாக, வாயாடியாக, வல் வழக்காடியாக, பொருவரும் வழக்கில் வென்ற புண்ணியனாகப் போற்றப் பெறுகின்றான்.

திருநாவலூர்த் திருக்கோயிலின் பெயர் **திருத்தொண்டீச்சரம். அகத்தீச்சுரம்** என்ற பெயரும் காணப்பெறுகிறது. இந்த இரண்டு பெயர்களும் கல்வெட்டு வழக்குக்களே. அவ்வாறு அமைந்த கோயிற் பெயர் இப்போது வழக்கில்

இல்லை. திருநாவலூர்த் திருக்கோயில் இறைவன் பெயர் நாவலேசுவரர், நாவலநாதர் என்பன. இவை, திருநாவ லூர்த் தலவிருட்சம் நாவல்மரம் ஆனமையின், அதன் அடிப் படையில் அமைந்த பெயர்களே. இறைவியின் பெயர் சுந்தராம்பிகை.

முன்பு 'இருமை நிலை' என்ற சிறுதலைப்பில் குறிப் பிட்டமை போல, இருமைநிலைகளை எடுத்துக்காட்டி, அவை ஒன்றுடன் ஒன்று முரணும் நிலை உண்டாவதை வரலாற்றுப் படுத்தி விளக்கி, முடிவில், இந்த இருமைகளை இணைத்த 'நடு' என்ற ஒன்று தோன்றும் என்று அளவை யியல் முறையில் வரலாற்று நிகழ்வுகளை விளக்கிக்காட்டும் பணியை மேற்கொண்டவர்கள் தாம் இந்நிலப்பகுதியை 'நடுநாடு' என்று அமைத்து விளக்கியிருக்கவேண்டும். வரலாற்றுப் படுத்தப்பட்ட வாழ்வை எடுத்து நோக்கினால், இருமை வாழ்வை அமைத்த நிலையில் சிக்கல் எழ, இருமை வாழ்வை இணைத்த நடுநிலையே அச்சிக்கலின் தீர்திறனாக அமைதல் என்ற ஒருவகைப் பின்னணியானது, இடம் காரணமாக விளையும் தாக்கம் என்பதை அறிந்த சான் றோர்கள் அப்பகுதியை '**நடுநாடு**' என வழங்கியிருத்தல் வேண்டும்.

முரண்பட்ட இருநிலைகளை இணைப்பது, இரண்டும் அல்லாத, ஆனால் இரண்டையும் அழித்துவிடாமல் இணைத்துக் கடந்ததாக, இரண்டிற்கும் மேலே நடுநின்றது என்ற வகையில் அக்கொள்கையை 'நடு' என்று கூறுவது வழக்கு. இது பின்னர் விரிவாக்கப்பெறும். கேடும் ஆக்க மும் இருவேறு நிலைகள். கேடும் ஆக்கமும் கெட்ட திரு என்பதே இங்கே அழைக்கப்பெறும் 'நடு' என்பதை ஒத்தது. திருவருளின் நேர் விளக்கத் தலம் என்பதால் 'நடுநாடு' எனக் குறிக்கப் பெற்றதாதல் வேண்டும்.

நாவலூரர் வழக்கு நல்லூரில், வெண்ணெய் நல்லூரில் நீதிப்படுத்தப்பெற்று, அவ்வூர் 'அருள் துறை' என்ற திருக்கோயிலில் புகுந்துவிடுகிறார். நாவலூரில் பிறந்த வர் ஆரூருக்கு வழியடிமை ஆகிவிடுகிறார். ஆதிசைவ ராகப் பிறந்தவர் அரசராக வளர்கிறார். இவ்வாறு இருமை நிலைகளின் மோதலில், ஒருவகை நடுநிலை தோன்றி முடிக்கும் என்பதை அந்த நிலத்துக்குரிய பண்பு

என்பதாக அமைத்து அதை 'நடுநாடு' என்று வழங்கி னார்கள் என்று கொள்ளவேண்டும்.

நம்பியாரூரரின் பெற்றோர் சடையனார் இசை ஞானியார். சடையானது இறைவனின் அருளைக் குறிக் கும். இங்கே அறத்தின் அறிகுறியாக அமைகிறது. ஞானத்தின் அறிகுறியாக அமைகிறார் இசைஞானியார். அறமும் ஞானமும் இருவேறு நிலைக் கருவிகளாக அமைய, முத்தியானது கர்மாவினாலா ஞானத்தினாலா என்ற வினா வின் தோற்றம் அமைய, அவற்றினால் எழும் சிக்கல்கள் நம்பியாரூரரின் வாழ்வில் பற்பல இடையூறுகளை அமைக் கின்றன. முடிவு நிலையில் அருளாற்றல் தோற்றம்பெற்று, இரண்டையும் இணைத்து, ஆனால், இரண்டையும் கடந்த நடு என அமைந்து, நம்பியாரூரர் வாழ்வை அருள்நிலைப் படுத்திவிடுகிறது. அதனாலேயே, அவர் வெண்ணெய் நல்லூர் 'அருட்டுறை'யில் புகவேண்டியவராகிறார். அது அவருக்கு நிலச்சார்பாலும், பெற்றோர்கள் சார்பாலும் அமைந்த அருளனுபவநிலை.

நடுநாடு என்பது போலவே திருமுனைப்பாடி நாடு என்ற பெயரும் தத்துவ நோக்கில் இயைந்த பொருத்த முடைய பெயரே. முனைப்பை அழிப்பது அந்த நாட்டின் இயல்பு. தன் முனைப்பை–ஆணவத்தை அழிப்பதற்கு அந்த நாடு துணை நின்று அழிக்கும் என்பதால் திரு–முனைப்பு–ஆடி எனப் பெயர் பெறுகிறது.முனைப்பை– தன் முனைப்பை–ஆணவத்தை அழிப்பதற்குப் பெருந் துணை புரிவது, 'தொண்டு' என்பதுதான்.

> "திருநாவுக்கரசு வளர் திருத்தொண்டின் நெறிவாழ
> வரு ஞானத் தவமுனிவர் வாகீசர்"

என்று சேக்கிழார் கூறுமாறு, தொண்டில் நின்று, தான் சிறந்ததேயன்றி, தொண்டு நெறியைச் சிறப்பித்தும் வளர்த் தும் நின்ற அப்பரடிகள் தொண்டின் நிலை தர வந்தமை போலவே, அதே நடுநாட்டில், அதே திருமுனைப்பாடி நாட்டில், திருநாவலூரில் தோற்றம் கொள்கிறார் நம்பியா ரூரர். அவரே திருத்தொண்டின் நிலைதர வரும் திருத் தொண்டத் தொகை அருள உள்ளார் என்பதையும் இணைத்துக் காண்பதற்குத் துணை செய்வது திருநாவ

லூரில் உள்ள திருக்கோயிலின் பெயர் **திருத்தொண்டீச்சுரம்.**

அங்கணர் ஓலை காட்டி ஆட்கொண்டவுடன் நம்பியாரூரர் திருநாவலூர் வருகிறார். அப்போது இறைவன் மேல் பதிகம் பாடுவதாகச் சேக்கிழார் குறிப்பிடுகிறார். அப்பதிகம் நமக்கும் கிடைக்கவில்லை. பின்னர், இவர் தொண்டை நாட்டுத் தலயாத்திரை மேற்கொண்டபோது, திருநாவலூர் வருகிறார். அடியவர்களெல்லாம் திரண்டு நின்று வரவேற்று நிற்க, தான் பிறந்தருளிய பதியை அடைந்ததும் முன்னர் தம்மை ஆட்கொண்ட அருள் நிகழ்வுகள் நினைவுவர, அப்போது அருளிய பதிகம் நம்முடைய நல்லூழ் காரணமாகக் கிடைத்துள்ளது. திருத்தொண்டத்தொகை பாடிய பிறகு, பல்வேறு திருவருள் நிகழ்வுகள் வரலாற்றடிப்படையில் தோன்றித் திருவருள் நிலையை உணர்த்திய பிறகு, திருநாவலூரில் அவர் நினைந்து பாடும் அப்பதிகத்தில் பல்வேறு குறிப்புக்களை அருளிச் செய்கின்றார்.

> ''நாதனுக்கூர் நமக்கூர் நரசிங்க முனையரையன்
> ஆதரித்து ஈசனுக்கு ஆட்செய்யுமூர் அணிநாவலூர் என்று
> ஓத நற்றக்க வன்தொண்டன் ஆரூரன்'' (7—17—11)

என்றும்,

> ''ஏவலனார் வெண்ணெய் நல்லூரில்
> வைத்து எனை ஆளுங் கொண்ட
> நாவலனார்'' (7—17—1)

என்றும் குறிப்பிட்டுக் காட்டிய நம்பியாரூரர் அப்பதிகம் முழுவதிலும் வெண்ணெய் நல்லூரில் தம்மை ஆட்கொண்ட நிகழ்வை எடுத்துக்கூறி விளக்குகின்றார்.

இறைவனின் பல்வேறு பெருமைகளைப் பேசி, இத்தகைய பெருமையுடையவன் இருக்குமிடம் திருநாவலூர் என்று கூறும் முறையில் அப்பதிகம் அமைந்திருந்தாலும் திருநாவலூரைப் பற்றிய சில சிறப்புச் செய்திகளையும் தெளிவாக அமைத்துள்ளார்.

திருநாவலூர்ப் பதிகத்து முதற்பாடலில் ஏவலன் என்று பாராட்டப்பெறும் இறைவனை **நாவலன்** என்றும் குறிப்பிடுகின்றார். இது இந்த இடம் காரணமாக அவனுக்கு அமையும் பெயர். இது இறைவனுக்கும் உரிய பெயர். அது

எனக்கும் உரிய பெயர். அதனால், அவன் என்னை இங்கே ஆளாகக் கொள்ளாமல் வெண்ணெய் நல்லூரில் வைத்து ஆளாகக் கொண்டான் என்று நயத்துடன் குறிப்பிடுகின்றார்.

அடுத்த திருப்பாட்டில், திருநாவலூரின் தனித்தன்மை பேசுகிறார். நாவலூரின் தனித்தன்மை நாவலன் ஆதல். நாவலன் ஆனமையால் சொல்வன்மைபற்றி அறிந்தவன். அது இந்த ஊருக்கே உரிய தனித்தன்மை.

சொல்லின் சுவையையும், பேச்சாற்றலை (சொல்வன்மை)யும் உணர்ந்தவன் ஆகையால் நான் வன்மை பேசிய போதும், புன்மை பேசிய போதும் சொற்களின் வன்மை, புன்மை காரணமாகச் செயற்படாமல் வன்மை பேசினும் புன்மை பேசினும் பேச்சுவன்மை, பேச்சுத்திறன் ஒன்றையே கருதி, வன்தொண்டன் என்ற வாழ்வையும் பொன்னைத் தந்து போக வாழ்வையும் அமைத்துக் கொடுத்தான் என்றார்.

திருநாவலூர்த் திருப்பதிகத்து ஏழாம் திருப்பாட்டில், திருநாவலூர் இறைவனை 'வேயவன்' என்று கூறினார். வேயவனாய் நின்றபோது தாயாகவும் தந்தையாகவும் நின்று, சாதல் பிறத்தல் என்ற இரண்டும் எனக்கு இல்லையாகச் செய்து, வெளியிலே சென்றுவிடாதவாறு தன்னுடைய திருவடியின் கண் என்னைப் பொருத்தமுற வைத்த நிலையில் **'வேயவன்'** என்று குறிப்பிட்டார்.

தாயவள் என்ற இசைஞானியாரை முதற்கண் நிறுத்தி, அதன்மூலம் தன்னை ஆட்கொண்டு அடிமைப்படுத்திய அருமையை, நாவலூரரன் (இறைவன்) தன்னை ஆரூராக்கி அமைத்த பெருமையை மிகவியந்து கூறுகிறார்.

> ''சூழ் ஒளி நீர் நிலம் தீத் தாழ் வளி ஆகாசம்
> வாழ் உயர் வெங்கதிரோன் வண்டமிழ் வல்லவர்கள்
> ஏழிசை ஏழ்நரம்பின் ஓசையை ஆரூர் புக்கு
> ஏழுல காளியை நான் என்றுகொல் எய்துவதே (7.83.6)

என்ற திருப்பாட்டில், நாவலூர் இறைவன் தன்னை மூங்கில் என நிறுத்தியவன் என்றார். என்னை ஏழுலகமாக்கி, அதனை ஆளும் ஏழுலகாளியானான். நீர், நிலம், தீ, வளி, வான், ஞாயிறு, தமிழ் வல்லோர் என்ற ஏழாக, இசை

ஏழாக, நரம்பு ஏழாக, ஓசை ஏழாக, இவ்வாறு எழுநிலமாக (வேய்) நின்ற என்னை ஏழுலகாளியாக அமைத்து ஆண்டவன் வேயவன் என்றுகூறி, அவன் பொன்னடியை விட்டுநான் பிரிந்துபோக இயலாமை போலவே அவனும் என்னைப் பற்றிப் பிரிந்து போகாதவனாக இருக்கிறான் என்பதைத் திருநாவலூர்ப் பதிகத்து 8-ஆம் திருப்பாட்டில் அமைத்துக்காட்டினார்.

> "**வாயாடி** மாமறை ஓதி ஓர்
> வேதியனாகி வந்து
> **தீயாடியார்** சினக் கேழலின்
> பின் சென்று ஓர் வேடுவனாய்
> **வேயாடியார்** வெண்ணெய் நல்லூரில்
> வைத்தெனை ஆளுங்கொண்ட
> **நாயாடி** யார்க்கிடம் ஆவது
> நந்திருநாவலூரே" (9—17—8)

என்ற திருப்பாட்டில் சினக் கேழலின் பின் சென்று ஓர் வேடுவனாய் வேயாடியார் என்ற பகுதியில் வரும் வேயாடி யார் என்பதற்கு மூங்கிலை இடமாகக் கொண்டவர் என் பதை மேலும் சற்றே விரித்துப் பொருள் கொள்ள வேண்டும். நம்பியாரூரரே திருவாழ்கொளிபுத்தூர்ப் பதிகத்து ஆறாந் திருப்பாட்டில்,

> " .. விசயற்கருள் செய்வான்
> செருவில் லேந்திஓர் கேழற்பின் சென்று
> செங்கண் வேடனாய் **என்னொடும் வந்து**
> மருவினான் தனை"

என்று, இதே நிகழ்ச்சியை எடுத்துக்காட்டி, வில்லேந்திப் பன்றியின் பின் சென்று வேடுவனாய் நின்றவன், பின்னர் என்னொடும் வந்து மருவினான் என்று குறிப்பிட்டதை நாவலூர்ப் பதிகத்தில் 'வேயாடியார்' என்று குறிப்பிட்டுள் ளார். இறைவன் நம்பியாரூரரின் உடலிற் புகுந்து, உயிரிற் கலந்து, உடம்பை ஏழிசை பேணும் இனிய மூங்கிலாக அமைத்து, நிலம் ஏழாக்கி, ஏழ்நிலத்து இசைக்கும் இசை யுலகம் ஏழாக இருந்த என்னைத் தன்னடிப் படுத்தி, ஏழுல காளியாக அமைந்தான் என்று குறிப்பிடுவதை இயைத்துக் காணவேண்டும். இக்கருத்தையே பின்னும்,

> "**திருத்தித் திருத்தி வந்தென் சிந்தை இடங்கொள் கயிலாயா**
> அருத்தித்து உன்னை அடைந்தார் வினைகள் அகல அருளாயே"
> (7—47—8)

என்று, தன்மனத்தை மெல்லத் திருத்திவந்து உள்புகு வதையும் எடுத்துக்காட்டி விளக்கினார்.

**வேயாடியார்** எனநின்ற இறைவன் **வாயாடி, தீயாடி, நாயாடி** எனவும் நின்றான் எனக்கூறி, இவ்வளவிலும் என்னை ஆட்கொண்டவன் திருநாவலூர்ப் பெம்மானே என விளக்குகின்றார்.

மேலே கூறப் பெற்ற மூன்றனுள் முதன் முதல்கொள்ள வேண்டுவது 'நாயாடி' என்பதே. நா+ஆடி என்பதனால் தலைமையை ஆள்பவன் என்ற பொருளில் என்னை அடிமை கொண்ட காரணத்தால் அவன் தலைவனாக அமைகிறான் என்று விளக்கம் கூறப் பெறுகிறது.

நாய்+ஆடியார் எனப் பிரித்து, ஆளாகக் கொண்ட என்னுடைய நாய்த்தன்மையை — இழிவுத் தன்மையை அழித்தார் என்று பொருள் கொள்வதும் உண்டு. அருளா ளர்கள் தம்மை நாயோடு இணைத்துக் கூறுவதும் நாயினும் கீழானவன் என்று கூறுவதும் நாம் காணக்கூடியவைகளே.

"நாயினேனை ஆளாக் கொண்டு"

என்றும்,

''நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்குத்
தாயிற் சிறந்த தயாவான தத்துவனே''

என்றும் வரும் சான்றுகளைக் காண்க. இங்கே பெரும் பொருளை, பெறுதற்கு அரியானைப் பேறாகப் பெற்றிருந் தும், அவனை அடைந்துய்யாமல் உலகத்துப் பொருள் களை — இழிந்த பொருள்களை விரும்பித் துய்க்க ஓடுதல் என்பதை நாய்க்குணம் எனக்கொண்டு அதனை நீக்கினார் என்ற பொருளில் 'நாயாடியார்' என்பதற்கு விளக்கம் காணுதல் ஒருவகை.

ந+ய+ ஆடியார் என்பதே **நாயாடியார்** என வழக்குப் படுத்தப் பெறுகின்றது. 'சிவயநம' என்பது திருவைந் தெழுத்து. இது முப்பொருள் உண்மையை எண்ணின் அடிப்படையில் விளக்குகின்றது. 'சிவ' என்பன பதியை யும், 'ய' பசுவையும், 'நம' என்பன பாசத்தையும் குறிப்பன. 'சிவயநம' என்பது 'ஓம்' என்ற பிரணவத்தின் விரிவே. அ, உ, ம, புள்ளி, இவற்றின் கூட்டொலி என்ற ஐந்தாக

'ஓம்' என்பது விரியும்போது, அதனொடு ஒத்த வகையில் சி, வ, ய, ந, ம என்ற ஐந்தெழுத்தும் அமைகின்றன.

'சி, வ' என்ற இரண்டும் முறையே பிரணவத்தில் உள்ள அ, உ என்பவைகளே. 'அ' இறைவனையும், 'உ' அருளையும் குறிக்கும் குறியீடுகள். அதே சமயத்தில் 'அ' என்பது எண் கணக்கில் 'எட்டு' என்ற எண்ணையும், 'உ' என்பது இரண்டு என்ற எண்ணையும் குறிக்கும். அவ்வகையில் அ, உ என்பன எட்டு+இரண்டு என நிற்கும். 'சிவ' என்பதை எண்ணால் அறிய முற்படும் போது எட்டு + இரண்டுஎன இரண்டாகவும், கூட்டமைப்பில் பத்தாகவும் நின்றது எனக் கொள்ளல் வேண்டும்.

அவ்வாறே, 'ந, ம' என்பவை தமிழ் எழுத்து வரிசை யில் எட்டாவதும் அதற்கு மேல் நின்ற இரண்டாவதும் ஆகும். அவ்வகையில் ந, ம என்பன எட்டு, இரண்டு என இரண்டாகவும், கூட்டமைப்பில் 'பத்து' ஆகவும் நின்றன.

சிவ என்பன அ, உ என நின்று 'பத்து' என்ற எண் ணாய்ப் பதியைக் குறிக்கும். ந, ம என்பன எட்டு, இரண்டு என நின்று பத்து என்ற எண்ணாய், பாசத்தைக் குறிக்கும்.

இனி, நடுவில் நின்ற 'ய' என்பது தமிழ் எண் இலக்கத் தில் பத்து என்பதைக் குறிப்பது. அது இங்கே 'பசு' என நின்ற உயிரைக் குறிக்கும். பதியும் பத்து என்ற எண்ணால் குறிக்கப் பெறுகின்றது. பாசமும் பத்து என்ற எண்ணால் குறிக்கப் பெறுகின்றது. அவ்வாறே உயிரும் பத்து என்ற எண்ணால் குறிக்கப் பெறுகிறது. 'ய' என்ற பத்து உயிரை–பசுவைக் குறிப்பானேன்?

உயிரானது தனித்து நிற்காது. முன்னுள்ள 'சிவ' என்ற பத்திலேயோ, பின்னுள்ள ந, ம என்ற பத்திலேயோ நிற்கும். ஆகையால் பத்தில் நிற்பது என்ற காரணத்தால் 'பத்து' என்ற குறியீட்டை உயிரும் பெறுகிறது.

மேலே குறிப்பிட்ட அடிப்படையில் ந+ய, ஆடியார் என்பது 'ந' என்ற மல எழுத்தோடு நின்ற 'ய' உயிரை, 'ஆடியார்' = ஆட் கொண்டார். உயிரின் மலத்தை அழித்து ஆட்கொண்டார் என்ற பொருளில் (ந+ய+ஆடியார்) நாயாடியார் என்ற சொல்வழக்கு அமைகிறது.

'ந, ம என்பவைகளைப் பொதுவாக இரண்டாக நின்ற மலங்கள் என்ற அளவில் மட்டுமே குறிப்பதுண்டு. 'ந' என்பது 'நான்' எனப்பெறும் ஆணவம் எனக் கொண்டு, உயிரின் ஆணவத்தை ஆள் எனக் கொள்வதன் மூலம் அழித்தார் என்பது 'நாயாடியார்' என்பதனைத் திருவைந் தெழுத்து முறையில் விளக்கும் நிலை.

'நாவல்' என்பது நாவல் மரத்தை அடிப்படையாகக் கொண்டு, தலப்பெயராக அமைகிறது. மற்றொரு விளக்க மும் உண்டு. ந்+ஆ+வ்+அ+ல்=நாவல். ந்+ஆ என் பவை ஆணவத்தை இடமாகக் கொண்ட உயிர். வ+அ என்பவை அருளை இடமாகக் கொண்ட இறைவன். 'ல்' என்பது பதின்மூன்றாவது எழுத்து.

அருளாக நின்ற பரம்பொருள் ஆணவத்தில் நின்ற உயிரை 'ல்' என ஆக்குவதே தலப் பெருமை என்ற வகை யில் 'நாவல்' என்ற பெயர் அமைகிறது. இவற்றிற்காக அவன் தீயாடி, நாயாடி, இறுதியில் வாயாடி அமைகிறான். (வ்+ஆ+ய+ஆள்தி) 'ய' என நின்றஉயிரை, 'வ்' என்ற அருளில் நின்ற 'ஆ' என ஆக்கி ஆளுகின்றான். ஆணவத் தில் நின்ற உயிரை அருளில் நிறுத்துகிறான். அவ்வாறு நிறுத்தி ஆளுகின்றான் என்ற செய்தியே 'அருட்டுறை' புகுதல் என அமைகிறது. நாவலூரர் (நம்பியாரூரர்) வெண் ணெய் நல்லூர் அருட்டுறை புக்கார் என்பது **நாயாடி**, **வாயாடி** என்பனவற்றால் குறியீடாகக் காட்டப் பெற்றது. அதற்காக வந்தவர் 'தீயாடி' — நெருப்பின் இடைநின்று நிருத்தம் செய்த பரம்பொருள் என்பதும் குறிக்கப்பெற்றது.

ந+ஆ என்பதை (உயிரை) வ்+அ என நின்ற இறைவன் 'ல்' என நிறுத்துகிறான். உயிரனுபவ நிலைகள் (துவாதசாந்தம்) பன்னிரண்டு (அ முதல் ஔ) வரை. அவற்றைக் கடந்த நிலையில் நிற்பது அருள். அதுவே பதின்மூன்றாவது. 'ல்' பதின்மூன்றாவது எழுத்து.

இனி, உயிரை இறைவன் ஆட்கொண்டபின் இரு நிலைகளில் நிறுத்துவான். இடப்பக்கம் நிறுத்துதல், வலப் பக்கம் நிறுத்துதல் என்பனவே அவை. தன்னடி அடைந்த உயிரை அடைக்கலமாக ஏற்றுக் கொள்வது ஒருவகை. ஏற்ற பின்னர் வலப்பக்கம் நிறத்தி, அவ்வுயிருக்கு வாழ்

வளிப்பான். அது கணத்தலைமை தாங்குதல், சண்டேசப் பதம் நல்கல் என்றாற் போன்ற பதவிகளில் நிறுத்துதல். இங்கே நாவலூரரை அடைக்கலமாக ஏற்று, தொண்டன் எனக் கொண்ட அந்த அளவில்தான் நாவலூரும், நல்லூர் அருட்டுறையும் அமைகின்றன. வலப்பக்கம் நிறுத்தி வாழ்வு வழங்குதல் இன்னும் அமையவில்லை. அது இந்த இடங்களில் அமைவது அன்று ஆதலின், இங்கே பெற்ற அருள் நிலையை நம்பியாரூரர் **"இடமாடியார்"** என்று குறிப் பிட்டுக் காட்டுகிற செய்தி அமைந்த திருநாவலூர்த் திருப் பாட்டை நோக்குதல் வேண்டும்.

"**வாயாடி** மாமறை ஓதி ஓர்
வேதிய னாகி வந்து
**தீயாடி** யார் இனக் கேழலின்
பின் சென்றோர் வேடுவனாய்
**வேயாடியார்** வெண்ணெய் நல்லூரில்
வைத்தெனை ஆளுங் கொண்ட
நாயாடியார்க் கிடம் ஆவது
நந்திரு நாவலூரே" (7.17.8)

என்று எடுத்துக் கூறி, அங்கே தாம் ஆட்கொள்ளப் பெற்ற முறையை 'இடமாடிய முறை' என்று எடுத்துக் காட்டும் அளவில் அடுத்த திருப்பாட்டை அமைத்துக் காட்டு கின்றார்.

"படமாடு பாம்பணை யானுக்கும்
பாவை நல்லாள் தனக்கும்
வடமாடு மால்விடை ஏற்றுக்கும்
பாகனாய் வந்து ஒருநாள்
**இடமாடியார்** வெண்ணெய் நல்லூரில்
வைத்து எனை ஆளுங்கொண்ட
நடமாடியார்க் கிடம் ஆவது
நந் திரு நாவலூரே" (7.17.9)

என்பதனுள் திருமால், உமை, விடை என்ற மூவருக்கும் இடப்பாகம் அமைத்தமை போலவே தம்மையும் இடப் பாகம் அமர்த்திப் பணி கொண்டவர் எனக் கொள்ள வேண்டும். இடப்பக்கம் பிறை அமைத்ததும் இக்கருத்தை உட்கொண்டதே. இதுவே உயிரைக் குறிக்கும். வலப் பக்கப் பிறை தக்கன் சாபமேற்று வந்த சந்திரனின் கலைகள் அழிந்த நிலை. அதனை வலப்பக்கம் நிறுத்தி வளரவைத் தான். இடப்பக்கம் நிறுத்துதல் என்பது அடைக்கலப்

பொருளாக ஏற்றுத் 'தமர்' என்ற உரிமையில் நிறுத்துதல் என்ற பொருளை உட்கொண்டது. அதனாலேயே,

"அடக்கங் கொண்டு ஆவணம் காட்டினார்
வெண்ணெயூர் ஆளுங் கொண்டார்"

என்று அருளியதையும் நுட்பமுற நோக்குதல் வேண்டும். இவ்வகையில் திருநாவலூர் நால்வகை நிலைகளில் நிற்பது அல்லது நிறுத்துவது எனப் பொருள் காணவேண்டும்.

"நாதனுக்கூர், நமக்கூர், நரசிங்க
முனையரையன்
ஆதரித்து ஈசனுக்கு ஆட்செய்யும்
ஊர் அணி நாவலூர்"

என்று *(7—11—11)* முழுமைப்படுத்தி அமைக்கிறார்.

நாதன், 'ந' என்ற மலத்துக்குரிய உயிரைத் தனதாக ஆக்குபவன். நமக்கு ஊர் என்பது 'நம' என்ற மலத்தில் நின்ற உயிர்களுக்கு உரிய இடமாக முதலிலும், பின்னர் அதுவே நாதனுக்குரிய இடமாகவும் அமைகிறது. மலத்தில் நின்ற உயிர்களுக்கு அருள் வழங்க வேண்டும் என்ற வகையில் நாவலூர் இறைவனை ஆதரித்து ஆட்செய்தலையும் தன்னிடத்தே கொண்டு விளங்குவது "நாவலூர்" எனக் குறிப்பிட்டார். நாவலூரில் அனைவரும் 'ந' என்ற எழுத்தாலேயே தொடங்கப்பெறுகின்றனர் என்று குறிப்பையும் காணவேண்டும். (நாதன், நமக்கு, நரசிங்கமுனையரையன், நாவலூர்).

நம்பியாரூரர் தம் நாவலூர்ப் பதிகத்தின் அடிப்படையில் சில செய்திகளை அமைத்துக் கொண்டாலும், நம என்பதனுள் நின்ற நாவலூரரை அருட்டுறையிற் சேர்த்து இடம் ஆக ஆக்கினார் என்ற பொதுமை நிலை அமைத்தல் சிறப்பே ஆயினும், பொதுமை நிலை வரலாற்றுப் படுத்தப் பெறும் நிலையில் சில சிக்கல்கள் தோற்றம் பெற்று விடுகின்றன.

நம்பியாரூரர் திருநாவலூரில் தோற்றம் கொண்டார் என்ற அளவிற் குறை இல்லை. திருமணம் காரணமாக நின்று பல நிகழ்வுகளைத் தோற்றிவிடுகிறது. அவ்வகையில்,

1. முன்பு நீ நமக்குத் தொண்டன்;
2. வேட்கைகூர, நம் ஏவலால் மண்ணின் மீது பிறந்தனை;
3. துன்புறு வாழ்க்கை நின்னைத் தொடர்வறத் தடுத்து ஆண்டோம்;
4. வன்மை பேசி வன்தொண்டன் என்னும் நாமம் பெற்றனை;
5. முன்பு எனைப் பித்தன் என்றே மொழிந்தனை ஆதலால் என் பெயர் பித்தன் என்றே பாடுக;
6. ஆவணம் காட்டி ஆளுதல்.

இங்கே, ஆட்கொள்ளப் பெற்ற முறைக்கும், வன்மைப் பேச்சு என்பதாகக் கருதப்பெறும் **பித்தன்** என்பதற்கும், **வன்தொண்டன்** என்ற வாழ்வுக்கும் இடை நின்ற இணைப்பு நிகழ்வுகளைச் செம்மையுற அமைத்துக் கொள்ளுதல் வேண்டும்.

நம்பியாரூரர் தாம்பாடிய பதிகங்களிற் பலவிடத்தும் ஓலைகாட்டி ஆண்ட நிகழ்வைக் குறித்தருளுகின்றார். அவர் குறிப்பிடுகின்ற அமைப்பை முதலில் தெரிந்து கொள்ளுதல் பயனுடைய ஒன்றாகும்.

"ஆவணம் செய்து ஆளுங்கொண்டவரை" 7—5—10

"வெண்ணெய் நல்லூரில் வைத்தெனை ஆளுங்
கொண்ட நாவலனார்" 7—17—1

"தன்மையினால் அடியேனைத் தாம்
ஆட்கொண்ட நாட் சபை முன்
வன்மைகள் பேசிட வன் தொண்டன்
என்பதோர் வாழ்வு தந்தார்" 7—17—2

"வெண்ணெய் நல்லூரில் வைத்தெனை
ஆளுங் கொண்டார்" 7—17—3

"நெஞ்சங் கொண்டார் வெண்ணெய் நல்லூரில்
வைத்தெனை ஆளுங் கொண்டு" 7—17—4

"செம்பொனார் தீவண்ணர் தூவண்ண
நீற்றர் ஓர் ஆவணத்தால்
எம்பிரானார் வெண்ணெய் நல்லூரில்
வைத்து எனை ஆளுங்கொண்ட" 7—17—5

"வெண்ணெய் நல்லூரில் வைத்து எனை
ஆளுங்கொண்டார்" 7—17—6

"வெண்ணெய் நல்லூரில் வைத்து எனை
ஆளுங் கொண்ட நாயகனார்" 7—17—7

"வெண்ணெய் நல்லூரில் வைத்து எனை
ஆளுங் கொண்ட நாயாடியார்" 7—17—8

"வெண்ணெய் நல்லூரினில் வைத்து எனை
ஆளுங் கொண்ட நடமாடியார்" 7—17—9

"அடக்கங் கொண்டு ஆவணங் காட்டி நல்
வெண்ணெயூர் ஆளுங் கொண்டார்" 7—17—10

"நேசத்தினால் என்னை ஆளுங் கொண்டார்" 7—19—2

"விலை ஆவணம் முடையாய்" 7—23—5

"ஒட்டி ஆண்டு கொண்டு போய் ஒளித்திட்ட
உச்சிப் போதனை" 7—59—10

"அன்று வந்தெனை அகலிடத்தவர் முன்
ஆளதாக என்று ஆவணங் காட்டி
நின்று வெண்ணெய் நல்லூர் மிசை ஒளித்த
நித்திலத் திரள் தொத்தினை" 7—62—5

"சொற்பதப்பொருள் இருளறுத் தருளும்
தூய சோதியை வெண்ணெய் நல்லூரில்
அற்புதப் பழ ஆவணம் காட்டி
அடியனா என்னை ஆளது கொண்ட
நற்பதத்தை" 7—68—6

"நம்பனே அன்று வெண்ணெய் நல்லூரில்
நாயினேன் தன்னை ஆட்கொண்ட
சம்புவே" 7—69—8

"மண்ணின் மேல் மயங்கிக் கிடப்பேனை
வலிய வந்து எனை ஆண்டுகொண்டானே" 7—70—2

நம்பியாரூரர் அருளிச் செய்தவைகளாக உள்ள திருப்பதிகச் சான்றுகளை முறையாகத் தொகுத்து நிறுத்தியே தெய்வச் சேக்கிழாரும் வரலாற்றை அமைத்தருளுவது வழக்கம்.

திருப்பதிகச் செய்திகளில் சடங்கவி சிவாசாரியார் மகள் மூலமாக அமைந்த மணத்தைத் தடுத்து என்னை ஆட்கொண்டார் என்ற பொருளில் **தடுத்தாட்கொண்டார்** என்ற வரலாற்றமைப்பைக் காண முடியவில்லை என்பது உண்மையே. ஆயினும், வழக்கின் மூலம் ஆளாகக்கொண்டிருக்கிறான் என்ற பொது உண்மையை மறுக்க இயலாது.

1. திருவெண்ணெய் நல்லூர்ச் சபைமுன் வழக்குரைக்கிறான்

2. ஆவணங் காட்டி அகலிடத்தவர் முன் பேசுகிறான்
3. சபை முன் நம்பியாரூரர் வன்மைகள் பேசிட, இத்தகைய பேச்சுக்களை ஏற்றுநின்று, இறுதியில் வன்தொண்டனாம் வாழ்வு தந்திருக்கிறான்.

என்ற மூன்று செய்திகளை இணைத்து அமைத்து வரலாற்றுப் படுத்தவேண்டும்.

திருப்பதிகச் செஞ்சொற் செய்திகளோடு சேக்கிழார் அமைத்துக் கொள்ளும் செய்திகளையும் நாம் ஆய்வு செய்து இணைக்கலாம்.

கி. பி. 1148 மே 9-ம் நாள் அமைக்கப்பெற்றது இரண் டாம் குலோத்துங்க சோழனுடையதும் 'பூமன்னு பதுமம்' என்ற தொடக்கத்தையுடையதும் ஆகிய திருவெண்ணெய் நல்லூர்க் கல்வெட்டொன்று சில செய்திகளை அறிவிக் கின்றது.

ஒரு தெருவுக்கு 'ஆலால சுந்தரர் தெரு' என்ற பெயர் இருந்தது.

**தடுத்தாட்கொண்ட** நல்லூர் என்ற ஊர்ப் பெயரும் அவ்வூரில் **வழக்கு வென்ற திருவம்பலம்** என்னும் பெயரால் கருங்கல் கட்டிடம் ஒன்றும் இருந்தன. இந்த அம்பலம் தனியார்ச் சொத்தாக இருந்தமையால், கோயில் நிலத்தை ஈடாகக் கொடுத்துவிட்டு, அம்பலத்தைக் கோயிலுக்கு உரிமையாக்கியிருக்கிறார்கள்.

அடுத்து, திருச்சின்னத்துக்குப் 'பிச்சன் என்று பாடச் சொன்னான் திருச்சின்னம்' என்று பெயர் வைக்கப் பெற்றி ருந்தது.

திருப்பதிகச் செய்திகளோடு கல்வெட்டுச் செய்திகளை யும் இணைத்துக் கண்டால் இந்த வரலாறு முழுமைபெற்று விடுகிறது என்பதில் குறையில்லை. இவற்றுடன், **மணம் தவிர்ந்த புத்தூர்** என்ற ஊர்ப் பெயர் வழக்குண்மையும் கொள்ளவேண்டும்.

'ஆலால சுந்தரர்' என்ற பெயர் மக்கள் வழக்கில் காணப்பெறும் கல்வெட்டுச் செய்தியாக அமைந்திருக் கிறது. தடுத்தாட் கொண்ட நாதர் என்பதும் அப்படியே.

இவைகளையெல்லாம் முற்றாக நீக்கிவிட்டுச் சேக்கிழார் வரலாறு படைத்தல் என்பது எண்ணிப்பார்க்கவும் இயலாத ஒன்று.

இங்கே அமையக் கூடிய அடிப்படை ஐயம் ஒன்று உண்டு. சேக்கிழார் காலமும் கல்வெட்டுக் காலமும் சற்றொப்ப,சமகாலமாக அமையப் பெறும் வாய்ப்புஉண்டு. சேக்கிழாரின் திருத்தொண்டர் புராண அரங்கேற்றத்துக்குப் பின் கல்வெட்டுத் தோன்றியிருக்குமாயின் அது சேக்கிழார் கூற்றுக்கு ஆதாரமாக இருக்கமுடியாது. இரண்டாங் குலோத்துங்கனே சேக்கிழார் பெருமானைப் பெரிய புராணம் அருளப் பணித்தவன் என்பதும் சேக்கிழாருக்கு அரும்பெருஞ் சிறப்புச் செய்து பணிந்தவன் என்பதும் வரலாற்றாய்வாளர்களால் உறுதிப் படுத்தப் பெறுகின்றன. அவன் காலத்தில் அமைத்த கல்வெட்டே முன்னர்க் குறித்த கல்வெட்டு.

இனி, இறைவன் வந்து ஆவணங் காட்டி ஆட்கொண் டான் என்ற நிகழ்வை அளவையியல் நெறியில் நின்று சிந்தித்தால் நம்பியாரூரரின் இயல்பான வாழ்வியற்பாதை யில் குறுக்கிட்டு, அவர் தம் பாதையை மாற்றுகின்றான். மாற்ற முயன்று அதற்காக ஆவணம் எல்லாம் எடுத்துக் கொண்டு வருகிறான். சபையின் முன் வாதிடுகிறான் என்பவைகளை நாம் ஏற்கவேண்டிய கட்டாயத்தில் இருக் கிறோம்.

இனி, நம்பியாரூரரை ஆளாகக் கொண்ட நிகழ்வை முறையாக அமைத்துக் கொண்டு வருகிற சேக்கிழார் வாக்கில் திருவருளால் அமைந்த பின்னணி ஒன்று உண்டு. அதை நாம் எடுத்துக் குறிப்பிட்டுச் சிந்திக்கவேண்டும்.

உலகில் இல்லாத வழக்கு — அந்தணர் வேறோர் அந்தணர்க்கு அடிமை ஆதல் — வழக்கை வலியுறுத்த ஓர் ஓலை — இசைவு காரணமாக அமைத்த ஓலை -- இவ் வாறான செய்திகளைக் கேட்டவுடன் நம்பியாரூரர் மறைய வனைப் பற்ற ஓடி, பிடித்து, ஓலையைப் பறித்து, கிழித்துப் போட்டு விடுகிறார். அப்போது முதியவர்,

“அறத்தாறு இன்றி, வன்திறல் செய்து என் கையில் ஆவணம் வலிய வாங்கி நின்றிவன் கிழித்துத்தானே நிரப்பி

னான் அடிமை" என்று கூறுகிறார். அறத்துக்கு மாறாக வலிமை செய்து என் கையில் உள்ள ஆவணத்தைப் பிடுங்கிக் கிழித்துப் போட்ட அந்நிலையிலேயே அடிமை என்பதை நிறுவிவிட்டான். இவ்வார்த்தையைக் கேட்டதும் நம்பியாரூரர்,

"பழைய மன்றாடி போலும்"

என்று நயம்படக் குறிப்பிடுகின்றார். நீண்ட காலமாக வழக்கு நிலை பேசுவதற்கு மன்றங்களுக்குச் சென்று அனுபவமிகுதி உடையவன் போலும் என்று அமையும் மேற்பொருளோடு, வந்த முதியவர் தம்முடைய வழக்கை அவையினர் முன்னே பேசி அதன் உண்மையை உறுதிப் படுத்துவதற்கு முன்பாகவே, நாமே வலிந்து சென்று, அவரைப் பற்றி ஓலையைக் கிழித்து, அடிமையாகி விட்டோம் என்ற நிலையில், வலிய வலியச்சென்று அடிமையாக ஆகிவிட்டோம் என்ற அகநிலைப் பொருளே அவர்தம் உள்ளத்தில் மிகுதியும் படிந்து நிற்பதாயிற்று. முதலில் இவ்வாறு அமைந்த ஒருவகை அகவொளியே நம்பியா ரூரரைப் படிப்படியாக அழைத்துச் செல்கிறது.

அருட்டுறையைப் புக்கவர் தாம் வந்து ஆட்கொண்ட முறை பற்றிச் சொன்னதும்,

"மன்றுளீர் செயலோ வந்து வலிய ஆட்கொண்ட தென்றார்" இது அடுத்த நினைப்பு. (பெரியபுராணம் 214)

"மண்மேல் நம்மைச் சொற்றமிழ் பாடுக" என்றதும், "நம்பியாரூரர், **மன்றுள் ஆடிய செய்யதாளை** அஞ்சலி கூப்பி நின்று" கூத்தப்பெருமான் நினைவை நினைந்து "பித்தா பிறை சூடி பெருமானே அருளாளா" எனத் தொடங்கிப் பாடுகின்றார். அந்நினைவின் முதிர்ச்சி யாலேயே அவர் தில்லையை நோக்கி விரைவாராயினர். தில்லையில் திருக்கூத்து அனுபவம் பெற்றுச் சிறந்தார். இங்கேயும்,

"தடுத்து முன் ஆண்ட தொண்டனார் முன்பு
தனிப் பெருந் தாண்டவம் புரிய
எடுத்த சேவடியார் அருளினால்"

என்று, (பெரிய புராணம் 254) தடுத்தாட்கொண்டவர்

தாண்டவம் புரியவல்ல பெருமானே எனவும் அமைத்துக் காண்கின்றார்.

மேலே கூறிய கருத்தை விளக்கும் வேறு ஒரு சான்றினையும் இங்கே இணைத்துக் காணுதல் நலம் பயப்பதாம்.

நம்பியாரூரர் திருமுதுகுன்றம் வணங்கிப் பொன் பெற்று, அதனை ஆற்றிலிட்டு ஆரூர்க் குளத்தில் அமைத் துக்கொடுக்க வேண்டும் என்று முன்மொழிந்துகொண்டு, தில்லையை வணங்க வருகிறார். அங்கே பாடிய

"மடித்தாடும் அடிமைக் கண்" என்று தொடங்கும் தில்லைப் பதிகம் முழுவதிலும்,

"**தடுத்தாட் கொள்வான்,** புலியூர்ச் சிற்றம்பலத்தே பெற்றாமன்றே"

என்று எடுத்துக் காட்டி முடித்தருளுகின்றார்.

தம்மை ஆவணங் காட்டி ஆண்டது மன்றுளாடியின் செயலே என்றமைத்துக் கூறிய குறிப்பை உள்ளடக்கிய வகையில் நம்பியாரூரர் அமைத்துக் கூறும் வலியவந்து ஆட்கொள்ளல், வன்தொண்டன் என்பதோர் வாழ்வு என்ற கருத்தமைவுகளுக்குரிய விளக்கங்களை அமைத்துக் காணுதல் பொருத்தமும் அழகும் உடையதாகும்.

தில்லையில் பாடிய பதிகத்தில் மட்டுமே **தடுத்தாட் கொள்வான்** என்ற சொல்லாட்சியை அமைக்கின்ற நம்பி யாரூரரின் அந்தப்பதிகம், முதலில் சென்று கண்ட தில்லைத் தரிசனப் பதிகம் அன்று. பின்னர், பேரூரில் ஒரு தில்லைத் தரிசனம் அமைந்தது. மூன்றாவதாக, தில்லையில் பேரூ ருடன் இணைந்து ஒரு தரிசனம் அனுபவம் பெற்ற காலை யில் தான் இது குறிப்பிட்டுக் காட்டப் பெறுகிறது.

**'வன்தொண்டன்'** என்பது ஒருவகை அகவொளியால் தன்னுள்ளத்தில் அரும்பிய கருத்தமைவு. இந்தக் கருத் தமைவு புத்தூர் மணமேடையில் தான் தோற்றம் பெற்றது. அந்த மேடையிலேயே அது வாழ்வு என அமைந்து 'வன்தொண்டன் என்பதோர் வாழ்வு தந்தார்' என்று பின்னர்ச் சிறப்பித்துக் கூறுமளவுக்கு அரும்பெனத்

தோன்றி விட்டது என்ற அளவில் அதை அமைத்துக் கொள்ளல் வேண்டும்.

அவ்வாறே, வலிய வந்து ஆளாகக் கொள்ளுவதே வெண்ணெய் நல்லூரில் நடைபெற்ற முதல்நிகழ்வு. ஆனால், அது மெல்ல மெல்ல வளர்ந்து, மடித்தாடும் அடிமைக் கண் எனத் தொடங்கும் தில்லைத் திருப்பதிகத்தில் தான் **'தடுத் தாட் கொண்டான்'** என்பதாக முழுமை பெறுகிறது.

வன்தொண்டன் என்பதோர் வாழ்வும், தடுத்தாட் கொண்ட மன்றாடியின் மாண்பும் எவ்வாறு படிப்படியாக வளர்ச்சி பெறுகின்றன என்பது ஆங்காங்கே இவ்வாய்வில் அமைத்துக்காட்டப் பெறும்.

இனி, 'வன்தொண்டு' என்பதற்குச் சாத்திர அடிப் படையில் ஒருவகை விளக்கம் அமைக்கப் பெறுகின்றது.

"வன்தொண்டன்" என்ற நாமம் இறைவனால் தரப் பெற்றது. வன்தொண்டனாயிருந்ததனாலே — இறை வனையும் வன்மை பேசவும், விறன் மிண்டர் புறகு என்ன வும், அதனால் திருத்தொண்டத் தொகை பாடவும் அமைந் தன. தொண்டு இருவகைப்படும். வன்தொண்டு, மென் தொண்டு என்பன. மென்தொண்டு சாத்திர விதிவிலக்குகட் குட்பட்டு அவற்றோடு இணங்கிச் செய்வது. இவற்றைக் கடந்து சாத்திர அதீதமாகச் செய்வது வன்தொண்டாம். இது செய்பவர்கள் தற்போதம் சிறிதுமின்றிப் **பதிகரணம் அடைந்தவர்கள்.** இவர்கள் செய்வது யாவும் சிவபுண்ணிய மேயாம். சண்டேசர் பிதாவின் காலை வெட்டினார். அது புண்ணியமாயிற்று. இத்தன்மை வாய்ந்தவர்களே இவ்வாறு செய்தற்குரியவர்களாம். இது பற்றியே **வன்தொண்டர்** என்ற இப்பெயராலேயே சிறப்பாய் இங்கே குறிப்பிடப் பெறுகிறது" என்பதே அச்சாத்திர விளக்கம்.

வல்வினை மெல்வினை வேறு: வன்தொண்டு மென் தொண்டு வேறு. சிவனை நினைந்து செய்வதாகிய வல்வினை வேறு. நம்பியாரூரரிடம் காணப்பெறும் வன் தொண்டு வேறு.

மெல்வினை, வல்வினை என்ற இரண்டும் சிவதன்ம மாகும். இறைவனை அர்ச்சிப்பது, தீமையில்லாத செயல்

செய்தல். இவ்வாறு நமக்கு எளிமையானவைகளைச் செய் வது மெல்வினை. சண்டேசர் அரிவாட்டாய நாயனார் செயல்கள் கொல்வினையே போலும் கொடுவினைகள். செய்தவர்கள் சிவனையே நினைந்து செய்தார்கள். இத் தகைய விளக்கங்களைக் கூறும் **திருக்களிற்றுப் படியார்** என்ற சாத்திர நூல் சண்டேசர் போன்றோர் செயல்களைச் சரியை, கிரியைகளில் அடக்கி, பிறகு யோக நெறிச் செயல் களை விளக்கி, அதன் பின்னர்ச் சிவஞானியின் செயலை விளக்க வருகின்ற காலத்தே திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், திருநாவலூரார், திருவாதவூரர் என்பார் செயல்களை எடுத்துக்காட்டாக அமைக்கிறது. இறுதி யாக, இச்செயல்களையே **சிவயோகம்** எனவிளக்கி, வன் தொண்டர் தொண்டுகளை எடுத்துக்காட்டி விளக்கும் பாடலைக் கீழே காணலாம்.

> "மோகம் அறுத்திடில் நாம் முத்தி கொடுப்பதென
> ஆகமங்கள் சொன்ன அவர்தம்மைத் — தோகையர்பால்
> தூதாகப் போகவிடும் **வன்தொண்டன்** தொண்டுகளை
> ஏதாகச் சொல்வேன் யான்"

என்பது **திருக்களிற்றுப் பாடியார்ச் (72)** செய்யுள்.

அடுத்து, புத்தூர்ச் சடங்கவி சிவாசாரியாரின் மகளுடன் அமையும் மணத்தைத் தடுத்து ஆளாகக் கொள் ளுதலே தடுத்தாட்கொள்ளப் பெற்றது எனப் பொதுவாகக் கருதப் பெறுகிறது.

சடங்கவி சிவாசாரியார் மகள் திருமணம் அமைந்தால் அது துன்புறு வாழ்க்கையாக அமையும் என்று கருதியே தடுத்தாட்கொண்டார் எனக் கொண்டு, "நம்பியாரூரரை மணக்கப் பரவையார் சங்கிலியார் தெய்வத் தன்மை அள விற்குச் சடங்கவியின் மகளார்க்கு இல்லையாதலின் சிவ பிரான் தடுத்துவிட்டார் போலும். இவர்க்குச் சுந்தரருடன் ஒப்பாம் தெய்வத்தன்மை மிகுதியில்லை என்று நாம் அறிந்து கொள்ள வேண்டும் என்பது மறை-திருநாவுக்கரச னார் அவர்கள் தம்முடைய **பெரியபுராண ஆய்வுரை** முதற்புத்தகம், பக்கம் 26-ல்குறிப்பிடுகின்றார்.

"மாழையொண்கண் பரவையைத் தந்து ஆண்டானை" என்று கூறும் நம்பியாரூரர் "சங்கிலியோடு எனைப்

புணர்த்த தத்துவனை" என்ற அளவில் கூறுகிறார். சங்கிலியைப் பிரிந்து வரும் அளவுக்குப் பரவையாரைப் பிரிய முடியவில்லை. 'சாருந்தவத்துச் சங்கிலியார்' என்பது உண்மையேயாயினும், நம்பியாரூரர் மேருமலையின் மேம்பட்ட தவத்தார் என்பதும் நாம் கொள்ள வேண்டுவதே. சங்கிலியார் திருமணம் நம்பியாரூரருக்குத் துன்புறு வாழ்வைத் தொடர்புறுத்தவில்லையா?

சடங்கவி சிவாசாரியார் மகளுக்கு நம்பியாரூரரை மணமகனாக அடைதற்குரிய தகுதிகள் பல்லாற்றாலும் பொருந்த உண்டு என்பது இருசாரார் தாய் தந்தையர்களும் உறவினர்களும் சான்றோர்களும் கூடிச் செய்த முடிவே. அவர்கள் முடிவை முற்றாகத் தவறு என்று ஒதுக்கிவிட முடியாது. திருமணத்தடை காரணமாக, நம்பியாரூரர் சென்று விட்டார் எனத் தெரிந்ததும் அதற்காக அவள் வருந்திக் கலங்கி, வாழ்விழந்ததாகத் துடிக்கவில்லை. நம்பியாரூரரையே மனத்தகத்து நினைத்து, அந்நினைவாலேயே முத்திபெறும் பேறு பெற்று விட்டாள் எனில் சடங்கவி சிவாசாரியர் மகளால் நலனுணப்பட்ட நம்பியே நம்பியாரூரர் எனக் கொள்ளல் வேண்டும். சடங்கவி சிவாசாரியார் மகள் இந்நிகழ்வில் இணைக்கப் பெறுதற்கு நேர்க் காரணம் தெரியவில்லை. அது மட்டுமன்று, மணம் தவிர்ந்த புத்தூர் இன்றும் உண்டு. அங்கே, திருமணம் நடத்துவதற்கு அச்சம் கொள்ளும் வழக்கம் மரபு முறையில் இன்றும் இருந்து வருகிறது. அந்த ஊர் செய்த தீவினை என்னவோ!

அடுத்தது 'ஆவணம்' பற்றிய ஒரு செய்தி. ஆவணத்தை அடிப்படையாகக் கொண்ட கருத்து ஒன்றைச் சிந்திக்க வேண்டும்.

பொய்யான வழக்கைப் பற்றிய பொய்யான ஓலையே அது. ஆனால், அதுவே எல்லார் அறிவையும் மறைத்து விட்டது. ஓலை 'வாசகம்' கீழே கொடுக்கப் பெறுகிறது.

"அருமறை நாவல் ஆதிசைவன் ஆரூரன் செய்கை
பெருமுனி வெண்ணெய் நல்லூர்ப் பித்தனுக்கு யானும் என்பால்
வருமுறை மரபுளோரும் வழித்தொண்டு செய்தற்கு ஓலை
இருமையால் எழுதிநேர்ந்தேன் இதற்கிவை என் எழுத்து"

என்பதே (பெரியபுராணம் 205) ஓலையிற் கண்ட வாசகம்.

ஆவண ஓலையில் அமைந்த 'பித்தன்' என்ற சொல் நம்பியாரூரரால் தான் அமைக்கப் பெறுகிறது. எழுதிக் கொடுத்த ஆரூரர் என்பவர் சடையனாரின் தந்தை. யானும் என்பால் வருமுறை மரபுளோரும் வழித்தொண்டு செய்தல் வேண்டும் என்பதே ஓலை வற்புறுத்துவது. வழித் தொண்டு செய்தல் வேறு; அடிமை வேறு. வழித்தொண்டு செய்வதற்குப் புத்தூர்த் திருமணம் தடையாக இருக்க முடியாதே. மேலும், நம்பியாரூரரின் தந்தையாரை இந்த ஓலைக்குரியவர் இதுவரை வந்து ஓலை காட்டி அழைத்த தாக வரலாறு இல்லை. ஓலை எழுதிக் கொடுத்த செயல் சடையனாருக்குமுழுமையாகவே தெரியாது என்றும் சொல்ல முடியாது. இவ்வகையில் நம்பியாரூரரோ அந்தணர் அவையில் மிக்கார் யாரோ இதுபற்றிக் கேட்க வேண்டும் என நினைக்கவேயில்லை. காரணம், அதுவே மாயையின் ஒரு கூறாக அமைந்த திரோதானம். இதுவே, ஆன்மாவின் பாசம் நீங்கிய நிலையில் அருளாக நின்று துணை செய்யும். இந்த அனுபவம் நம்பியாரூரருக்கு அமைந்து விடுகிறது.

"கற்பகத்தினைக் கனகமால் வரையைக்
காம கோபனைக் கண்ணுத லானைச்
**சொற்பதப் பொருள் இருள் அறுத்தருளும்**
**தூய சோதியை** வெண்ணெய் நல்லூரில்
அற்புதப் பழ ஆவணங் காட்டி
அடியனா என்னை ஆளது கொண்ட
நற்பதத்தை நள்ளாறனை அமுதை
நாயினேன் மறந்து என் நினைக்கேனே" (7—68—6)

என்ற திருநள்ளாற்றுப் பதிகத்தில், ஆவணத்தின் சொற் பதப் பொருள் அன்று ஏதும் சிக்கலுடையதாகத் தெரிய வில்லை, இன்றோ அதனுடைய உயர்ந்த குறிக்கோள் அனு பவமாகிறது. இந்நிலையில், அந்த ஆவணச் சொற்களுக்கு உரிய பொருள் ஒரு சோதியால் இருள் அறுத்த நிலையில் இன்று விளங்கிக் கொள்ள இயலுவதாக இருக்கிறது என்று மகிழ்கிறார். இவ்வகையில் முதலில் மயக்கத்தைக்கொடுத்து, பின்னர், அருள் என்பதாகவே நினைக்கப்பெறும் திரோ தான சக்தியின் அனுபவ நிலையே 'ஆவணம்' வந்து அமைந்த நிலை எனக் கொள்ளலாம்.

இனி, இம்முதற்பதிகத்தில், நம்பியாரூரர் "ஆளாய் இனி அல்லேன் எனலாமே" என்று என்மனத்தினுள் உன்னை

வைத்தாய் என்றும் எத்தாலும் மறவாதே நினைக்கின்றேன் என்றும் கூறுவதோடு,

> ''ஊனாய் உயிரானாய் உடலானாய் உலகானாய்
> வானாய் நிலனாய் கடலானாய் மலையானாய்
> ... ... ... ... ...
> ஆனாய்'' (7—1—7)

என்றும்,

> ''முடியேன் இனிப் பிறவேன் பெறின் மூவேன்பெற்றம் ஊர்தீ
> கொடியேன் பல பொய்யே உரைப்பேனைக் குறிக்கொள் நீ''
> (7—1—4)

என்றும் கூறுவனவற்றை நாம் பின்னுள்ள பதிகங்களில் இணைத்துக் காணலாம். **''என்மனத்து உன்னை வைத்தாய்''** என்பது நினைவிற் கொள்ளக்கூடியது.

**தவநெறி**

அருட்டுறைப் பேறுபெற்ற நம்பியாரூரர் திருநாவலூர் சென்று, பின்னர்த் தில்லைக்கூத்துக் காணும் குறிப்புடன் புறப்பட்டு, வழியில் **திருத்துறையூர்** சென்றடைகின்றார்.

திருவெண்ணெய் நல்லூர் மெய்கண்டாருக்குரிய இடமாக அமைந்தது போலவே, திருத்துறையூர் அருணந்தி சிவாசாரியாருடைய தலம்.

பெண்ணையாற்றின் தென்பால் அமைந்தது திருவெண்ணெய் நல்லூர். திருத்துறையூர் பெண்ணையாற்றின் வடபால் அமைந்த தலம். பெண்ணையாறு எவ்வெப் பொருள்களையெல்லாம் கொண்டுவந்து கரையில் குவிக்கிறது என்பதை விரிவாகச் சொல்லி, அந்த ஆற்றின் ஒரு துறையில் அனைவரும் சென்று நீராடுவதாகவும் குறிப்பிடுகின்றார்.

தம்மிடத்து வந்த நீராடுவார்க்குரிய அழுக்கினைப் போக்குவதோடு தானும் பல பொருள்களைக் கொண்டு வந்து கரையில் எறிகின்றது எனப் பெண்ணையாற்றின் இருவகைத் தொண்டுகளையும் எடுத்துக் கூறிப் பாராட்டுவது சிந்திக்கத்தக்கது.

திருத்துறையூரில் நம்பியாரூரர் மலர்கொண்டு போற்று இசைத்து வந்தித்தார் என்று சேக்கிழார் அமைத்துக் காட்டு

கின்றார். இங்கேயும், அவநெறி செல்லாமே தடுத் தாண்டாய், அவ்வாறே தவநெறி தந்தருள் என வேண்டுவ தாகச் சேக்கிழார் அமைத்துக் காட்டுகின்றார்.

> "சிவனுறையுந் திருத்துறையூர் சென்றணைந்து "தீவினையால்
> அவநெறியே செல்லாமே தடுத்தாண்டாய் அடியேற்குத்
> **தவநெறி தந்தருள்**" என்று தம்பிரான் முன்நின்று
> பவநெறிக்கு விலக்காகும் திருப்பதிகம் பாடினார்"

என்பது (பெரிய புராணம் 225) சேக்கிழார் திருவாக்கு. **தவநெறி எது?** என்ற வினா அறிஞர் பெருமக்க ளிடையே பல்வேறு விடைகளைத் தோற்றுவிப்பதாயிற்று.

"பெண்ணொடு வாழும் உலகநெறியில் தம்மைத் தமது வினை செலுத்திவிடக் கூடாதென்று அஞ்சி ஞான நெறியில் நிற்கக் கருதினார். அதுவே, தவநெறி எனக் கேட்கப் பெறுகிறது. ஞான நெறியில் நின்றாலும் புறம்பே யும் பூசை செய்யும் விருப்புடையவராய், திருத்துறையூரில் மலராற் பூசை செய்து வழிபட்டார்" என்று எடுத்துக்கூறி, தவநெறியைப் பெண்ணொடு இணைந்து வாழ்தல் இல்லாத ஞானநெறி எனக் கொண்டு விளக்கம் அமைத் தார், திரு. கா. சு. பிள்ளை அவர்கள். (**சுந்தரமூர்த்தி நாயனார் சரித்திரம்** என்ற நூலில் பக்கம் 32–33)

"தவநெறி — சிவபூசையிற் செல்லும் வழி. புலன்வழிச் செல்லாது மனத்தை ஒன்றுவித்துச் சிவபெருமானை இடை விடாது நினைத்தலும் பூசித்தலுமே தவநெறியாம். உட் பூசை புறப்பூசை முதலாகச் சிவாகமங்களிற் கூறியபடி சிவ பூசை செய்யப் பெறுவது. இதுவே பவநெறிக்கு விலக் காவது.

கருமங்களே பிறவிக்குக் காரணம். பிராரத்த கருமங் களை அனுபவிக்கும்போதே ஆகாமியம் ஏறாமலிருக்கும் வகையில் செய்யப் பெற வேண்டும். அதே சமயத்தில் சஞ்சிதம் அறும் வகையிலும் செய்ய வேண்டும். **இக்கருமப் பாகுபாட்டை அறிந்து செய்வதே நம்பிகளின் சரித தத்துவம்.** இவ்வாறு அறிந்து செய்வதற்கு அவநெறியில் கருவி கரணங்கள் செலுத்தப் பெறாமல், சிவநெறியில் புகுவிக்கும் தவநெறியிலே மட்டும் செலுத்தப் பெற வேண் டும். இவ்வாறு வேண்டியது 'வீடும் வேண்டா' என்ற இலக்கணத்தோடு மாறுபடாது."

இது சிவக்கவிமணி C. K. S. அவர்கள் தம்முடைய பெரிய புராண உரையின் மூலம் அமைக்கும் கருத்து.

(**திருத்தொண்டர் புராணம்** உரை முதற்பகுதி–பக்கம் 259.)

அடுத்து, "தவநெறி என்பது துறவு நெறியே ஆகும் என்று கொண்டு, வேண்டுவோர் வேண்டியதே ஈவான் பெருமான் ஆதலின், இப்போது துறவு நெறியைக் கொடுத்தார். பின்னர் இல்லறம் வேண்டும் என்று கேட்கும்போது அதையும் கொடுப்பார்" என்ற கருத்தை அமரர் மறை. திருநாவுக்கரசனார் அவர்கள் தம்முடைய **பெரியபுராண ஆய்வுரை**, முதற் புத்தகம், பக்கம் 27–ல் குறித்துள்ளார்கள்.

**பவநெறிக்கு விலக்காகும் தவநெறி** என்பதும் அது **"புலன் ஒன்றும் படி தவத்திற் புரிந்த நெறி"** என்பதும் சேக்கிழார் தத்த விளக்கங்கள்.

இதன் விளக்கமாகத் திருஞானசம்பந்தர் அருளிய

"அகனமர்ந்த அன்பினராய் அறுபகை செற்று ஐம்புலனும்
அடக்கி ஞானப்
புகலுடையோர் தமதுள்ளப் புண்டரிகத் துள்ளிருக்கும்புராணர்"

என்பதை எடுத்துக் காட்டுவர்.

தவநெறி என்பதை இது என எவ்வாறு வரையறுப்பது என்பதை நம்பியாரூரர் வாழ்வை வைத்துத்தான் முடிவு செய்ய வேண்டும்.

'தவம்' என்பது திருவள்ளுவர் தம் திருக்குறளில் துறவறப் பகுதியில் இருப்பதால் தவத்தைத் துறவு என்பதாகவே அமைத்துக் காணும் நிலை வந்திருக்கிறது.

தவம் என்பதன் விளக்கமாக, தனக்கு வந்த துன்பத்தைப் பொறுத்துக் கொள்ளல், உயிர்களுக்குத் தீங்கு செய்யாமை என்று இருபக்கங்களைக் கொண்ட ஒரு பேரறம் என விளக்குவது திருக்குறள்

"உற்றநோய் நோன்றல் உயிர்க்கு உறுகண் செய்யாமை
அற்றே தவத்திற்கு உரு"

என்பது (261) திருக்குறள்.

திருவெண்ணெய் நல்லூரில் அருட்டுறையிற் புகுந்தார் ஆதலின் அருளாட்சியையுடைய தவநெறியை இங்கே வேண்டுகின்றார். முதற்பக்கத்தில்,

"நாயேன் பல நாளும் நினைப்பின்றி, மனத்து உன்னைப்
பேயாய்த் திரிந்து எய்த்தேன், பெறலாகா அருள் பெற்றேன்"

எனவும்,

"மன்னே, மறவாதே நினைக்கின்றேன் மனத்து உன்னை"

எனவும்,

"முடியேன் இனிப்பிறவேன் பெறின் மூவேன் பெற்றம் ஊர் தீ
கொடியேன் பல பொய்யே உரைப்பேனைக் குறிக்கொள் நீ"

எனவும், முறையே 2, 3, 4 ஆகிய திருப்பாட்டுக்களிற் கூறுகின்றார். அவ்வகையே சிந்தித்தால், நம்பியாரூரர் திருநொடித்தான் மலைப் பதிகத்தில் குறிப்பிட்டருளியதை உடன் இணைக்கலாம்.

இறைவன் பொன்னடியை நினைத்தல் தவிர வேறு ஏதும் செய்யவில்லை என்று கூறுகிறார்.

"ஊனை உயிர் வெருட்டி ஒள்ளியானை நினைத்திருந்தேன்"
(7—100—2)

"மண்ணுலகில் பிறந்து நும்மை வாழ்த்தும்...
தொண்டனேன்,' (7—100—5)

என்று கூறி, அதற்கு அவன் செய்தவைகள்,

"ஊனுயிர் வேறு செய்தான்" (7—100—1)

"அஞ்சினை ஒன்றி நின்று அலர் கொண்டு அடிசேர்வறியா
வஞ்சனை என்மனமே வைகி, வானநன்னாடன் முன்னே
துஞ்சுதல் மாற்றுவித்தான்" (7—100—6)

"உலை அணையாத வண்ணம் அருளினான்" (உடல்
அழியாதே உயர்ந்து நிற்கின்ற ஒரு நிலை) (7—100—7)

என்று அருளியவைகளைத் திருக்குறளோடு இணைத்துக் காணலாம்.

தவம் என்பது ஒருவகை நோன்பு. செயற்பாட்டு முறையில் **தன் உயிர் தான் அறப் பெறல் வேண்டும்** என்பது ஒரு கருத்து. இது அமைந்தால் எல்லா உயிரும் தொழும். அவ்வாறே 'கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி எல்லா உயிரும் தொழும்" என அமைத்துக் காட்டினார்.

'ஊனுயிர் வேறு செய்தான்'' எனவும், ''துஞ்சுதல் மாற்றுவித்தான்'' எனவும், ''உலை அணையா வண்ணம்'' என உடல் கெடாதே உயர்ந்து இருத்தல் என்ற நிலையையும் அளித்தான் எனவும் உள்ளவை நம்பியாரூரரின் இறுதிப்பதிகத்தையும் 'தவம்' என்ற தலைப்பில் அமைந்த திருக்குறள்களையும் இணைத்துச் சிந்தித்தால் வரும் செய்திகளாம்.

மேற் கூறியவற்றின் அடிப்படையில், தன்னுள் புகுந்து நின்ற பொருளை இடைவிடாது நினைத்தால், போற்றிப் புகழ்ந்து தொண்டு செய்தல், பொய் சொல்லாமை, கள்ளாமை முதலியவற்றை மேற்கொள்ளல் என்ற ஒன்றே **'தவநெறி'** என நம்பியாரூரர் வாக்கில் அமைகிறது என்று கொள்வதே பொருத்தமுடையது.

தன்னுள் புகுந்து நின்றவனை நினைந்து நினைந்து, அவனடி பேணி, அவனடியில் தவறாத சிந்தனையுடன் இருப்பது. இறைவன் திருவடியை, தன்னுள் புகுந்து நின்ற பொன்னின் திருவடியை என்றும் மறவாதே நினைந்து வாழ்ந்தார் என்பதே நம்பியாரூரரின் வாழ்வியல் உண்மை. இதனை,

''அழுக்கு மெய்கொடு உன் திருவடி அடைந்தேன்
அதுவும் நான்படப் பாலதொன்றானால்
பிழுக்கை வாரியும் பால் கொள்வர் அடிகேள்
பிழைப்பனாகினும் திருவடிப் பிழையேன்''

என்று ஒற்றித் திருப்பதிகத்தில் கூறுவதை உணர்ந்து தெரியலாம்.

### திருவடிப்பேறு

அருட்டுறைப் பொலிவு என்பது நான்கு நிலைகளாற் பொலிவது என்ற அடிப்படையில் நேசத்தால் ஆள் எனக் கொள்ளல், நினைந்து நிற்கும் நெறிபேணல் என்ற இரண்டும், முறையே பெண்ணை நதியின் தெற்கிலும் வடக்கிலும், வெண்ணெய் நல்லூரிலும் திருத்துறையிலும், ஆளாகவும், அருந்தவ நெறியாகவும் அமைய, மூன்றாவதாகிய இறை போதும் மறவாமை எண்பதமாக நிற்கிறது.

நம்பியாரூரர் பெண்ணையாற்றைக் கடந்து மீண்டும் கெடிலநதிக்கரையில் உள்ள திருவதிகை வீரட்டானம் வருகிறார். அப்பரடிகள் அருள் பெற்ற தலம், அவர்தம் உழ

வாரத்திண்படை கொண்டு தொண்டு செய்த இடம் ஆதலின், அதனை மிதித்தற்கஞ்சி, அதனுட் செல்லாமல், ஊர்ப்புறத்தே யிருந்த பொதுமடம் ஒன்றில் தங்குகின்றார்.

'சித்தவட மடம்' என்பது அதன் பெயர். மாலைப் போதாயினமையின் அங்கேயே தங்குகின்றார். வீரட்டானத் திறைவனை மனத்தில் நினைந்தவராய்ப் பள்ளி கொள்ள லானார். வீரட்டானேசுவரர் கிழவேதியர் வடிவு கொண்டு யாருமறியாமல் அம்மடத்தில் வந்து படுத்திருக்கிறார். மெல் லத்தம்முடைய காலை நீட்டி நம்பியாரூரரின் முடிமேல் படவைத்தார். துயிலுணர்ந்த ஆரூரர், அருமறையோனே! உம்முடைய கால்களை என் முடிமேல் வைத்தனையே! என, "திசை தெரியா வகை செய்தது என்னுடைய முதுமை" என்றார். சரியென்று ஏற்றுக் கொண்ட நிலை யில் முடியை வேறு இடத்தில் சாய்த்துப் பள்ளி கொண் டார் நம்பியாரூரர். அங்கும் நீட்டினார். இங்கு என்னைப் பல முறையும் மிதித்தாய்; நீ யார் என்று கேட்க, என்னை நீ இன்னும் அறியவில்லையோ? என்று சொல்லி மறைந்துவிட்டார்.

திடுக்கிட்டுணர்ந்த நம்பியாரூரர் "தம்மானை அறியாத சாதியார் உளரே" என எடுத்துப் பதிகம் பாடும் நிலையில்,

"எம்மான் தன் அடிக்கொண்டு என் முடிமேல்
வைத்திடும் என்னும் ஆசையால் வாழ்கின்ற
அறிவிலா நாயேன்"

என்று குறிப்பிட்டு, இறைபோதும் இகழ்வன்போல்யானே? என வருந்தி அமையும் வரிகளுடன் முடிப்பாராயினார்.

எம்பெருமான் எப்பொழுது வந்து தன்னுடைய திருவடிகளை என் முடிமேல் வைக்கும் என்ற ஆசையால் வாழ்ந்து கொண்டிருக்கிற நான், சிறிதுபோது இறுமாந்தமை யால் இழப்புண்டேனே என்று கூறி வருந்துவாராயினார்.

"மறவாத சிந்தையால் வாழ்வேன்" என்று தன்னை உறுதிப்படுத்திக் கொண்ட நம்பியாரூரர், மனத்தால் நினைந்து விரும்பிய எனக்கு **வினை என் உள்ளத்தை விட்டு நீங்காமையால்,** அவன் தனது திருவடியை என் தலைமேல் சூட்டவரும் போதும், அறியாமல் இகழ்வேனா யினேன், என வருந்துகிறார்.

"நால் தானத்து ஒருவனை நானாய பரனை"

என்று (7.38.4) கூறுவது, துரியநிலை அனுபவப் பொருளாக இறைவனை உணரும் பெற்றிபெற்றிருந்தார் நம்பியாரூரர் என்று கூறுவதும், சித்தவடமடத்தில் திருவடித் தீக்கை அமைத்தார் என்பதும் சமய வழி நின்ற சான்றோர்கள் அளிக்கும் விளக்கங்கள்.

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் ஆகியோரைப் பின் பற்றி, அவர்தம் பதிகங்களை ஓதியும் உணர்ந்தும் பழகிய வர், நம்பியாரூரர். அச்செய்தியை,

"நல்லிசை ஞானசம் பந்தனும் நாவினுக்
கரையனும் பாடிய நற்றமிழ் மாலை
சொல்லியவே சொல்லி ஏத்துகப்பானை"

என்று (7.67.5) எடுத்துக்கூறியதோடன்றி,

"தொண்டனேன் அறியாமை அறிந்து
கல்லியல் மனத்தைக் கசிவித்துக்
கழலடி காட்டி என் களைகளை அறுக்கும்
வல்லியல் வானவர் வணங்க நின்றானை
வலிவலந் தனில் வந்து கண்டேனே"

என்று அதே பாடலில் அமைத்துச் சிறப்பிப்பதை உன்னும் போது, வலிய வந்து தன்னைக் காட்டி மாண்புறுத்துவது அவன் எப்போதும் மேற்கொள்ளும் செயல் என உணரலாம்.

"ஊன் அங்கத்து உயிர்ப்பாய் உலகெல்லாம்
ஓங்காரத் துருவாகி நின்றானை
வானங் கைத்தவர்க்கும் அளப்பரிய
வள்ளலை அடியார்கள் தம் உள்ளத்
தேன் அங்கைத்து அமுதாகி உள்ளூறும்
தேசனைத் திளைத்தற் கினியானை"

என (7.67–1) அகத்தே புகுந்து இனிப்பானாக அனுபவம் அமையும் நிலையில் அவர்தம் திருவடிப்பேறு அமைந்தது எனலாம்.

சித்தவடமடத்திலிருந்து தில்லைக்குச் செல்பவர் திரு மாணிக் குழி பணிந்து திருத்தினை நகர் சென்று சிவக் கொழுந்தீசனைப் பணிகிறார்.

"வேந்தாய் உலகாண்டு அறம் புரிந்து
வீற்றிருந்த இவ்வுடலிது தன்னைத்
தேய்ந்து இறந்து வெந்துயருழந்திடும் இப்
பொக்க வாழ்வினை விட்டிடு நெஞ்சே"

என்று (7.64.6) கூறுவது, நம்பியாரூரர் இளமையில் நரசிங்க முனையரையரின் இளவரசாக இருந்த காலத்து நிகழ்வை மனத்திற் கொண்டு கூறியதாகக் காணலாம்.

**தில்லைத் திருக்கூத்து**

அருட்டுறை, திருத்துறையில் தவத்துறை, அறத்துறை யாம் அதிகை வடபால் சித்தவடமடம் என்ற மூன்றிலும் முறையே ஆவணம், தவநெறித்துறை, திருவடி சூட்டுதல் என்ற அனுபவ நிலைகளைப் பெற்றுவரும் நம்பியாரூரர் தில்லைத் திருக்கூத்துக் காண்பான் வருகிறார்.

தில்லையின் வடக்கு வழியேவரும் நம்பியாரூரர் திரு **வீதியை** வணங்கி, நீடுதிருவாயிலை வணங்கி, **பேரம் பலம்** வலங்கொண்டு, திருச்சிற்றம்பலத்துக்கு முன் உள்ள **திருவணுக்கன் திருவாயில்** நண்ணி, **திருக்களிற்றுப்படி** மருங்கு சென்று தாழ்ந்து எழுந்தார். இம்முறை அகநிலை யில் சென்று தாழ்ந்து ஐந்து நிலைகளைக் கடந்து சென்று அணையும் நிலை குறித்தது. அந்நிலையில் கூத்தப்பெரு மான் திருக்கூத்துக் காட்சியும் அனுபவமும் அமைகின்றன.

"ஐந்துபேர் அறிவும் கண்களே கொள்ள
அளப்பருங் கரணங்கள் நான்கும்
சிந்தையே யாகக் குணம் ஒரு மூன்றும்
திருந்து சாத்துவிகமே யாக
இந்து வாழ் சடையான் ஆடும் ஆனந்த
எல்லையில் தனிப்பெருங் கூத்தின்
வந்த பேரின்ப வெள்ளத்துள் திளைத்து
மாறிலா மகிழ்ச்சியில் மலர்ந்தார்."

என்பது நம்பியாரூரரின் தில்லைத் திருக்கூத்தின் முதல் அனுபவத்தை எடுத்து விளக்கும் (பெரியபுராணம் 253) சேக்கிழார் திருவாக்கு.

தில்லைத் திருக்கூத்துத் தரிசனம் தந்த அனுபவத்தின் அடிப்படையில் நம்பியாரூரர்,

"தெண்ணிலா மலர்ந்த வேணியாய் உன்தன்
திருநடம் கும்பிடப் பெற்று
மண்ணிலே வந்த பிறவியே எனக்கு
வாலிதாம் இன்பமாம் என்று
கண்ணி லானந்த அருவிநீர் சொரியக்
கைம்மலர் உச்சிமேற் குவித்துப்
பண்ணினால் நீடி அறிவரும் பதிகம்
பாடினார் பரவினார் பணிந்தார்"

என்று கூறியும் பணிந்தும் பதிகம் பாடியும் பரவினார் என்று விளக்குவது சேக்கிழார்(பெரியபுராணம் 253)வாக்கு.

தில்லைத் திருக்கூத்து நடம் கும்பிடப்பெற்றார். அதற் கென மண்ணிலே வந்த இப்பிறவி எனக்கு மிக மிக நல்லது என்று உடம்பின் பெருமையை உணர்ந்து பண்முறைப் பதிகம் பாடினார் என்பது இதன் கருத்து.

நம்பியாரூரருக்கு அமைந்த இத்தில்லைத் திருக்கூத்து அனுபவம் முதல் அனுபவம். இதை எடுத்துக்காட்டும் வகையில் அமைந்த திருப்பதிகம் கிடைக்கவில்லை.

## அருட்டுறைப் பொலிவின் நிறைவு

ஆவணங் காட்டியும், அருமைத் தவத்துறை சார்ந்தும், திருவடிப் பேறமைத்தும், தில்லைத் திருக்கூத்துக் கண்டும் நின்ற நான்கு நிலைகளில் நால் தானத்து ஒருவனாக நானாய பரமனாக நம்பியாரூரருக்கு அனுபவப்பட்டொழிந் தான் என்பதும், மண்ணிலே வந்த பிறவியே வாலிது என இவ்வனுபவத்தால் நம்பியாரூரரும் உணர்ந்தார் என்பதும் கொள்ளத்தக்கன.

# 3. ஒத்துறவமையும் முத்திறப் பொலிவு

**முன்னுரை**

நம்பியாரூரர் திருவெண்ணெய் நல்லூர்த் திருக்கோயி லாகிய அருட்டுறையில், ஆவணங்காட்டி ஆளப் பெறுதல் முதலாக நான்கு வகைகளில் அருளனுபவம் பெற்றுச் சிறந்தார் என்பது சென்ற தலைப்பில் காட்டப் பெற்றது.

திருத்துறையில் தவநெறியையும், சித்தவட மடத்தில் மறுப்பவும் திருவடி சூட்டப் பெறுதலாகிய நற் பேற்றை யும், தில்லையில் கூத்தப்பெருமான் திருக்கூத்து அருணிறை அனுபவப் பேற்றையும் பெற்றுச் சிறந்தார் என்பது வரலாற் றடிப் படையில் காட்டப் பெற்றது.

அடுத்து, நம்பியாரூரருக்குத் தில்லையில் 'ஆரூருக்கு நம்பால் வருக' என்ற இறைவாக்கு ஆணையாக அமை கிறது. அதனையேற்று ஆரூருக்குச் செல்லும் நம்பியாரூரர் திருவாரூரில் மூவகைப் பேறுகளை இணைத்துப் பெறக் கூடிய இறைவனாணையைக் கேட்கிறார்.

1. "தோழமையாக நம்மைத் தந்தனம்"
2. "நாம் முன்பு தொண்டு கொண்ட வேள்வியில்
   அன்று நீ கொண்ட கோலம் என்றும் புனைக"
3. "நின் வேட்கை தீர வாழி, மண்மேல் விளையாடுவாய்"

என்று இங்கே குறிப்பிடப்பெற்ற மூன்றையும் ஒரே ஆணையால் ஒரே சமயத்தில் அருளவும் ஏற்கவும் ஆகிய நன்மை நம்பியாரூரருக்கு அமைகிறது. மூன்றையும் ஒரு சேர இணைத்துக் கொடுத்த திருவருள் நோக்கினை வர லாற்று மரபுடனும் சேக்கிழார் அமைக்கும் தெய்வநெறி விளக்கத்துடனும் இணைத்துக் காணுவதே இத்தலைப்பின் அமைந்த பொருண்மை. பேறுகள் மூன்றாயினும் ஒருமை பெற ஒத்து உறவாக அமைந்தவை என்ற காரணத்தை

விளக்கும் வகையில் இத் தலைப்பானது 'ஒத்துறவமைந்த முத்திறப் பொலிவு' என அமைவதாயிற்று. நம்பியாரூரர் வரலாற்றில் பல்வேறு திருப்பங்களை அமைத்துக் கொடுத்து, சமய, தத்துவ, சமுதாய மாற்றங்கள் பலவற்றைத் திரு வருளே அமைத்துக் கொடுக்கின்ற அருமையை இப்பகுதி யில் நாம் உணர முடிகிறது. ஆய்வாளர்களின் கருத்து வேறுபாடுகளுக்கு இடம் தரும் நிகழ்வுகள் பலவற்றையும் ஆய்ந்து தெளிய வேண்டிய அவசியமும் அருமையும் கொண்ட பகுதியாகவும் இப்பகுதி அமைகிறது.

**தில்லையில் வானொலி**

தில்லைக் கூத்தனின் திருநடம் கும்பிடப் பெற்றதும் மண்ணிலே வந்த பிறவியே தமக்கு வான்மையும் மேன்மை யும் இன்பமும் ஒருங்கு துய்க்க வாய்ப்பாக இருந்தது என்று மகிழ்ந்து திருப்பதிகம் அருளிச் செய்தார் என்பது சேக்கிழார் திருவாக்கு. ஆனால், அப்போது அருளப் பெற்ற பதிகம் கிடைக்கவில்லை.

அந்நிலையில், தாண்டவம் புரியும் தம்பிரானார் திரு வருளினால் **"ஆரூரில் நம்பால் வருக"** என வானில் அடுத்த ஒரு ஒலி கேட்டது. அத்தகைய திருவருள் நாதத் தால் புத்துணர்வு பெற்று எழுந்த நம்பியாரூரர், அப்பணி தலைமேற் கொண்டு, தில்லைத் தென்திசை வாயில் வழியே செலவு மேற்கொள்ளலானார்.

**கழுமலக் காட்சி**

நம்பியாரூரர் தில்லையிலிருந்து புறப்பட்டுக் கொள்ளிட நதியைத் தாண்டி சீகாழிப் பதியை நண்ணினார். திருஞான சம்பந்தப் பெருமான் அவதாரம் செய்தருளிய திருத்தலம் ஆதலாலும் உமையம்மை திருமுலைப் பாலூட்ட ஞானவா ரமுதமுண்ட பாலகனார் பாலறாவாயராக நின்ற நாட் டொடங்கித் திருமுறை பாடியருளிய தலம் ஆதலாலும் மிதித்தற்கு அஞ்சி, அந்நகரத்தின் புற எல்லையிலேயே வலம் செய்து வருவாராயினர். அப்போது கழுமலக் கடவுள் பாதிப் பெண்ணுருவாய கோலத்துடன் தோன்றிக் காட்சி கொடுத்தார்.

'சாதலும் பிறத்தலும் தவிர்த்து' எனத் தொடங்கும் திருக்கழுமலத் திருப்பதிகம் பாடினார். 'திருக்கயிலையில்

இருந்தபடி கழுமல வளநகர்க் கண்டு கொண்டேனே' என்ற பொருளில் அப்பதிகம் அமைவதாயிற்று.

திருஞானசம்பந்தப் பெருமான் திருப்பதிகப் பெருவழி என்னும் திருவருட் பெருநெறியைத் தோற்றுவித்தவர். அவ்வகையில் சீகாழிப் பதிக்குப் பன்னிரண்டு பெயர் உண்டென்றும், ஊழிதோறுஊழி கடல் கொள மிதந்த பூமியில் இறைவன் ஓம் என்ற தனிப்பெருந் தோணியில் வந்த போது, சீகாழி அழியாது உயர்ந்திருந்ததால் அவ்வூரிலேயே தோணியுடன் தங்கினர் என்றும், அவ்வகையில் பன்னிரண்டு தனிப் பெயர்களும், தனிக் கொள்கைகளும் உண்டு என எடுத்துக் காட்டி, பன்னிரு பெயர்த்தாம் புகலியின் சிறப்பினை விளக்கும் வகையில் மூல இலக்கியங்கள் பலவற்றை அமைத்துத் தந்தவர் ஞானசம்பந்தர்.

பன்னிரண்டு முறை அவ்வூர் கடல்கொள மிதந்த பெருமையுடையது என்று எடுத்துக் காட்டி, அவ்வப்போது அவ்வூர் பெற்ற பெயர்களை வரிசை பிறழாது சொல்ல வேண்டும் என்ற வரையறையையும் செய்தமைத்து, நிலை நாட்டியுள்ளார். அவ்வகையில் திருக்கழுமலம் என்பது பன்னிரண்டாவது பெயர்.

"பிரமபுரம் வேணுபுரம் பெரும்புகலி வெங்குரு நீர்ப்
பொருவில் திருத்தோணிபுரம் பூந்தராய் சிரபுரம் முன்
வரு புறவம் சண்பைநகர் வளர்காழி கொச்சைவயம்
பரவுதிருக் கழுமலமாம் பன்னிரண்டு திருப்பெயர்த்தால்"

என வரிசைப் படுத்திக் காட்டினார். இவற்றுள் 'காழி' என்பது பத்தாவது நிலை. ஞானசம்பந்தர் தம்மைப் பத்தாவது படியாகிய காழியில் நின்றவராக அமைத்துக்கொண்டு எனைய இரண்டும் (கொச்சைவயம், கழுமலம்) முன்னுள்ளவற்றிலேயே அடங்கி விட்டன என்று சொல்லி, ஒவ்வொரு முறையும் ஒவ்வொரு பெயரால் விளங்கி, பெயராலும் கொள்கையாலும் சிறந்தது காழி என்று விளக்கிக் காட்டியுள்ளார்.

"துயர் இலங்கும் உலகிற் பல ஊழிகள்
தோன்றும் பொழுதெல்லாம்
பெயர் இலங்கு பிரமாபுரம்"

என அவர் எடுத்துக் காட்டியமை கொண்டு தெளியலாம். காழியின் பன்னிரண்டு பெயர்களால் நிலைநாட்டப் பெற்ற

கொள்கைகள், பன்னிரண்டு பெயர்களுக்கென அமைந்த சிறப்புக்கள், தத்துவக் கொள்கைகள் ஆகியவற்றை, சென்னைப் பல்கலைக் கழகத் தத்துவத் துறை சார்பில் என்னால் எழுதி வெளியிடப்பெற்ற **"திருஞானசம்பந்தர் ஓர் ஆய்வு"** இரண்டு பாகங்கள் பார்த்துத் தெளிக.

திருக்கழுமலத்துக்குத் திருஞானசம்பந்தர் 'ஏகபாதம்' என அமைத்த மூல இலக்கியத்தில் கீழ்வரும் பாடல் காணப் பெறுகிறது.

"கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை
கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை
கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை
கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை"

என்பதே அப்பாடல்.

பிறப்பின் இழிவையும், அதற்குக் காரணமாகிய மும் மலங்களையும் கழுவுவன்.

(1) கருப்பநீரின்கண் பதிந்து சிரம் முதலிய அவயவ மாகத் தோற்றி, பூமியில் பிறந்து, பின்னர், தேய்ந்து அழி கின்ற இப்பிறப்பையும், பிறப்புக்குக் காரணமாகிய ஆண வம், கன்மம், மாயை என்ற மும்மலங்களையும் கழுவுவன்.

(2) **தனது பாதியாகிய திருவருளில் என்னை அகப் படுத்திக் கொண்டு, அந்த அருள் வழியாக என்னிடத்தில் இடையறாது வாழும் தன்னை எனக்குத் தந்து அடிமை குலையாமல் என் கண்ணும் விட்டு விளங்கும் கருத்தா வாக இருப்பவன்.**

(3) மாயாமலம் காரணமாக மயங்கி, பெத்த முத்தி இரண்டும் தெரியாமல் திண்டாடும் மலக்கட்டுடையவர் களுக்கு அரிதற் கருமையானவனாய், பொன்னுருவுடையவ னாய், படைப்பவனாகிய பிரமனின் சிரக் கபாலத்தில் பிச்சை ஏற்று உண்ணும் கருணையாளன்.

(4) திருக்கழுமலம் என்னும் மூவாப் பழங் கிழமைப் பன்னிரு பெயர் பெற்ற அனாதிமூலமாகிய பதியிடத்து, கவுணிய கோத்திரத்தில் தோன்றிய நான் நிவேதிக்கும் இப் பாடலை, மலம் நீங்கிய யாரேனும் தக்கார் ஒருவர் படிப்பா

ராகில், அவர் இதற்கு அவ்வப் பொழுதும் இயையும் உரை செய்வார்களாகுக.

இவ்வாறேயன்றி, ஒவ்வொரு பெயர்க்கும் ஏற்ற வகையில் தனித்தனிப் பதிகங்களும் பாடியுள்ளார். நம்பியாரூரரின் கழுமல வளநகர் அனுபவம் எவ்வாறிருந்தது என்று காண்பதும், அது ஞானசம்பந்தப் பெருமானுடன் ஒத்த அனுபவமுடையதாகச் செல்லுகிறதா என்று காண்பதும் ஒரு தேவையான விளக்கமாகும்.

நம்பியாரூரரின் காட்சி விடைமேலமர்ந்த மாதொரு பாகனைப் பற்றியதாக அமைகிறது.

திருக்கயிலையில் இருந்த நின் கோலத்தைக் கழுமல வளநகரிற் கண்டு கொண்டேன் (பாதிப்பெண் பாதி ஆண் என அமைந்த கோலம்) எனவும்;

என் மனத்தில் வந்து தங்கிக் கரந்தவன் – என் மனத்துக்கோர் இரும்புண்ட நீர்; மறவா மனம் பெற்றேன், பிறவாமைப் பெருமை பெற்றேன் எனவும்;

யான் அவனை அடைய எண்ணியபோது, சேய்மையில் உள்ளார் அவனைத் துதிக்கவும், அண்மையில் உள்ளார் அவனை வணங்கவும் அவற்றுள் ஒன்றையும் செய்யாது, அவனைத் தங்கள் வன்மையால் அடைய முயல்பவர்கள் பின்னே சென்று,

"முயல் அகப்படும் வலையில் யானை அகப்படும்"

என்று சொல்லிய அவர்களின் சொல்லைக் கேட்டு, அவ்வழியையே முற்றிலும் கடைப்பிடித்து, அவனிடத்து அன்புடையாரது தோற்றத்தை மேற் கொண்டிருந்தேன். என்னிடைப் பொருளைக் கயிலையில் இருந்தவாறே கழுமல வளநகரிற் கண்டு கொண்டேன் எனவும்;

வேள்வி முதலிய கருமங்களை மெய்யென்று துணிந்தவர்கள் பற்றுவிடமாட்டாது மனைவாழ்க்கையிலேயே கட்டுண்டு கிடத்தலும், முற்றத் துறந்தவர் போலக் காட்டினோரது பொய்யாய தவங்கள் ஏனையோர்களுடைய முயற்சிகளோடு ஒப்பக் கடிதில் அழிந்து போதலும் கண்கூடாக அமைய, அவற்றை மேற்கொண்டவர்கள் தாம் சேற்றில்

அழுந்தியிருப்பதை அறியாமல், நல்ல நீர்த் துறையிலே நன்கு மூழ்கியிருப்பதாகக் கருதி, பிறரையும் தம் வழியிலே செல்லக் காட்டிய தீநெறியை யான் பொருட்படுத்தாது வந்து, பேரருளாளனைக் கழுமல வளநகர் கண்டேன் எனவும்;

செழுமலர்க் கொன்றையும் கூவிள மலரும் விரவிய சடைமுடி அடிகளை நினைந்து அழும் மலர்க் கண்ணிணை அடியவர்க் கல்லால் அவன் அடியிணை இரண்டும் அறிதல் அரிது என்று வந்து கழுமல வளநகர்க் கண்டேன் எனவும்;

சாதலும் பிறத்தலும் தவிர்த்து எனை வகுத்துத் தன் னருள் தந்த நம் தலைவனை, துணையென்று நான் தொழப்பட்ட ஒண்சுடரை, விருத்தனைப் பாலனைக் கன விடை விரவி விழித்து எங்கும் காணமாட்டாது விட்டிருந் தேன், குழைக்கரும் கண்டனைக் கண்டு கொள்வானே பாடுகின்றேன், சென்று கூடவும் வல்லேன், வரும் பெரு வல்வினை என்றிருந்து எண்ணி வருந்தலுற்றேன், மறவா மனம் பெற்றேன். விரும்பி என்மனத்திடை மெய் குளிர்ப் பெய்தி வேண்டி நின்றே தொழுதேன்; நினைதரு பாவங்கள் நாசங்களாக நினைந்து முன் தொழுது எழப்பட்ட ஒண் சுடரை, எங்களது ஒளியை கயிலையில் இருந்தவாறே நான் கழுமல வளநகரிற் கண்டு கொண்டேன் எனவும்;

கூறப் பெற்றவைகளைத் தொகுத்துச் சிந்தித்தால் திருக் கழுமலத்தைப்பற்றித் திருஞானசம்பந்தர் அமைத்த கருத்தும் நம்பியாரூரர் நேர்க் காட்சியாகக் கண்டு அனுபவப்பட்ட நிலையில் அருளும் கருத்தும் ஒத்துள்ளமை காணலாம்.

எடுத்த உடம்பின் இழிவையும் அதற்குக் காரணமான மும்மலங்களையும் கழுவுவன்; கழிவை நீக்குவன்; திருவரு ளால் என்னை அகப்படுத்திக்கொண்டு, என்னிடத்தில் இடையறாது வாழும் தன்னை எனக்கே தந்து, அடிமை குலையாமல் என்னைச் செயற்படுத்தி வாழவைப்பன் என்ற ஞானசம்பந்தரின் கொள்கை விளக்க அனுபவ மாகவே நம்பியாரூரரின் பதிகம் அமைகிறது. அழுத கண் ணினால் அவன் மலரடி இரண்டையும் அணையலாமே யன்றிப் பிறர் கூறும் வழி நடந்தால் ஏமாற்றம் ஒன்றைத்

தவிர வேறு இல்லை. அவைகளெல்லாம் "முயல் அகப் படும் வலையில் யானை அகப்படும்" என்ற கதையைப் போன்றது, என்று நம்பியாரூரர் அமைப்பது அருள்நெறி ஒன்றே சிறந்தது என்பதை ஏற்கும் நிலையில் அமைந் துள்ளது.

மேலும், நம்பியாரூரர் **'என்னிடைப் பொருளை'** என் றும், துணை என்று நான் தொழப்பட்ட **ஒண் சுடர்** என்றும், என் மனதுக்கோர் இரும்புண்ட நீரை என்றும் கூறும் நிலையில் அவருடைய அகநிலை அனுபவம் இன்னதென நாம் உணரும் வகையில் அமைகிறது. சுருங்கக் கூறின்,

(1) "தன்னருளை எனக்குத் தந்து என்னை அதனால் அகப் படுத்தி, என்னிடத்தில் இடையறாது வாழும் தன்னை எனக்கேதந்து அடிமை மாசு படாமலேயே வாழவைப்பன்"

(2) "சாதலும் பிறத்தலும் தவிர்த்தான்"

(3) "என்னை அருள் வாழ்வில் வாழும் வகைமையை வகுத்துத் தந்தான்"

என்ற இந்த மூன்று நிலைகளை—அவர் பெற்றுச் சிறந்த அனுபவ ஒழுங்கு முறைகளை நாம் கழுமல வளநகர்ப் பதிகத்தால் அறிய முடிகிறது.

இனி, கழுமல வளநகர்ப் பதிகம் சிறப்பாக நமக்கு எடுத்துக் கூறும் **இரண்டு** செய்திகளை மனத்தில் நிறுத்துதல் கடன். இந்த இரண்டும் இறைவனை அடைய வேண்டும் என்ற கருத்துடையவர்கள் மேற்கொண்ட, மேற்கொள்ள வேண்டிய வழிவகைகளைப் பற்றி நம்பியாரூரர் ஆய்ந் தெடுத்துக் கூறும் முறை. இவைகளை ஒழுங்குற ஆய்வதன் மூலம், நம்பியாரூரரின் மனநிலை, சமயநெறிகளைப் பற்றிய அவர்தம் மதிப்பீடு ஆகியவைகளைத் தெளிவாக அறியலாம்.

(1) இறைவனை அடைய எண்ணுபவர்கள், சேய்மை யில் உள்ளாராயின் அவனைத் துதிக்கவும், அண்மையில் உள்ளாராயின் அவனை வணங்கவும் வேண்டும். இவ் விரண்டையும் செய்யாமல், **வன்மையால்** அடைய முயல்ப வர்கள் பின்னே சென்றேன். அவர்கள் சொல்லைக் கேட்டு, அவர் கூறும் வழியையே பின்பற்றினேன்.

**'முயல் அகப்படும் வலையில் யானை அகப்படும்'**

என்பதே அவர்தம் நெறிபற்றி நம்பியாரூரரின் ஆய்வு. அன்புடையவர்களின் தோற்றத்தை மேற்கொண்டிருந் தாலும், நம்பியாரூரர், வன்மையால் அடைய முயல் வாரின் சொல்லையும் செயலையும் பின்பற்றி அமைந்தி ருக்கின்றார்.

நெறியைப் பொறுத்தவரையில் அது மறைமுகநெறி எனத் தெரியவருகிறது. வலைமூலம் பற்றுதல். வலையின் இயல்பும் ஆற்றலும் முயலை அகப்படுத்தலாம். ஆனால், யானையை அகப்படுத்தும் என்று கருதியது, ஆற்றலை மிகைப்பட எண்ணிய குற்றம். அவ்வகையில் நம்பியா ரூரர் எத்தகைய ஒரு நெறியை எண்ணியிருக்கலாம் எனில், அது ஒருவகையில் **யோகத்துடன்** இணைந்த ஒன்றாக அமையலாம்.

வன்மையுடையது, வலை என நின்று கட்டுப்படுத்தும் ஆற்றல் உடையது என்றவகையில் யோகம், ஞானம் என்ற இரண்டையுமே நம்பியாரூரர் கருதியதாகக் கொள்ள லாம். யோகநெறியில் நிற்பதும், ஞானநெறியில் நிற்பதும் வன்மையானவைகளே, ஆனால், ஞானம் நேர்நிலையில் நின்று இறைவனை எய்தவைக்கும், யோகமோ நேராக இறைவனை அடைதற்குரிய வழியாக அமையாமல், ஞான நெறியிற் கொண்டுபோய் நிற்க வைத்து, பின்னரே இறை வனை அடையச் செய்யும். நேராக முயலையோ, யானை யையோ பற்ற இயலாமல், மறைமுகமாக அமைக்கப் பெற்ற வழி என்பதாக வலை குறிக்கப்பெறுவதால் நம்பியா ரூரர் **யோக நெறியை** இதனால் குறிப்பிட்டார் எனக் கொள்ளுதல் பொருத்தமுடையதே.

அடுத்த நிலையில், **இல்லறம் துறவறம்** என்ற இரண்டு நிலைகளில் நின்றவர்களின் கூற்றும், செயலும், அந்நெறி களின் இயல்பும் நம்பியாரூரரால் எடுத்துக் கூறப் பெறு கின்றன.

மறையிடைத் துணிந்தவர் மனையிடை இருத்தல்; வஞ்சனை செய்தவர் பொய்கையுள் மாய்தல், என இரு நெறிகளை எடுத்துக் காட்டுகின்றார்.

மறையிடைத் துணிதல் இருவகை. கருமகாண்டம் ஞானகாண்டம் என இரண்டாகி நின்ற வேதத்தின் மூலம் இறைவனை அடையும் நெறிகளை ஆராய்தல் என்ற முயற்சியை மேற்கொண்டபோது, இருவகை நெறிகள் கொள்ளப் பெற்றன.

*(1)* வேதத்தின் முதற்பகுதியாகிய கருமகாண்டத்தின் வழிநின்று, வேள்வி முதலிய செய்து, அவ்வேள்வி முதலிய வற்றின் மூலம் இறைவனை அடைய எண்ணுபவர்கள், பற்றறுதல் என்பதை நடைமுறைப் படுத்த இயலாதவர் களாகி, இல்லறத்தில் ஆழ அமிழ்ந்து விட்டார்கள்.

*(2)* வேதத்தின் பிற்பகுதியாகிய ஞானகாண்டத்தின் வழிநின்று, துறவை மேற்கொண்டு, முற்றத்துறந்தார்போல ஒருசிலர் நின்றார்கள். பொய்மையே அதில் தலைநின்றது. எனவே, வஞ்சிக்கப் பெற்றுவிட்டார்கள்.

**நயத்திற்குச் சுந்தரனார்** என்ற வாக்கின் வண்ணம் இவ்விருநெறிகளைப் பற்றியும் நம்பியாரூரர் அமைக்கும் மதிப்பீடு மிகமிக நயமானது.

''பொய்கையுள் மாய'', பொய்கையுள் குளித்தல் என்ற அடிப்படையிலேயே பொய்கையுள் மாண்டு போனார்கள். நீர்த்துறையிற் சென்று குளிப்பதாகவே அவர்தம் நிலை காணப்பெற்றாலும், அவர்கள் பெற்றதோ, சேற்றில் அமிழ்ந்து மீளமுடியாமல் நின்ற இழிவு.

இல்லறத்தில் இருப்பவர்களை, மனை இடை இருப்ப என்றும், இல்லறத்தில் ஆழ்ந்து விட்டார்கள் என்றும், துறவறத்தில் இருப்பவர்களைப் பொய்கையில் இருப்பது போலத் தோற்றமளித்தாலும், பொய்—கையுள் இருந் தார்கள் என்றும், அனைத்துப் பற்றுக்களையும் மாய்த்து மேலேபோக நினைத்தவர்கள் மாய்ந்து போனார்கள் என்றும் எடுத்துக்கூறி, அவ்விருவரும் இன்றுவரையில் தம்முடைய உண்மை நிலையை உணராமல், மற்றவர் களைத் தம் நெறியைக் கடைப்பிடிக்க வேண்டும் என்று அழைப்பது, பொய்கையில் நீராட வருக என அழைப்பது போல இருக்கிறது என்று எடுத்துக்காட்டி, அவர்களின் உண்மை நிலை என்னவெனில், சேற்றில் ஆழ்ந்து மாய்ந்து

கொண்டிருக்கிறார்கள்; தூய்மையைப் பெறவேண்டிய வர்கள் துன்மையைப் பெறுகிறார்கள் என்பதே என்றும் குறிப்பிடுகின்றார்.

இவ்வாறு, பிறநெறி நின்றாரைக் குறிப்பிட்ட நம்பியா ரூரர் இறைவனை நேரே காணவும், அவனை அடையும் நெறியை இது என அறியவும் ஆம் பேறு பெற்று, அந் நிலையில் இறைவனை,

> என் இடைப் பொருளை
> என் மனத்து இரும்புண்ட நீரை

என்று, தம்முள் இணைந்து, தம்மிடை விளங்கும் சோதிப் பொருளாக அமைத்துக் கண்டும், அடையும் நெறியாக,

> ''நினைந்திட்டு அழுமலர்க் கண்ணிணை
> அடியவர்க் கல்லால் அறிவரிது''

என்பதை எடுத்துக்காட்டியும் விளக்கினார். அவ்வகையில் கயிலையில் விளங்கும் பாதிப்பெண்ணுருக் கோலமே, கழுமல வளநகர்க் கோலமாகவும், அதுவே தன்னுயிரில் கலந்து தங்கியிருந்த 'இடைப்பொருள்' எனவும், 'இரும் புண்ட நீர்' எனவும் விளங்கிய ஒண்சுடராகவும் அமைந் தது என இணைத்துக் காட்டினார்.

கயிலைக் கோலமும், கழுமல வளநகர்க் கோலமும், தம் இடை நின்ற அனுபவக் கோலமும் ஆகிய மூன்றும் ஒன்றே என இணைத்துக் காட்டியதன் பொருள் நுட்பம் உணர்தல் வேண்டும்.

அவ்வகையில், சாதல் பிறத்தல் நீங்கிய நெறியாக அருள் நெறியை அமைத்து, அந்நெறியில் நிற்பவனாகத் தன்னை வகுத்தமைத்து, **'அருள்நெறியை'** நேர்நிலை நெறியாக அமைத்தான். அவன்தன் அடியிணைகளை நினைந்து நினைந்து கண்ணிணைகள் அழுதழுது அமையும் நெறிநின்றால் அவனை அறியவும் அடையவும் ஆம் நிலை பெறலாம் எனத் தம்மை வகுத்தமைத்த முறையையும், தமக்கு வகுத்தமைத்துக்காட்டிய நெறியின் தகவையும் கழுமலவளநகர்ப் பதிகத்தில் சிறப்பித்துக் காட்டியுள்ளார்.

நம்பியாரூரர் அமைத்துக் காட்டிய கழுமலவளநகர்ப் பதிகப் பொருளைத் திருவருளுணர்வுடன் சிந்தித்தால்,

திருக்கயிலைப் பரம்பொருள் தம்மை நோக்கி வந்து, தம்மில் புகுந்து கலந்த நிலையை எடுத்துக் கூறும் பதிகமாக, **"இடையாறு இடைமருது எய்தமான்"** என்று கூறும் இடையாற்றுப் பதிகப் பொருளையும் அமைக்கலாம் என்ற உண்மை தெளிவாகும்.

அம்மான் எனக் கயிலைக்கிறையையும், பெம்மான் எனத் திருத்தலத்து நின்ற இறையையும், தன்னைநோக்கி வந்து, தன்னை அடைந்தமான் என்ற வகையில், **எய்தமான்,** யான் அடைய நின்றமான் என்ற வகையில் **எம்மான் எய்தமான்** எனத் தன்னுள் வந்து கலந்துநின்ற இறையையும் இணைத்துக்காட்டிய கருத்தின் அடிப்படையில், "இடையாறு, இடைமருது எய்திய மான்" என்றமைத்துக் காட்டிய பதிகமே 'இடையாறு இடைமருது'ப் பதிகம் எனக் கொள்ளலாம். இப்பதிகம் எப்போது பாடப் பெற்றது என்ற வரலாறு சேக்கிழார் பெருமானால் அமைத்துக் காட்டப் பெறவில்லை யென்றாலும், கழுமல வளநகர்ப் பதிக அனுபவத்தை ஒட்டிய அனுபவப் பதிகம் என்று கொள்வதில் தவறு ஏதும் இல்லை எனக் கொள்ளலாம். எனினும், **திருப்பரங்குன்றம்** என்ற பதிகத்தில் காட்டப்பெறும் அனுபவத்துக்கு முற்பட்ட அனுபவம் எனக் கொள்ள இடந்தருகிறது.

திருப்பரங்குன்றப் பதிக அனுபவம் அதற்குரிய இடத்தில் எடுத்துக்காட்டி விளக்கப்பெறும். அவ்விடத்தில் இடையாற்றுப் பதிக அனுபவமும் இணைத்துக் காட்டப் பெறும்.

### ஆரூர் எல்லையில்

சீகாழியின் எல்லையில் நம்பியாரூரருக்கு அருளப் பெற்ற 'கழுமலவளநகர்க் காட்சி' மறையவே, வெருக் கொண்டார்; பின் தெளிந்தார். ஒருவாறு தேறி, திருக் கோலக்கா, திருப்புன்கூர், முதலிய தலங்களை வணங்கிக் காவிரியைக் கடந்து, மயிலாடுதுறை, அம்பர்மாகாளம், திருப்புகலூர் ஆகிய பதிகளை வணங்கிக் கொண்டு **திருவாரூரை,** அணைந்தார். அந்நிலையில்,

> "ஆராத காதலின் நம் ஆரூரன் நாமழைக்க
> வாரா நின்றான் அவனை மகிழ்ந்து எதிர்கொள்வீர்"

என்று (பெரியபுராணம் 264) திருவாரூரில் வாழ்பவர்களுக்கு, இறைவன் அறிவிக்கின்றான். இது ஒருவர் இருவர் அளவில் சென்றுரைத்ததன்று. திருவாரூர்க் கோயிற் பூசை செய்வார்க்குக் கூறியதன்று. திருவாரூர் வாழ்வார் அனைவரும் கேட்க எழுந்த ஒலி. இச்செய்தியைவரலாறு என அமைக்கும் சேக்கிழார், இறைவன் நேரே, "தேராரும் நெடுவீதித் திருவாரூர் வாழ்வார்க்கு அருள் செய்தார்" என்றே குறிப்பிட்டுக் காட்டுகின்றார். அந்நிலையில், இவ்வறிவிப்பைச் செயற்பட முனைந்தவர்கள் திருத்தொண்டர்களே என்றும் குறிப்பிடுகின்றார்.

திருத்தொண்டர்கள் ஒருவருக்கொருவர் தாம் கேட்டதைப்பிறரோடும் பேசிக் கொள்கின்றார்கள். யானும் கேட்டேன், எனக்கும் அவ்வாறே கேட்டது எனத் திருத்தொண்டர்கள் தம்முள் இச்செய்தியைக் கலந்துரையாடலின் மூலம் நிறைவுறுத்தினர். இறைவனின் அறிவிப்பாலும், அதனை எடுத்துக் கூறிக்கலந்துரையாடல் அமைத்த நிறைவாலும் திருத்தொண்டர்களிடத்தே ஒரு கொள்கை உருப்பெற்றது.

"எம்பிரானார் அருள்தான் இருந்த பரிசு இது"
ஆகையால், நம்பிரானாவார் ஆவார்
அவர் அன்றே"

என்ற கொள்கையைச் சேக்கிழார் '**நலம்**' (பெரியபுராணம் 265) என்றே குறிப்பிட்டுக் காட்டுவாராயினர்.

திருத்தொண்டர்கள் இறைவனைத் **தம்பிரானார்** என்றும் **எம்பிரானார்** என்றும் குறிப்பிடும் வழக்காறுகள் போலவே, நம்பியாரூரர் '**நம்பிரானார்**' என்று குறிப்பிட்டுக் கூறத்தகும் வழக்காற்றுக்குரிய வான்மை பெற்றவராகிறார் என்பதே.

இந்நிலையில் ஆரூர் எல்லையில் நம்பியாரூரருக்குப் பெரியதோர் மங்கல வரவேற்பு ஒன்று அமைகிறது.

"ஆராத காதலின் நம் ஆரூரன்
ஆராத காதலின் நாம் அழைக்க
ஆராத காதலின் வாராநின்றான்"

எனநின்ற சேக்கிழாரின் வாக்கின் தெய்வநலம், பொதுவாக மூன்று நிலைகளை அமைத்துக் காட்டினாலும், 'நம்

ஆரூரன், நாம் அழைக்க' என்ற நிலைகளில் அழுத்தமுற நின்று ஆணையிடுகின்றது என்பதைச் சிறப்புற மனத்தில் இருத்திக் கொள்ளல் நம் கடன்.

"ஆராத காதலின் நம்ஆருரன் நாமழைக்க வருகின்றான்" என்ற ஆணையை அமைத்தது யார்? ஆரூர்ப் பெருமான் அதை அமைத்தாரா? இவ்வினாவைச் சைவ உலகம் ஏற்காது. ஏனெனில், எத்தலத்து இருந்தாலும் இறைவன் ஒருவனே என்பதுதான் முடிந்த முடிவு. இங்கே, இந்த ஆணையை எடுத்து அறிவுறுத்திய இறைவனைச் சேக்கிழார் "நீராரும் சடை முடிமேல் நிலவணிந்தார் அருள் செய்தார்" என்று பொதுவாகவே அமைத்துக் கூறியுள்ளார்.

ஆயினும், இவ்வினாவுக்கு உரிய அடிப்படைக் காரணம் இல்லாமலில்லை என்பதை மரபுவழிச் சைவம் ஏன்று கொளாதிருக்க முடியாது. திருஞானசம்பந்தப் பெருமானுக்குக் காட்சி அருளிச் சில ஆணைகளை அமைக்கும்போது காழிப்பெருமானே, காழிக் கோலத்தில் நின்று அருளியிருப்பதைச் சான்றாகக் கொண்டு தெளிதல் வேண்டும். காழிக்கடவுள் வீழிப்பெருமான் திருவுருவிலேயே நின்று காட்சிப்படுவதை அன்பால் நெகிழ்ந்து காண ஒருப்படவேண்டும்.

"**புகலி நிலாவிய புண்ணியனே**
எறிமழுவோடு இளமான் கை யின்றி
இருந்த பிரான் **இது என் கொல் சொல்லாய்**
வெறிகமழ் பூம்பொழில் சூழ்மிழலை
விண்ணிழி கோயில் விரும்பியதே"

எனப்பதிகம் முழுவதிலும் அமைத்ததையும், அவ்வாறே, திருமருகல் நிலாவிய மைந்தன் திருச்செங்காட்டங் குடியைக் காமுறவு கொண்டு சென்றது ஏன் என வினவு முகத்தால்,

"அங்கமும் வேதமும் ஓது நாவர்
அந்தணர் நாளும் அடிபரவ
மங்குல் மதிதவழ் மாடவீதி
**மருகல் நிலாவிய மைந்த சொல்லாய்**
செங்கய லார்புனற் செல்வமல்கு
சீர்கொள் **செங் காட்டங் குடியதனுள்**

கங்குல் விளங்கெரி யேந்தியாடும்
கணபதி யீச்சரங் காமுறவே''

என்று அப்பதிகம் முழுவதும் அமைத்துக் காட்டியிருப் பதையும்,

திருநள்ளாற்றுப் பெருமான் திருவாலவாயிலில் (மதுரை) அமர்ந்தது என்கொல் என்று வினவுமுகத்தால்,

''பாடக மெல்லடிப் பாவையோடும்
படுபிணக் காடிடம் பற்றிநின்று
நாடக மாடுநள் ளாறுடைய
நம்பெருமா னிதுவென்கொல் சொல்லாய்
சூடக முன்கை மடந்தைமார்கள்
துணைவரொடுந் தொழுதேத்தி வாழ்த்த
ஆடகமாட நெருங்கு கூடல்
ஆலவாயின்கண் அமர்ந்த வாறே''

என அப்பதிகம் முழுவதிலும் அமைத்துக் காட்டியிருப்பதை யும் வெற்றுரை எனக் கொண்டு தள்ளின் வீணே அவம் புகுந்து வாழ்விழக்கும் நிலையே உண்டாகும்.

அவ்வகையில், திருச்சிற்றம்பலவர் திருவருளால் **''நீ திருவாரூரில் நம்பால் வருக''** என்ற அருள்மொழி கேட்கப் பெற்றது. இனி, ஆரூரில், 'நம் ஆரூரன், நாம் அழைக்க வருகின்றான்' என்ற மொழி கேட்கப் பெற்றது. திருச் சிற்றம்பலத்து அருள் மொழியும் திருவாரூர்த் திருவீதி அருள் மொழியும் 'நம்' என்ற உறவுச் சொல்லோடு இணைந்து நின்ற இணைப்பையும் உறவையும் கொள்கை யையும் திருவருள் வழிநின்று தெளிதல் வேண்டும். இவற் றோடு பின்னர், ''தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்'' எனத் தில்லையை முதன்மைப் படுத்தி எடுத் தோதிய திருவருள் மெய்ம்மொழியையும் இணைத்துக் காணல் வேண்டும். இங்கே குறிப்பிடப் பெற்றவைகளுடன், திருவாரூருக்கு வழிபாடு செய்ய வந்த தேவார மூவரும்—திரு ஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், நம்பியாரூரர்—**ஆரூர்ப் பெருமான் எம்மையும் ஆள்வரோ**—என்ற அமைப்பில் பதிகம் பாடியிருப்பதன் நுட்பத்தையும் இணைத்துக் காண வேண்டும்.

திருஞானசம்பந்தப் பெருமானும் திருவாரூரை அணுகச் சென்ற எல்லையில், திருவாரூர் அடியவர் குழாத்தொடும்

ஏனையோரும் வந்து வரவேற்க, அப்போது அடியவர் கூட்டத்தை வணங்கிய நிலையில், காழியார்,

"அந்த மாயுல காதியு மாயினான்
வெந்த வெண்பொடிப் பூசிய வேதியன்
சிந்தை யேபுகுந் தான்திரு வாரூரராம்
**எந்தை தானெனை ஏன்றுகொளுங் கோலோ"** (3—45—1)

என்று அருளியதையும் இங்கே இணைத்துக் காணல் வேண்டும்.

மேலே கூறப் பெற்றவாறு, அப்பரடிகளும் ஆரூர் சென்று அணைகின்ற காலையில் நிகழ்ந்தவற்றையும் இணைத்துச் சிந்தித்தல் வேண்டும். ஆரூர் எல்லையில் எதிர்கொண்டு வணங்கி வரவேற்ற எல்லையிலாத் திருத் தொண்டர்களைப் பணிந்து நின்று,

"குலம்பலம் பாவரு குண்டர்முன்
**னே நமக்கு உண்டுகொலோ**
அலம்பலம் பாவரு தண்புனல்
ஆரூர் அவிர்சடையான்
சிலம்பலம் பாவரு சேவடி
யான்திரு மூலட்டானம்
புலம்பலம் பாவரு **தொண்டர்க்குத்**
**தொண்டராம் புண்ணியமே"** (4—101—1)

என்று எடுத்த திருப்பாட்டு முதலாக அப்பதிகப் பாட்டுக்கள் அனைத்திலும் "தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியம் நமக்கும் உண்டு கொலோ" என்று விதந்து கூறி, வணங்கி, ஆரூர்ப் புகுந்தார் என்பதையும் அறிதல் வேண்டும்.

தேவார மூவரும் ஆரூரை வந்தணையும்போது, ஆரூர்ப் பெருமானைப் பற்றி அவர்கள் கூறியவை சிந்திப்பதற் குரியவை. அனைத்துத் தலங்களிலும் உள்ள இறை வனைப் போலவே ஆரூர்ப் பெருமானும் இருக்கிறான் என்ற வகையில் ஒரு பொதுத் தன்மையும், அனைத்துத் தலங் களில் உள்ள இறைவனைப் போலன்றி, மாறுபட்டும் இருக் கிறான் ஆரூர்ப் பெருமான் ஆதலின், இரு தன்மைகளையும் இணைய நிறுத்தி விளக்கிக் காட்டும் வகையிலேயே தேவார மூவரின் சொல்லோவியங்கள் அமைந்துள்ளன.

"எந்தை இருப்பதும் ஆரூர்" என்பதனால் பொதுத் தன்மை சுட்டப் பெறுகிறது. "அவர் எம்மையும் ஆள்வரோ

கேளீர்" என்று கூறுவதன் மூலமாக ஆரூர்ப் பெருமானுடைய சிறப்புத் தன்மையும் சுட்டப் பெறுகிறது. ஆரூர்ப் பெருமானின் சிறப்புத் தன்மைக்குரிய அடிப்படையைத் தெளிவுற விளங்கிக் கொள்ளுதல் வேண்டும். அப்பொழுது தான் நாவலூரர் ஆரூரராக அமைதற்குரிய அடிப்படை உண்மையை நாம் தெளிந்து கொள்ள இயலும்.

## ஆரூர்த் தலத்து அருமை

ஆரூர்த்தலம் முதலில் இருந்த அமைப்பு, அதன் வளர்ச்சி, முற்ற முடிந்த நிலையில் அதன் ஆக்கம், ஆரூர் வளர்ச்சியும் ஆக்கமும் பெற்றமைக்குக் காரணம் ஆகியவைகளை முழுமையாகத் தம் பதிகங்களில் அமைத்துக் காட்டிய பெருமை, திருநாவுக்கரசு வளர் திருத்தொண்டின் நெறிவாழ வருஞானத் தவமுனிவர் வாகீசர் என்று சேக்கிழாரால் புகழ்ந்தோதப் பெற்ற அப்பரடிகளுக்கே உண்டு. அப்பரடிகள் திருப்பதிக வழிநின்று ஆரூர்த் தலத்தின் அமைப்பு, வளர்ச்சி, பீடு ஆகியவை பற்றிய விளக்கங்கள் **திருநாவுக்கரசர் ஓர் ஆய்வு** என்ற நூலின் இரண்டாம் பகுதியில் அமைக்கப் பெற்றுள்ளன. நம்பியாரூரர் வரலாற்றைத் தெரிந்து கொள்ள வேண்டிய இன்றியமையாமை கருதி, ஒரு சுருக்கம் மட்டும் இங்கே காட்டப் பெறுகிறது.

**பூங்கோயில்:** திருவாரூர்த் தலத்து இறைவன் திருக்கோயிலின் பெயர் பூங்கோயில். திருமூலட்டானம் என்ற பெயரும் உண்டு. இறைவன் பெயர் புற்றிடங் கொண்டான்; மூலட்டானன் என்பன. அம்மையின் பெயர் அல்லியம் பூங்கோதை அம்மை; கமலாம்பிகை. திருக்கோயில் திருக்குளம் கமலாலயம்.

**தேவசபை:** பூங்கோயிலில் உள்ள தேவ சபையில் எழுந்தருளியிருப்பவர் **தியாகேசர்.** இவர் சந்நிதியில் நந்தி நின்ற கோலத்தர். திருவாரூர் உடையார், வீதிவிடங்கமா தேவர் எனவும் இவர் அழைக்கப் பெறுவார். அம்மையின் பெயர் திருக் காமக் கோட்டமுடைய நாச்சியார். பங்குனி உத்தரப் பெரு விழாவும், ஆதிரை விழாவும் இவருக்கு உரியவைகளே. மனுமுறை கண்ட சோழன் வரலாற்று அருளிப்பாடு இவருடையதே.

**ஆரூர் அரநெறி:** திருவாரூர்ப் பூங்கோயிலில் இரண்டாம் திருச்சுற்றில், தென்கிழக்குத் திசையில், மேற்கு முகம் நோக்கிய கோயில். இறைவன் பெயர் அகிலேசர். உமையின் பெயர் அகிலேசுவரி. இக்கோயிலுக்கு அப்பரடிகள் பதிகங்கள் இரண்டு மட்டுமே உள்ளன. அரநெறி என்பதற்கு அரன்நெறி, சிவன்நெறி எனப் பொருள் கொண்டு அது அக்கோயிலின் பெயர் என்பர். அறநெறி என்பதே தவறுதலாக அரநெறி என அமைந்து விட்டது எனவும் கூறுவர்.

அறநெறியர் தீநிறத்தர், அவரே அருள்மன்னர், அவரது வலக்கரத்து அமைந்த தீயானது நெருப்பை வீசுவதற்குப் பதிலாக, அருட்கதிர் வழங்குவது, இவரே அம்சமந்திரம் சொல்பவரும் அசபாநடம் ஆடுபவரும் ஆகிய தியாகேசர் என்பன அப்பரடிகளின் அனுபவ விளக்கம். நமிநந்தியடிகள் தண்ணீர் விளக்கெரித்தது இங்கேதான்.

**பரவையுண் மண்டளி:** நம்பியாரூரரின் மனைவியாகிய பரவையார் தம்முடைய மாளிகையின் ஒரு பகுதியில் மண்ணாற் சிறு கோயில் கட்டி வழிபட்டார். அதுவே பரவையுண் மண்டளி எனப் பெற்றது. இது தற்போது தெற்குக் கோபுரத்துக்கு அண்மையில் உள்ளது. நம்பியாரூரரின் பதிகம் உண்டு. ஒரு காலத்தில் வருணன் இந்நகர் மீது அனுப்பிய கடல் அவ்வூரை அழிக்க முற்படும்போது, அதனை உண்டமை பற்றி இப்பெயர் வந்தது என்று கூறுவோரும் உண்டு.

**ஆர்தலும் ஊர்தலும் இணைந்த ஆரூர்**

பற்றி அமர்தல், ஒற்றி ஊர்தல் என்ற இருநிலைகளைக் கொண்ட காரணத்தால் ஆர் + ஊர் = ஆரூர் எனப்பெற்றது.

ஆர்தல்—அமைதல். பற்றப் பெறும் பொருள்களையெல்லாம் தன்னுள் அடக்கிக் கடந்து நிற்றல். ஊர்தல்—ஒரு பொருளை ஒற்றி, அப்பொருள் உயர உயரத் தானும் உயர்ந்து, இறுதியில் அப்பொருளை விட உயர்ந்து நிற்கும் நிலை.

நமிநந்தியடிகள் ஆரூர் அறநெறியில் **தண்ணீரால் விளக்கெரித்தார்.** வழிபாட்டுக்கு வந்த நமிநந்தியடிகள்

மூலட்டான நாதரை வணங்கிய பின் அறநெறி சென்று வழிபட்டார். விளக்கு எரியவில்லை. விளக்கு எரிக்க எண்ணினார். நெய் இல்லை. அவர் வீடு நெடுந்தூரம்; வீட்டுக்குப் போய் எடுத்துவர இயலாது. பக்கத்திலிருந்த ஒரு வீட்டில் போய் நெய் கேட்டார். அது சமணர் வீடு. அவ்வீட்டிலிருந்த சமணர்,

"கையில் விளங்கு கனலுடையார் தமக்கு
விளக்கு மிகை காணும்
நெய்யிங்கில்லை விளக்கு எரிப்பீராகில்
நீரை முகந்து எரித்தல் செய்யும்"

என்று கூறினார். கேட்டவுடன் மயங்கி வீழ்ந்தார் நமிநந்தியடிகள். "குளத்துநீரை எடுத்து விளக்கேற்று" என்ற வான்வழி ஒலி கேட்டது. அவ்வாறே முதலில் ஒரு விளக்கை எரித்தார். பின்னர் அக்கோயிலில் உள்ள எல்லா விளக்குக்களையும் எரித்தார். பின்னர் நாள்தோறும் அதே தொண்டினைச் செய்து வந்தார்.

நமிநந்தியடிகளின் இச்செயலால், ஆரூர்க்கோயில் மூலட்டானன், புற்றிடங் கொண்டானிடம் ஒரு மாற்றம் அமைந்தது. அவன் வலக்கையில் உள்ள தீயானது அருட்கதிர் என மாறியது. அருட்கதிர் என்பது ஞாயிறு, திங்கள், தீ என்ற மூன்றன் செயலையும் ஒருங்கே செய்ய வல்லது.

ஞாயிறுபோல, தன்னை அடைந்ததை வாழச் செய்வது. நெருப்பைப்போல அவைதம் குற்றங்களை எரித்துத் தூய்மையாக்குவது. திங்கள் போலத் தண்ணிழல் தந்து வாழவைப்பது. இத்தகைய மாற்றத்தால் மூலட்டானன். **திருமூலட்டானன்** ஆகிறான்; ஆரூர் **திருஆரூர்** ஆகிறது.

தண்ணீர் விளக்கெரித்த இடம் **ஆரூர்அரநெறி**. இச்செயலால் அறநெறி அப்பன் புற்றிடங்கொண்டானுடன் இணைக்கப் பெறுகிறான். அறநெறியும் அருள்நிலையும் சென்று புற்றிடங்கொண்டானுடன் இணைகின்றன. அவ்விணைப்பால் புற்றிடங்கொண்டான் **திருமூலட்டானன்** ஆகிறான். தஞ்சம் அளிக்கும் அரநெறி அப்பரும், அம்ச மந்திரம் ஓதி அஜபாயோகக் கூத்தியற்றும் அருள் மன்னரும் புற்றிடங்கொண்டானுடன் இணைகின்றனர்.

திருமூலட்டானனது அருட்கதிர் ஒளியை அங்கே வழி பாட்டுக்கு வந்த அனைவரும் பெற்றனர். வந்து வணங்கி யவர்களின் உடல் பூங்கோயிலாக, உள்ளே மூலட்டானம் அமைவதாயிற்று. ஒவ்வொருவர் உடலும் கோயிலாக; அகத்தே மூலாதாரம் என நின்ற இடம் மூலட்டானமாக அமைய; அங்கே பெருமான் எழுந்தருளப் பெறும் பேற்றை அடைந்தார்கள். அந்நிலையில், ஒரு நிருத்தம் திருமூலட் டானனிடம் அமைந்தது. அது பாம்பு அஞ்சின் வலிகெட ஆடியநிலை. அதனால், புலனைந்தும் அடக்கிய அருள் நிலைப் பேறு அனைவருக்கும் வழங்கப் பெறுவதாயிற்று. எந்த ஊரிற் பிறந்தவர் ஆரூருக்கு வந்து வழிபட்டாலும், அவர் திருமூலட்டானனின் முன்னிற்கும்போது, தம்மையே மூலட்டானன் எனக் காணும் அனுபவப் பேறு பெற்றார்கள். அவ்வகை அங்கே வந்து நின்றார் அனைவரும் 'ஆரூரர்' எனவே ஆயினர். ஆரூர்ப் பெம்மானின் குடிமை உரிமை உடையவராகவே ஆயினர்.

## உத்தரப் பெருவிழா விளைத்த உயர்வு

அரநெறி அப்பனை மூலட்டானனுடன் இணைத்து அருட்கதிர் பரப்பச் செய்தமை போலவே, தியாகேசப் பெருமானைத் திருமூலட்டானப் பெருமானுடன் இணைக் கிறார் நமிநந்தியடிகள். ஊழூழிக்கு அப்பாலானை, கடந்து நின்ற அப்புறத்தானைக் காலத்தோடும் இடத் தோடும் இணைத்து நிறுத்தும் பெருந்தொண்டினைப் பங்குனி உத்திர விழாவின் மூலம் பாற்படுத்தினார் நமிநந்தியடிகள்.

மாசிமாதம் 'அத்தம்' என்ற நாண்மீன் முதலாகப் பற்றி, ஒவ்வொரு நாண்மீனையும் பற்றி ஊர்ந்து, அவ் வாறே இருபத்தாறு நாண்மீன்களையும் கடந்து, உத்தர மாக உயர்ந்து நிற்றல் என்பதே விழாவின் உட்கிடை. தியாகேசப் பெருமானுக்கு அமைத்த இவ்விழாவினால் அடைந்த மாற்றம்.

ஓரூர் ஒழியாமல் இப்பாரில் உள்ள அனைத்து ஊர் களும் வந்து பரவும் ஓரூர் என நின்றது ஆரூர். எனவே அனைத்துத் தலங்களும் ஆரூர் என்ற பாரூரில் வந்து அடங்கின.

அவ்வகையில், பாரூர்களையெல்லாம் தாங்கிப்புரக்கும் தனித்தன்மையையும், அருளொளி வீசி அவைகளைக் காக்கும் அளித்தன்மையையும் பெற்று விளங்கியது ஆரூர்.

திருமூலட்டானனிடம் ஒரு வேறுபாடு. அவன் அருட் கதிர் வீசி நின்றான் முன்பு. இப்போது அவன் **வெண்முத்தம்** என நின்றான். திங்கட் புதுமுகிழும் சூடி விளங்கினான்.

பங்குனி உத்தரப் பெருவிழாவால் பெற்றபயன், பொய்ம்மாயப் புன் குரம்பையை, அதனுள் உள்ள ஒன்பது வாசலில் அமைந்த மலத் தாக்கத்தை நீக்கி, அவ்வுடம்பே வழியாக வானெய்துதல் என்பதே. அது அப்பரடிகளின் வாக்கு.

**ஆதிரை விழா அமைப்பு**

ஆதிரை என்ற நாளைத் தனக்குரிய நாளாகக் கொண்டு ஆரூர் அமர்ந்தான். ஆர்திரையான் என்பது பொருள். எல்லா உலகமும் அலையென வந்து படியப் படிய அவைகளைக் கடந்த, உறுபொருளாக நின்றவன் என்ற பொருளில், அவன் ஆர்தலால் எல்லையற்றவனாக நின்றான் என்பதே.

**ஓங்கி ஓர் ஊழியுள்ளான்** (ஊர்தல்) என்ற கருத்தானது பங்குனி உத்தரப் பெருவிழாவாலும், **உலகிறந்த ஒண் பொருள்** என்ற கொள்கையானது (ஆர்தல்) ஆதிரை விழா வாலும் குறிக்கோளாக்கப் பெற்றன.

ஆரூர் அகத்தே பாரூர் அடங்கும்
ஆரூர் பார் ஊர்களைப் புரக்கும்
ஆரூர் அருளொளியால் பாரூர் விளக்கம் பெறும்

என விளக்கம் அமைக்கலாம்.

அடுத்து, தனிமனிதன் சென்று புற்றிடங்கொண் டானை வணங்கும் நிலையில், ஆரூர்ப் பெருமானைத் தம் ஊர்ப் பெருமானாகவே காணும் நிலை அமைந்தது. அப் பெருமான் 'முத்து' என விளங்குவதால், சென்று வணங்கு பவன் தன்னையே அப்பெருமானிடம் காணும் நிலை பெறுகிறான்.

அடுத்த நிலையில், அருட்கதிர் எறிப்பதால் புற்றிடங் கொண்ட பெருமான் தன் உடம்பில் புற்றிடம் கொண்ட வனே என்றும், பிறகு, மூலட்டானனாக நின்றவனே தன்னுடைய மூலாதாரத்தை இடமாகக் கொண்டவன் என் றும், பூங்கோயிலமர்ந்த நன்முத்து என நின்றவனே தன் னிடத்துச் சோதியாய் நின்றவன் என்றும் காணும் நிலை பெறுகிறான்.

புற்றிடமானது மூலட்டானம், திருமூலட்டானம் (அ) பூங்கோயில் என வளர்ச்சி பெற்றாற்போலவே, தனிமனித நிலையிலும் புலால் துருத்தி, துருத்தி, பூந்துருத்தி என மாற்றம் அமைவதைக் காண்கிறான்.

இந்நிலையில், அனைத்துத் தலங்களும், மக்களும், மேலுலகத்தவரும், பிறரும் வந்து ஆரூரைத் தம் அடைக் கலமாகக் கொண்டு, தங்கியும் ஆரூரரை வணங்கியும் வருகிறார்கள்.

இவ்வளவு சிறப்புக்களும் தண்ணீர் விளக்கெரித்த நிகழ்வாலும், பங்குனி உத்தரம் பாற்படுத்தமையானும் நமிநந்தியடிகளால் ஆரூருக்கு அமைக்கப் பெற்றன. அதன் சிறப்புணர்ந்த காரணத்தாலேயே அப்பரடிகள் நமிநந்தி யடிகளைத் **தொண்டர்க்கு ஆணி** எனச் சிறப்பித்துத் தம் பதிகத்திலேயே போற்றிப் புகழ்வாராயினர்.

அனைத்துத் தலங்களிலும் மூலட்டானம் இருந்தாலும், அவைகளையெல்லாம் அருள் வழங்கிக் காக்கும் வகையில் ஆரூர் திருமூலட்டானம் என நின்றது. பாரூர் எல்லாம் வநது அடைக்கலம் புக, அவற்றை ஏற்றுத் தாங்கும் ஓரூர் என ஆரூர் நின்றது.

இந்நிலையில் அருட்கதிர் வீசி, முத்தம் என விளங்கி னான் ஆரூர் இறைவன். அவ்வகையில் ஆரூரில் வந்து வணங்குபவர்களெல்லாம், தம் வடிவத்தையே திருமூலட் டானனிடம் கண்டார்கள். அல்லது தன்னுள் இறைவ னையே திருமூலட்டானனாகக் கண்டார்கள்.

அடுத்த நிலையில், புற்றிடங்கொண்ட பெருமானைத் தம் முள்ளும் கண்டார்கள். இந்நிலையில், இருந்த ஊரேயன்றி, வணங்க வந்தவர்களும் "ஆரூரர்" என நின்றார்கள்.

இந்நிலையில் அப்பரடிகள் ஒரு கருத்தை அமைத்துக் காட்டுகின்றார்.

ஆரூர்ப் பெருமானை அடைக்கலமாகக் கொண்டு அங்கேயே நாளும் வணங்கும் நிலையை மேற்கொண்டவர்கள் 'படிமக்கலம்' ஒன்று கொடுக்க வேண்டும் என்பது முறை. படிமக்கலம் — உருவம் பார்க்கும் கண்ணாடி. பூம்படிமக்கலம், பொற்படிமக்கலம் எனப் பல்வேறு வகைகளில் படிமக்கலம் தயாரித்துக் கொடுக்கப் பெறுகின்றன. எனினும், அடைக்கலம் புகுவோர் அதிகமாக இருப்பதால் படிமக்கலம் கிடைக்கவில்லை. இந்நிலையில், "அடைக்கலம் என்பதற்குப் படிமக்கலத்தைக் கையுறையாகக் கொடுத்து வழிபட வேண்டும் என்றால், மனமே! தமிழ் மாலைகளால் நாம் படிமக்கலம் செய்து கையுறையாகக் கொடுத்து, அடைக்கலம் என்ற பேறு பெற்றுத் தொழுவோம்" என்பது அப்பரடிகள் வாக்கு.

"பூம்படிக்கலம் பொற்படிமக்கலம் என்றிவற்றால்
ஆம் படிமக் கலமாகிலும் ஆரூர் இனி தமர்ந்தார்
தாம் படிமக் கலம் வேண்டுவரேல் தமிழ் மாலைகளால்
நாம் படிமக் கலம் செய்து தொழுதும் மடநெஞ்சமே"

என்பது (4.102.3) அப்பரடிகள் தரும் அனுபவ வாக்கு.

### அருளியற் செலவு

திருஞான சம்பந்தர் அருளிய பதிகங்களுள் ஒன்று **கூடற் சதுக்கப் பதிகம்.** இது திருவானைக்காவில் பாடப் பெற்றது. நான்கு தலங்களை இணைத்து, கூடல் என்ற அமைப்புடையதாய் அமைத்துக் காட்டுகின்றார். திருக்கயிலை, மயேந்திரம், திரு ஆரூர், திருஆனைக்கா என்பனவே அந்நான்கு தலங்களும். மயேந்திரம் என்பது மலையிடம்.

"மன்னு மாமலை மகேந்திர மதனிற்
சொன்ன ஆகமம் தோற்றுவித் தருளியும்"

எனவரும் திருவாசக அடிகளை நோக்கி உணரலாம். ஆரூரும் ஆனைக்காவும் முறையே மண், நீர் என்பனவற்றாலாயதலங்கள். இவ்வாறே காஞ்சி, பேரூர், ஆனைக்கா, கயிலை என்ற நான்கையும் இணைத்துக் காட்டும் முறை ஒன்றைக் காஞ்சிப் புராணம், பேரூர்ப் புராணங்களால்

அறியலாம். மண், நீர், திருக்கூத்துத் தலம் என்ற மூன்றையும் தொட்டுத் திருக்கயிலை அடைதல் என்பது உயிர்களின் அருளியற் செலவை அமைக்கும் பாதை என்று உய்த்துணர இடம் தருகிறது. அந்தவகையில் ஆரூரைத் தொட்டு, ஆனைக்காவை இணைத்து, இறுதியில் தில்லையில் ஒன்றித் திருக்கயிலை அடைதல் என்பது ஒருவகையில் உயிர்களுக்கு அமைந்த அருளியற் பாதை எனக் கொள்ளலாம்.

வடலூர் வள்ளற் பெருமான் ஆன்மாக்கள் அனைத்தும் ஆரூர்க் குடியுரிமை கொண்டு தில்லையில் ஒடுங்கிக் கயிலையை நண்ணும் அருட்செலவுடையவை எனக் கொண்டு, அவ்வழியைப் பூர்வஞான சிதம்பர வழி எனவும், தமக்கு அருளப்பெற்ற பாதையானது தில்லையில் தொடங்கி, ஒற்றியை இணைத்து, அமைக்கப்பெற்ற உத்தரஞான சிதம்பர வழி எனவும் அமைத்துக் காட்டுகின்றார். அதனாலேயே, எத்தலத்தில் அருள்நிறை ஞான வாழ்வு பெற்றாலும், ஓருயிர் ஆரூரைத் தொட்டுத்தான் திருக்கயிலை செல்லவேண்டும் என்ற மரபு அமைந்து காணப்பெறுவதாயிற்று எனவும் கொள்ளவேண்டும். அவ்வகையில் ஆரூர்க் குடியுரிமை பேணல் உயிர்களின் அருள் வழிப் போந்த செலவுமுறை அமைப்பு எனக் கொள்ளல் வேண்டும்.

### குடித்திட்டையும் கோத்திட்டையும்

அடுத்துளகுறிப்பு ஒன்றையும் கொள்ளுதல் வேண்டும். திட்டை என்பது திண்ணை என்ற பொருள் தரும். திருக் கயிலையிற் பெருமான் திட்டை எனப்பெறும் திண்ணையில் அம்மையும் அப்பனும் ஆக அமைந்துள்ளான்.

திட்டை என்ற பெயரில் இரண்டு நிலைகள் பேசப் பெறுகின்றன. குடித்திட்டை, கோத்திட்டை. அம்மையும் அப்பனும் தனித்தனியே அமர்ந்த கோலத்தில் உள்ள கயிலைத்திட்டை ஒன்று உண்டு. இத்திருக்கயிலைத் திட்டையுடன் தொடர்புடையதாக நிலவுலகில் அமைந்த பதியே **திருத்தென்குடித்திட்டை**. திருக்கயிலைப் பெருமான் நிலவுலகக் குடிமக்களுடன் தம்மை இணைத்துக் கொள்ளும் முறையில் அமைந்த கோலமும் குறிக்கோளும் என

இவைகளை அமைத்துக்கொள்ள வேண்டும். திருத்தென் குடித்திட்டையைப் பற்றித் திருஞானசம்பந்தர் பதிகம் மட்டுமே உள்ளது என்பதும் கருதத்தக்கது. இது குடியும் குடியாண்ட கோனும் என்ற உரிமைப் பற்றியது.

அடுத்தது **கோத்திட்டை.** இது கோனும் கோனாண்ட குடியும் என்ற அடிப்படை உரிமையில் அமைந்த கொள்கை. திருக்கயிலையில் அம்மையப்பர் என்ற இருமை அமைந்த ஒருமைக் கோலமாக, பாதிப் பெண்ணுருவாள னாக அமைந்த கோலத்தில் அனுபவப்படும் நிலை. இந் நிலை அனுபவத்தை நம்பியாரூரர் பாண்டியநாட்டில் அரசர்கள் அமர்ந்திருக்க, அவர்தம் முன்னிலையில் திருப் பரங்குன்றம் எனப்பெறும் திருக்கயிலைக் கோத்திட்டையை நோக்கிக் கூறியருளியதாக அமைந்த திருப்பதிகத்திற் காணலாம்.

அந்தகாசுரனை அழித்த அருளாட்சித் தலமும் அநாதியாய அறியாமையை அழித்து, அருட்கண் விழிப்பை அமைத்த தலமும் ஆக அமைந்தது திருக் கோவலூர். தென்பாண்டி நாட்டைச் சிவலோகம் ஆக்கு வித்த வரலாற்றையும், பாண்டிய நாட்டின் நேர்நிலை ஆட்சியமைப்பைக் கொண்ட திருக்கயிலையும் இணைத்துக் காட்டி, சேர, சோழ, பாண்டிய நாட்டு அரசர்கள் சூழ இருந்த அவையில், நரசிங்க முனை அரையரின் திருவுடன் இணைந்து வளர்ந்த நம்பியாரூரர் கோத்திட்டை வழி நின்ற அனுபவத்தைப் பரங்குன்றம் மேற்பாடிய பதிகமாக அமைத்தருளியிருக்கிறார்.

திருப்பரங்குன்றப் பதிகம் இப்போது மதுரைக்குத் தென்மேற்கே உள்ள திருப்பரங்குன்றத்தை நோக்கிய தன்று. இத்தலத்தைத் திருஞானசம்பந்தரும் நம்பியா ரூரரும் மட்டுமே பாடியுள்ளனர்.

பரங்குன்றத்தில் பெருமான் உமையாரு பாகனாக அமைந்த கோலமே இருவராலும் பேசப் பெறுகிறது.

> "ஒருடம் புள்ளே உமையொரு பாகம் உடனாகிப்
> பாரிடம் பாட இனிதுறை கோயில் பரங்குன்றே"
>
> *1—100—3*

என்று ஞானசம்பந்தரும்,

"மஞ்சுண்ட மாலை மதிசூடு சென்னி
மலையான் மடந்தை மணவாள நம்பி
பஞ்சுண்ட அல்குற் பணை மென் முலையா
ளொடு நீரும் ஒன்றாயிருத்தல் ஒழியீர்"

7—2—4

என்று நம்பியாரூரரும் அருளுவனவற்றை நோக்கிக் காண வேண்டும்.

குடித்திட்டை, கோத்திட்டை என்பவை திருக்கயிலையில் உள்ள இருவகைத் திண்ணையிடங்கள். குடித்திட்டையில் பெருமான் உமையம்மையுடன் தனித்தனியே அமர்ந்த கோலம் அனுபவத்துக்குரியதாகும். இது நிலவுலகில் தென் திருக்குடித் திட்டையுடன் ஒத்த உறவுடையது. உயிர்களெல்லாம் குடியுரிமை பெற்று நிற்க, இறைவன் கோன் என நின்று ஆட்கொண்ட நிலையில், நிலவுலகத்துத் தென் குடித் திட்டையும் திருக்கயிலைக் குடித்திட்டையும் தொடர்புடையன.

திருக்கயிலையில் உள்ள கோத்திட்டையானது பரங்குன்றம் எனப் பெறும். உயிர்களிலேயே அரசுரிமைத் தகுதியுடையவைகள் கோத்திட்டையில் அனுபவம் பெறுகின்றன. திருக்கயிலைக் கோத்திட்டையில் பெருமான் அம்மையப்பர் என்ற ஈருரு இணைந்த ஓருருவாக அமைய, உயிர்கள் அத்தகு அனுபவம் பெறுகின்றன.

பரங்குன்றப் பதிகத்தின் பயன் கூற முற்படும் நம்பியாரூரர் "பரங்குன்றம் மேய பரமன் அடிக்கே குடியாகி, வானோர்க்கும் ஓர் கோவுமாகிக் குலவேந்தராய் விண் முழு தாள்பவரே" என்று அருளியிருத்தலைக் காணுதல் வேண்டும். பரமன் அடிக்குக் குடியாக அமைந்தாலும் அவர்கள் வானோர்க்குக் கோவாக விளங்குவார்கள். மேலும், அவர்கள் குலவேந்தராக விண்முழுதாளுவர் என்று குறிப்பிடுவதால் குடியுரிமையோடு திருக்கயிலை அடைபவர்கள் ஒருவகை; கோவாகி, குலவேந்தராய்த் திருக்கயிலை அடைபவர்களும் உண்டு எனக் கொள்ள வேண்டியிருக்கிறது. அவர்கள் தொடர்பு கொள்ளும் இடம் கோத்திட்டையாக அமையப் பெறும் எனவும் கருத வேண்டியிருக்கிறது. அனுபவத்திலும் குடித்திட்டையும் கோத்திட்டையும் மாறுபடுகின்றன. முன்னதில் அம்மையும்

அப்பனும் தனித்தனி அமைந்த கோலம் அனுபவப்படுகின்றது. பின்னதில் இருமை இணைந்த ஒருமைக் கோல அனுபவம்.

மேலும், பரங்குன்றப் பதிகம் மூலமாக நம்பியாரூரர் அமைக்கும் செய்திகள் பலவும் அவர்தம் வரலாற்றைத் தெளிய உணர்வதற்குத் துணைபுரிவனவாம்.

"அடிகள் உமக்கு ஆட் செய்ய அஞ்சுதும்" என்று கூறுவதை முடிப்புக் கருத்தாக அமைத்தாலும், 'அச்சம்' என்ற சொல்வெட்கத்துக்கு இடமானது என்ற பொருளைத் தருவதாக அமைகிறது. இறைவனாகிய நீவிர் உயிர்களாம் எங்களுக்காகப் பணியாற்றுவதைப் பார்க்கும்போது, நீவிர் எமக்கு ஆட்செய்வதுதான் பெருமையாக அமைந்துளது, யாங்கள் ஆட்செய்வோம் என்று கூறுவது எள்ளளவும் பொருத்தமில்லை என்ற பொருளில் அமைத்துக் காட்டுவதை உற்றுணர்தல் வேண்டும்.

நஞ்சமுண்டதும், நச்சரவை—ஐந்துபடப் பாம்பை எடுத்தாட்டுவதும் உயிர்களுக்காக நீவிர் ஏற்று நடிக்கும் பெருந்தொண்டு நிலைகள். அண்டமும் கடந்த நிலையில் நின்று செய்யும் தொண்டு உம்முடையது; பிண்டம் சுமந்தும் உம்மை நெருங்கும் வல்லமையில்லோம்; இவைகளை உற்று நோக்கினால்,

"பெரியாரொடு நட்பு இனிது என்று இருத்தும்"

என்பதே எங்களுக்குப் பொருந்துவது. செயற்கரிய செய்யும் தொண்டு உம்முடையதாக, நினைக்கவும் எட்டவும் முடியாத நிலையில் அமைந்த சிறுமை எங்களுடையதாக அமைகிறது. இவ்வகையில், யாங்கள் உமக்குத் தொண்டு செய்வோம் என்பது நகைப்புக் கிடமாவது என்றே குறிப்பிட்டுக் காட்டுகின்றார். மேலும், நம்பியாரூரர்,

"உம் செய்கை யெல்லாம் ஆரொடுங் கூடா"

என்றும்,

"ஆள் ஆளியவே கிற்றீர்"

என்றும் கூறுவனவற்றை நோக்கிக் காணுதல் வேண்டும்.

உலகில் தொண்டு செய்ய முற்படுபவர்களுக்கு ஒரு முறை உண்டு. தந்தைமுறை, ஆண்டான் முறை, அடிமை முறை, அரசன்முறை என்று சில அடிப்படை முறைகளை அமைத்து நிறுத்தி, அவற்றில் ஒருவர் மற்றவர்க்குச் செய்யும் தொண்டினை அமைத்துக் கண்டுவிடலாம். ஆனால், ஆளாகக் கொண்டேன் என்று கூறிக் கொண்டு, இறைவன் செய்யும் தொண்டுகளை எண்ணினால், அவன் ஆற்றும் தொண்டுமுறையானது வேறு எந்த ஒரு முறையுடனும் இயையாது, எல்லா முறைகளையும் கடந்த ஒரு முறையாக அமையும் என்பதைக் குறிக்கொண்டு விளக்கும் வகையிலேயே "உம செய்கையெல்லாம் ஆரொடுங் கூடா" என அமைத்துக் காட்டினார்.

**மணவாள நம்பியும் கழிப்பாலையும்**

அடுத்து, **மணவாளநம்பி** என நின்ற இறைவன் எப்பொழுதும் உமையாளொடு ஒன்றாயிருத்தலை ஒழியாதவராய், என்றும் பணியாற்றுகின்றார். இறைவியும் தாமுமாக இணைந்து நின்றே பணியாற்றுகின்றார்.

என்றும், எங்கும்; எல்லாரையும் உடன்கொண்டு எமக்கே ஆட்செய்கின்றீர் என்ற கருத்தை உணர்த்தும் வகையிலேயே,

"பொல்லாப் புறங்காட்டகத்து ஆட்டொழியீர்
புலால் வாயன பேயொடு பூச்சொழியீர்
... ... ... ... ...
... ... ... ... ...
கல்லால் நிழற் கீழ் ஒருநாட் கண்டதும்
கடம்பூர்க் கரக் கோயிலின் முன் கண்டதும்
அல்லால் விரகொன்றிலம்" (7—2—5)

என்று அருளுவதைக் கொள்ளுதல் வேண்டும். அவ்வகையில், நம்பியாரூரருக்குத் திருக்கயிலைக் கோத்திட்டை அனுபவம், குலவேந்தராய் நின்று விண்முழுதாண்ட அனுபவம் அமைந்திருக்கவேண்டும் என்பது கொள்ளக் கிடக்கின்றது.

இனி, பரங்குன்றப் பதிக அனுபவத்தை நுணுகி ஆராய்ந்தால் அது **மணவாளநம்பியை** மூலமாகக் கொண்டது என்ற உண்மை தெளியவரும். மணவாள நம்பியை மூல

மாகக் கொண்ட அனுபவம் கழிப்பாலையை உட்கொண்ட அனுபவமாகும். அதனை அப்பரடிகள் திருத்தாண்டகம் ஒன்றன் மூலம் உணரலாம்.

"ஊனுடுத்தி ஒன்பது வாசல் வைத்து
ஒள்ளெலும்பு தூணா உரோமம் மேய்ந்து
தாமெடுத்த கூரை தவிரப் போவார்
தயக்கம் பலபடைத்தார் தாமரையினார்
கானெடுத்து மாமயில்கள் ஆலும் சோலைக்
கழிப்பாலை மேய கபாலப்பனார்
வானிடத்தை ஊடறுத்து வல்லை செல்லும்
வழிவைத்தார்க்கு அவ்வழியே போதும் நாமே"

(6—12—1)

என்ற அப்பரடிகளின் திருத்தாண்டகம் அப்பாலைக் கப்பாலாய் நின்ற பரம்பொருளைச் சென்றடையும் முறையை எடுத்தியம்புகின்றது.

கழிப்பாலை மேய கபாலப்பனார் மணவாள நம்பியே. மணவாளநம்பி அனுபவத்தையே நம்பியாரூரரின் பரங்குன்றப் பதிகம் பேசுகின்றது. எனவே, குலவேந்தராய் நின்று, கோத்திட்டை அனுபவம்பெற்று, மணவாள நம்பி யாம் துணைபெற்று, அப்பாலை அனுபவத்தை விழைந்த நிலையே நம்பியாரூரரின் வாழ்வியல் விளக்கமாக அமைய இருக்கும் வரலாற்று நுட்பம் என ஒருவகையில் அமைக்கலாம்.

"வெந்த குங்கி லியப்புகை விம்மவே
கந்த நின்றுல வுங்கழிப் பாலையார்
**அந்த மும்மள வும்அறி யாததோர்**
**சந்த மாலவர் மேவிய சாந்தமே"** (3—44—1)

என்ற திருஞானசம்பந்தரின் திருப்பாட்டின் வழிநின்று நோக்கினால் மணவாள நம்பியின் துணைக்கொண்டு எய்தும் அப்பாலைக்கு அப்பாலைப் பரம அனுபவம் என்பது அந்தமும் அளவும் அறியாததாகிய ஒரு சந்தம் எனவும், அதுவே, அவர் மேவிய சாந்தநிலை அனுபவம் எனவும் கொள்ளலாம்.

இனி, திருஞானசம்பந்தரின் திருக்கழிப்பாலைப் பதிகத்தின் பயன் (3.44) முந்தி வானுலகு ஆளுதலை முறைமையாக்கும் என்பதே.

நம்பியாரூரர் திருக்கழிப்பாலைப் பதிகத்தில் அருளும் செய்திகளையும் இங்கே இணைத்துக் காணுதல் ஆய்வுக் குரியதாம்.

''முடிமேல் மாமதியும் அரவும் உடன் துயிலும்
வடிவே தாம் உடையார் மகிழும் கழிப் பாலையதே''

எனவரும் நம்பியாரூரர் வாக்கில் (7—23—1) கழிப்பாலை எனப் பெறும் அப்பாலைக் கப்பால் நின்ற பரம முழுப் பொருள் அனுபவம் சிறப்புற்றோங்குவதைக் காணலாம். திருஞானசம்பந்தப் பெருமான் சாந்தநிலை அனுபவம் எனக் குறித்தமை போலவே, நம்பியாரூரரும் 'மதியும் அரவும் உடன் துயிலும் வடிவு' எனக் குறித்து, அது பகைப்பொரு ளாய இரண்டும் பகைமறந்து துயிலும் அருள் நிலை அனு பவம் என அமைத்துக் காட்டி, அங்கே பெருமானும் மகிழ் வுடன் விளங்குவதாகக் குறிப்பிடுகின்றார்.

'நொடித்தான் மலை உத்தமன்' என்று குறிப்பிடுமாறு போலவே இப்பதிகத்திலும் **'உலகம் தொழும் உத்தமன்'** என்று குறிப்பிட்டுக் காட்டினாராதல் தெளியலாம்.

பரங்குன்று என்றும் கோத்திட்டை என்றும் வானூடு அறுத்துச் சென்று கழிப்பாலை மேய கபாலப்பனார் எனப் பெறும் பரம முழுமுதற்பொருளை அணைந்தார்ந்து பெறும் மணவாள நம்பி அனுபவம் என்றும் அமைத்துக்காட்டி, அதனைப்பெற முயலும் நிலையில், தனக்குக் கழிப்பாலை மேயவன் ஆற்றிய தொண்டுகளையெல்லாம் அமைத்துக் காட்டுகின்றார்.

திருக்கழிப்பாலை அனுபவம் பெறுவதற்குக் கழிப் பாலைப் பெருமான் உயிருள் மன்னி நின்று பெருகியும், உடம்பை இடம்கொண்டு செம்மை யுறுத்தியும் தொண்டு செய்கிறான் என்பதைத் திருநாவுக்கரசர் போலவே நம்பி யாரூரரும் எடுத்துக் கூறி விளக்குகின்றார்.

''எங்கேனும் இருந்து உன்னடியேன் உனை நினைந்தால்
அங்கே வந்து என்னொடும் உடனாகி நின்றருளி
இங்கே என் வினையை அறுத்திட்டு எனையாளும்
கங்கா நாயகனே கழிப்பாலைமேயானே''

என்று (7—13—2) அருளிய நம்பியாரூரர்,

''பொய்யா நாவதனாற் புகழ்வார்கள் மனத்தினுள்ளே
மெய்யே நின்றெரியும் விளக்கே யொத்த தேவர்பிரான்''

என்று (7—23—9) அருளியதையும் இணைத்துக் காண வேண்டும்.

**மூவகைத்திறம்**

மேலே எடுத்துக் காட்டப் பெற்றவைகளைப்பின்னணியாகக் கொண்டு ஒத்துறவமையும் முத்திறப் பொலிவைக் காணுதல் முறைமைத்தாம். இங்கே எடுத்துக் கொள்ளப் பெறும் முத்திறம் என்பன முறையே,

தம்பிரான் தோழராதல்
கோலம் புனைக எனல்
வாழி மண்மேல், நின்வேட்கை தீர, விளையாடுவாய் எனல்

என்பனவாம். இம்மூன்றையும் இணைத்ததே ஆரூரிற் கேட்ட ஆணை ஒலி.

**தம்பிரான் தோழராதல்**

ஆரூர்ப் பெருமான் "தோழமையாக உனக்கு நம்மைத் தந்தனம்" என்று ஆணை ஒலி அமைத்தமையால் நம்பியாரூரருக்குத் **'தம்பிரான் தோழர்'** என்ற பெயர் நிலவுவதாயிற்று.

''தன்னைத் தோழமையருளித் தொண்டனேன் செய்த
துரிசுகள் பொறுக்கும் நாதனை'' (7—68—8)

என்றும்,

''என்னுடைய தோழனுமாய் யான் செய்யும்
துரிசுகளுக்கு உடனாகி'' (7—51—1)

என்றும்,

''என்றனை ஆள் தோழனை'' (7—84—9)

என்றும்,

''ஏழிசையாய் இசைப்பயனாய் இன்னமுதாய் என்னுடைய
தோழனுமாய் யான்செய்யும் துரிசுகளுக்கு உடனாகி''
(7—51—10)

என்றும்,

''தூதனைத் தன்னைத் தோழமையருளித் தொண்டனேன்செய்த
துரிசுகள் பொறுக்கும் நாதனை'' (7—68—8)

என்றும்,

"தூதனை என்றனை ஆள் தோழனை" (7—84—8)

என்றும் வரும் நம்பியாரூரர் வாக்குக்கள் கொண்டு இவ் வுண்மையை உணரலாம்.

நம்பியாரூரரால் பலவிடத்தும் எடுத்துக் கூறப்பெற்ற **'தோழமை'** பற்றிய மதிப்பீடு அருளாளர்களாலும் பெரிதும் போற்றப்பெறுவதொன்று.

**"நம்மை உமக்குத் தோழனாகத் தந்தோம்"** என்று கூறிய இறைவன் செயல் சமய உலகிலேயே மிகவும் சிறப்புறுத்திப் பேசப்பெறுவதொன்று. தந்தை மகன் முறை, ஆண்டான் அடிமை முறை, என்று இவ்வாறு உறவு முறைகளை அமைத்து இறைவனுக்கு அடிமை பேணும் நிலைகளில், உலகில் யாண்டும், எச்சமயத்திலும் காணப்பெறாத ஒருமுறையே தோழமை முறை எனக் கொள்வர். தான் அவன் என்ற வேற்றுமையற்ற விழுமிய பேரன்பே தோழமையில் அமைவது என்ற அடிப்படை யில், இதனை மிக உயர்ந்த உறவு எனக் கொண்டு சமய உலகம் போற்றுகிறது.

தமிழகத்துச் சைவம் தந்த பெரும் பேறே தோழமை நெறி என்று பலராலும் பாராட்டப்பெறும் கடவுளான்ம உறவுமுறையை நம்பியாரூரர் தவிர, வேறு யாரும் மேற் கொண்டதாகத் தெரியவில்லை. எனினும், படிமுறை வளர்ச்சியில் ஆண்டான் அடிமை, தந்தை மகன், தோழமை என்ற மூன்றும் முறையே சுட்டப் பெறுகின்றன.

"ஏழிசையாய் இசைப்பயனாய் இன்னமுதாய் என்னுடைய
**தோழனுமாய்** என்றுமுன் நீ சொன்ன பெருஞ் சொற்பொருளை
ஆழநினைந்திடில் அடியேன் அருங்கரணம் கரைந்துகரைந்து
ஊழியல் இன்புறுவது காண் உயர் கருணைப் பெருந்தகையே"

என்றும்,

"பரம்பரமாம் துரியமெனும் பதத்திருந்த பரம்பொருளை
உரம் பெறத் **தோழமை கொண்ட** உன்பெருமை தனைமதித்து
வரம் பெறநல் தெய்வமெலாம் வந்திருக்கும் என்றால் என்
தரம்பெற என் புகல்வேன்நான் தனித்தலைமைப் பெருந்தகையே"

என்றும் திருவருட் பிரகாச வள்ளலார் தம்முடைய

ஆளுடைய நம்பிகள் அருள்மாலை (5, 9)யில் அமைத்துப் போற்றியுள்ளமை ஆய்ந்து காணுதற்குரியது.

அவ்வாறே கி. பி. பதினேழாம் நூற்றாண்டில் வாழ்ந்த கற்பனைக் களஞ்சியம் சிவப்பிரகாச சுவாமிகள், தம்முடைய **நால்வர் நான் மணிமாலையில்,**

''அறிந்து செல்வம் உடையான் அளகைப் பதியான்
தோழமை கொண்டு
உறழ்ந்த கல்வி உடையானும் ஒருவன்
வேண்டும் என இருந்து
துறந்த முனிவர் தொழும் பரவை துணைவா
நினைத் தோழமை கொண்டான்
செறிந்த அறிவு வடிவமாய்த் திகழும்
நுதற்கட் பெருமானே''

என்று எடுத்துக்கூறி, இறைவன் செல்வமுடைமைக்குத் தோழனாகக் குபேரனைக் கொண்டான். கல்விக்கு உற்ற தோழன் ஒருவன் வேண்டும் என்று பன்னாள் காத்திருந்து பின்னர் நம்பியாரூரனைத் தோழனாகக் கொண்டான் என்று விளக்கிக் காட்டினார். இந்நிலையில், இறைவனை அடைவதற்குரிய நெறியாகத் தோழமையை அமைத்துக் கொள்ளல் என்பதைவிட, 'தோழமை' என்ற உறவு நிலையில் இறைவனும் மனிதனும் பழகும் வாய்ப்பு உண்டு எனக் கொள்ள வேண்டியிருக்கிறது.

ஆவணம் காட்டி வழிவழி அடிமை என்று வாதிட்டு, நிறுவி, அத்தகைய உறவில் நம்பியாரூரரை அமைத்துக் கொண்ட இறைவனே இப்போது தோழமை நெறியைப் பேசுகின்றான். தோழமை நெறியில் அடிமை நெறி முற்றாக வெறுக்கப்பெறும் என்று உரைவிளக்கம் கொள்வது ஒரு வகை.

தோழமை நெறியில் நிறுத்துவதால் உயிர் எத்தகைய ஒப்பற்ற பேற்றைப் பெறுகிறது, அந்நெறியில் நிறுத்தா தொழியின் உயிர்கட்கு அமைய இருக்கும் குறை ஏதும் உண்டா எனவும் தத்துவப் பின்னணியில் ஆய்ந்து காணுதல் வேண்டும்.

**'தோழமை'** பற்றிய ஆய்வானது நம்பியாரூரரின் வாழ்வு முழுவதையும் இணைத்துக் காணவேண்டிய ஒருவகை முழுமையை உடன்கொண்ட ஆய்வாதலின்,

அதன் அனைத்துக் கூறுகளையும் உடன்கொண்ட ஆய்வை இந்நூலின் இறுதியிற் காணலாம். அவ்வகையில் அனைவரும் வியந்து போற்றுதற்குரிய அரிய வாழ் வாகிய 'தோழமையை' ஆரூர்ப்பெருமான் விருப்புடன் தாமே அளிக்க, நம்பியாரூரர் ஏற்றுச் சிறந்தார் என்ற அள வில் மட்டும் இங்கே கொள்ளப் பெறுகிறது.

**சுந்தரத் திருக்கோலம்**

நம்பியாரூரர் ஆரூரில் கேட்க எழுந்த அசரீரியானது மூன்று செய்திகளை அறிவுறுத்தியது என்பது முன்பே காட்டப்பெற்றது. 'தோழமையாக நம்மைத் தந்தனம்' என்பது முதன்மைத் திரு. இரண்டாவதாக அமைந்தது சுந்தரத் திருக்கோலம்.

> **"நாம் முன்பு தொண்டு கொண்ட வேள்வியில் அன்று நீ கொண்ட கோலம் என்றும் புனைக"**

என்ற சேக்கிழார் திருவாக்கினால் (பெரியபுராணம்) அமைந்த திருக்கோலத்தைப் பற்றியதே. "நாம் முன்பு தொண்டு கொண்ட வேள்வியில் அன்று நீ கொண்ட கோலம்" என்று அசரீரியால் சுட்டப் பெற்றகோலம், சடங்கவி சிவாசாரியார் மகளை மணத்தற்காகக் கொண்ட மணக்கோலம்.

திருமணம் தவிர்ந்த நாள் தொடங்கி, ஆரூரை அணுகுங் கால எல்லை வரையிலும் நம்பியாரூரர் மேற்கொண்டிருந்த கோலம் எது என்பதும் ஐயத்துக் கிடமானது.

'தோழமையாக நம்மைத் தந்தனம்' என்று கூறிய பின் கோலம் சுட்டப் பெறுகிறது. எனவே, இக்கோலம் 'தம்பிரான் தோழர்' என்பதை நினைவு கூருதற்கேற்ற கோலமாக அமைந்திருக்கவேண்டும் என்று கருதுவது ஏற்புடையதே.

மேலும், தவிர்ந்த மணத்தை நினைவுறுத்தும் கோலத்தை இப்போது கொள்வதாற் போந்த பயன் யாது என்ற வினாவும் எழுகிறது.

இனி, நம்பியாரூரர் கொண்ட கோலம் தனித்தன்மை வாய்ந்ததெனவும் கொள்ளல் வேண்டும். முடிகவித்து

ஆளும் கோவேந்தர்க்குரிய கோலம். முடிகவித்தல் மட்டுமே யன்றி, கையிற் பிரம்பேந்தியும் அமைந்த கோலம்கொண்டு சிறந்து விளங்கினார் என்பதை இன்றும் நம்பியாரூரர் தம் திருவுருவப் படம், திருவுருவத் திருமேனி ஆகியவை கொண்டும் உணர்தற்குரியது. எனவே, நம்பியாரூரர் கொண்ட கோலம் 'தம்பிரான் தோழர்' என்பதை நினைவு கூர்தற்குரியதாய் அமைந்த கோலம் எனக் கொள்ள வேண்டுமேயன்றி, தவிர்ந்தமணக் கோலமே இவண் மேற்கொள்ளப் பெறுகின்றது என்பது ஒவ்வாமையுடைய தாகும். அவ்வாறாயின் அசரீரி வாக்கும் சேக்கிழார் வாக்கும் அமைத்துக் காட்டிய தொடர்களின் விளக்கம் எவ்வாறமை யும் என்ற ஐயமும் எழும்.

மேலும், அசரீரி அளித்ததாய், இறுதிநின்றதாய் அமைந்த பெருவாழ்வு ஒன்றையும் இணைத்துக் காணுதல் வேண்டும்.

**"நின் வேட்கை தீர வாழி, மண்மேல் விளையாடுவாய்"**

என்பதே அது. நம்பியாரூரர் வேட்கையையும், அவ் வேட்கை தீர விளையாடிய வாழ்வியல் நிகழ்வுகளையும் இணைத்துக் காண வேண்டும். தோழமை என்ற உரிமை யையும், உரிமையை உணர்த்தும் கோலமும், கோலத்துக் கேற்ப அமையும் விளையாட்டும் என இம்மூன்றையும் இணைத்துக் காணுதல் ஆய்வு நெறிக்கு ஒத்ததாக அமையும்.

'நாம் முன்பு தொண்டு கொண்ட வேள்வியில்' என்ப தற்கு, முன்பு கிழவேதியனாக வந்து தடுத்துத் தொண்டனா கக் கொண்ட திருமணத்தில் என்றும், 'அன்று நீ கொண்ட கோலம்' என்பதற்கு மன்னவர் திருவும் தங்கள் வைதிகத் திருவும் பொங்கக் கொண்ட திருமணக் கோலம் என்றும், 'நின் வேட்கை தீர' என்பதற்கு, 'இனி வேள்வித் தொழில் உனக்கு நிகழாதவாறு, என்பால் வைத்த ஆசை எல்லாம் அனுபவித்து மன அமைதி உண்டாகும்படி' என்றும், 'மண்மேல் விளையாடுக' என்பதற்கு மேன்மேல் கருமத் துக்குக் காரணமாய் உள்ள இம்மண்ணுலகில், அவ்வாறு தொடக்குண்ணாமல், மண்ணிற் பிறப்புத் தீமை என்று துன்பமுறாமல் இன்பமென்றுணர்ந்து, "மனித்தப் பிறவியும்

வேண்டுவதே இம்மாநிலத்தே" என்றவாறு மகிழ்ந்து அனுபவித்தல் என்றும் சிவக்கவிமணி அவர்கள் தம்முடைய பெரியபுராண விரிவுரையில் (முதற்பகுதி பக்கம் 326–327) எழுதிக் காட்டியுள்ளார்கள். மேலும், "வேட்கைதீர என்பதற்குத் திருக்கயிலை நந்தவனத்தில் கொண்ட ஆசையாகிய காதல் தீரும்படி என்று பொருளுரைப்பாருமுளர். அதற்கு மண்மேல் விளையாடுதல் அவசியம் இன்மையானும், இங்குப் புற்றிடங் கொண்டார் வாக்கன்றியே திருக்கயிலை ஆணையின்படியே அவை நிகழ்வன ஆதலாலும், நம்பிகள் உலக வாழ்வுற்று அவ்வாசை தீர விளையாடுதல் பொருளன்மையாயினும், பிறவாற்றாலும் அது பொருந்தாமை உணர்க." (திருத்தொண்டர் புராண உரை, பக்கம் 327) என்று ஒரு மறுப்பையும் சிவக்கவிமணி அவர்கள் எழுதியுள்ளார்கள்.

இனி, அமரர், மறை. திருநாவுக்கரசு அவர்கள் தம்முடைய **பெரியபுராண ஆய்வுரை** முதல் தொகுதி, பக்கம் 40–இல் "உனக்கு நம்மைத் தோழனாகக் கொடுத்தோம். நாம் உன்னைத் தடுத்தாண்ட திருமண விழாவில், நீ கொண்ட மணக்கோலத்துடன் உன் வேட்கை தீர விளையாடி வாழ்வாயாக" என்ற கருத்தையே வானொலிச் செய்தியாகக் கொண்டார்.

மேலும், அவர், இதனால் பொதுமக்கள் வைத்துள்ள எல்லா வளங்களுடன் வாழ்தல் குற்றம் போலும் என்றெண்ணிய காலத்தில் சுந்தரமூர்த்திகளைக் கொண்டு உலகவர் எல்லா இன்பங்களையும் பெற்று இனிது வாழலாம் அது தவறில்லை என்று அறிவிக்கவே அவரை "மணமகன் கோலத்தோடு வாழ்வாய் என்று மட்டுமல்ல, விளையாடுவாய்" என்றான் இறைவன் வானொலி வாயிலாக" என்று பக்கம் 48–இல் குறிப்பிட்டுக் காட்டியுள்ளார்.

அடுத்து "இறைவன் மாந்த வடிவுடன் வந்ததோடன்றிச் சுந்தரருடன் வழக்கிட்டு அவரோடு பேசியும், அவராற் பற்றப்பட்டும், பலர் காண ஆடல் புரிந்ததும் குருமார்களின் வரலாறுகளில் காண முடியாத அருமையான பெரிய நிகழ்ச்சியாகும்."

"இவ்வாறு சுந்தரருடன் திருவிளையாடல் புரிந்தமைக்குக் கயிலாயத்தில் அவர்க்குச் சிவபிரான் தந்த உறுதி

மொழியே காரணமாம் என்பதற்கு அகச்சான்று இல்லை. இது முன்பே விளக்கப் பெற்றது. ஆகவே, இவ்வாறு இறைவன் ஆரூரருடன் நேர் நின்று ஆடல் புரிந்ததற்கு என்ன காரணம்?''

"கடவுள் தன்னடியாருக்காக மாந்த உருவில் வருவார் என்பதனை நாங்கள் நேரே கண்டோம்'' என்று பலரும் சான்று கூறவும், சுந்தரர் பெருமான் பெருமை விளங்கவும், அதனால், ஆரூரர் காட்டிய சைவ நன்னெறியில் நின்று உலகம் உய்யவும், சிவபெருமான் நம்பியாரூரரை முன் னின்று ஆடல் செய்து ஆட்கொண்டான் என்பதே இது வரை விளக்கியவற்றால் போந்த உண்மையாம்." என்று அவரே பக்கம் **50-51** குறித்துள்ளமையையும் கண்டு தெளியலாம்.

அருட்டுறைப் பொலிவு எனவும் முத்திறப் பொலிவு எனவும் அமைந்த இரு பெரும் பொலிவுகளுக்கு மூலமாக அமைந்த நம்பியாரூரரின் வரலாற்று நுட்பங்களையும், வாக்கின் அருமைகளையும் இணைத்துக் காணுதல் ஒரு வகையில் ஆய்வுப் பயனை அமைவுறத்தரும் பணியாகும்.

நம்பியாரூரர் திருநாவலூரைப் பிறப்பிடமாகக் கொண் டது முதலாக, தம்பிரான் தோழராதல் ஈறாக உள்ள வரலாற்று நிகழ்வுகளில் பெரும்பான்மையானவை ஐயம் என்ற தலைப்பிலேயே அடங்குவனவாகின்றன. திருக் கயிலை வாழ்க்கையை இணைக்கலாமா என்பது முதலாக எழுந்த சிக்கல்கள் தீர்க்கப்பெறுமாறு அமையவில்லை. தலைப்பின் இறுதியில் ஒருவாறு சில வரலாற்றமைவுகளை முடித்துக்காட்டி நிறுவுதல் பயனுடைய பணியாகும்.

கழுமலப் பதிகமும், நாகைக் காரோணப் பதிகமும் சில குறிப்புக்களை நமக்கு நல்குவனவாகின்றன. ஏனையவை முன்னே காட்டப்பெற்றுள்ளன.

''முத்தியும் ஞானமும் வானவர் அறியா
முறைமுறை பலபல நெறிகளும் காட்டிக்
கற்பனை கற்பித்த கடவுளை அடியேன்
கண்டு கொண்டேன்'' 7—58—2

என்றும்,

''மழைக்கு அரும்பும் மலர்க் கொன்றையினானை
வளைக்கலுற்றேன் மறவா மனம் பெற்றேன்

பிழைத்து ஒருகால் இனிப் போய்ப் பிறவாமைப்
பெருமை பெற்றேன் பெற்றதார் பெறுகிற்பார்'' 7—58—4

என்றும்,

''ஊனங்கத்து உயிர்ப்பாய் உலகெல்லாம்
ஓங்காரத்து உருவாகி நின்றானை
வானங் கைத் தவர்க்கும் அளப்பரிய
வள்ளலை அடியார்கள் தம் உள்ளத்
தேனங் கைத் தமுதாகி யுள்ளூறும்
தேசனைத் திளைத்தற் கினியானை'' 7—67—1

''ஆழியனாய் அகன்றே உயர்ந்தானை
ஆதி அந்தம் பணிவார்க்கு அணியானைக்
கூழையராகிப் பொய்யே குடியோம்பிக்
குழைந்து மெய்யடியார் குழுப்பெய்யும்
வாழியர்க்கே வழுவா நெறி காட்டி
மறுபிறப் பென்னை மாசறுத்தானை'' 7—67—3

என்றும்,

''கூடுமாறு எங்ஙனமோ என்று கூறக்
குறித்துக் காட்டிக் கொணர்ந்து எனை ஆண்டு
வாடிநீ வாளா வருந்தல் என்பானை'' 7—67—6

என்றும்,

''இவ்விவ கருணை எம் கற்பகக் கடலை
எம்பெருமான் அருளாய் என்ற பின்னை
வவ்வி என் ஆவி மனங் கலந்தானை'' 7—67—8

என்றும், வரும் நம்பியாரூரர் தம் திருவாக்குக்கள் அவர்தம் நெடிய வாழ்வையும், திருக்கயிலை முதல் தென்னாடு வரையில் நடைபெற்ற பல அரிய செய்திகளை மறவாமனம் காரணமாகவும், உய்யப்பெறவேண்டிய உணர்வு பெற்றமையால் அமைத்துக்கூறும் திறம் தெளியலாம்.

இனி, ஆரூர்த் தொண்டர்கள் வரவேற்க, ஆரூரினுள் நுழையும் நம்பியாரூரர்,

''கரையும் கடலும் மலையும்
காலையும் மாலையும் எல்லாம்
**உரையில் விரவி வருவான்**
**ஒருவன் உருத்திர லோகன்**
வரையின் மடமகள் கேள்வன்
வானவர் தானவர்க் கெல்லாம்
அரையன்''

என்ற தொடக்கத் திருப்பாட்டில் (7—72—1) இடத்தாலும் காலத்தாலும் மாறுபடும் நிலைகள் அமைந்தபோதிலும், என்

உரையில் கலந்து வரும் உருத்திரலோகன் ஒருவன் உளன் என்று கூறும் உட்பொருளை நோக்குங்கால் நம்பியாரூரர் தம் வாழ்வின் நெடுமையும், அவர் வாழ்விலும் வாக்கிலும் கலந்து வானவன் வரும் பேற்றையும் நாம் உணரலாம்.

இனி, திருநாகைக் காரோணப் பதிகத்தில் நம்பியாரூரர்

"வேம்பினொடு தீங்கரும்பு விரவி எனைத் தீற்றி
விருத்திநான் உமைவேண்டத் துருத்திபுக்கிருந்தீர்"

என்றும்,

"விட்டதோர் சடைதாழ வீணை விடங்காக
வீதி விடையேறுவீர் வீணடிமை யுகந்தீர்
துட்டராயின பேய்கள் சூழ நடமாடிச்
**சுந்தரராய்த்** தூமதியம் சூடுவது சுவண்டே"

என்றும் (7—46—4),

"மிண்டாடித் திரிதந்து வெறுப்பனவே செய்து
வினைக் கேடு பலபேசி வேண்டியவா திரிவீர்
தொண்டாடித் திரிவேனைத் தொழும்புதலைக்கேற்றுஞ்
**சுந்தரனே**"

என்றும் (7—46—5),

"**உண்மயத்த உமக்கடியேன்** குறைதீர்க்க வேண்டும்"
"**அண்மயத்தால்** அணிநாவல் ஆரூரன்"

என்றும் (7—46—11), அருளுவனவற்றையும் இணைத்துக் கண்டால் ஒருவகையில் நம்பியாரூரரின் வரலாற்றமைப்பை ஒழுங்கு பெறுத்த இயலும். அவ்வகையில் ஒருசில நிகழ்வு களை ஒருமையுறுத்தலாம்.

(1) திருக்கயிலையில் இறைவனும் இறைவியும் ஓவிய மண்டபத்திருந்தேனும், பிற உருவங்களை எண்ணியேனும், சில உருவங்களை உயிர்களின் நன்மை கருதி உண்டாக்கு தல் உண்டு. அவ்வகையில்,

"பிடியதன் உரு உமை கொள மிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடும் அவரிடர்
கடிகண பதி வர அருளினன் மிகு கொடை
படிவினர் பயில்வலி வலமுறை இறையே"

என்ற ஞானசம்பந்தர் திருவாக்குப்போல, உயிர்களின் நன்மை கருதி வரவழைக்கப் பெற்றவராக இவரை அமைத் துக்கொள்ளல் இயலாது.

ஆயினும், இவர் மனத்தாலும், உடலாலும், ஆவியாலும் இசைமயமாக்கப் பெற்றிருக்கின்றார். காலமும் இடமும் வேறுபட நின்றாலும், இவர்தம் உரையில் பரம்பொருள் கலந்து வரும் நிலைமை பெற்றிருந்தவராக அமைந்தவர். அடிமை கொள்ளும் நிலையில் பாடுபவர். புலவர் என்பவர்களையே விரும்பியேற்று அடிமை கொள்பவன் இறைவன் என்பதை மிகுதியும் விரித்துக் கூறுவதும், ஆட்கொள்ளப் பெற்ற நிலையில் இவர் இடம் நிறுத்தப் பெற்றவரே என்பதும் தெரியவந்தன.

அடுத்து, திருக்கயிலை வாழ்வுக்கு முன் இவர் ஆரூரில் படிமக்கலம் அமைத்துக் காட்டி, அடைக்கலம் பேணி, இடம் நிறுத்தப் பெற்றாராதல் வேண்டும். மேலும், அயிராவணம் ஏறாதே ஆனேறுஏறி, அமரர் நாடாளாதே ஆரூராண்ட தியாகேசப் பெருமானிடம் அடிமை பேணி, கோத்திட்டையை நோக்கிய குறிக்கோளில் வாழ்ந்திருந் தாராதல் வேண்டும்.

படிமக்கலம் சார்த்தி, அடைக்கலம் பெற்றமையால் ஆவணம் உடையாராக, திரு ஆணையும் உண்டு என அமைந்தவராதல் வேண்டும். அந்நிலையில், பரமன் சந்திரனை அணிந்து சுந்தரமாக விளங்குவதை மகிழ்ந்து,மகிழ்ந்து பன்முறையும் அனுபவித்திருத்தல் வேண்டும். தொண்டாடித்திரியும் தன்னைத் **"தொழும்பு தலைக்கேற்றும்"** (தொழும்பனாய்த் திரிதல் என்ற நிலை, இது தொண்டு நிலையின் உச்சி நிலை) சுந்தரனாக அமைந்து செயற்படுவதில் பரமன் முனைந்திருப்பதில், அவன் சுந்தரத் தன்மையில் அனுபவம் பெற்றிருக்கவேண்டும்.

குலவேந்தராய், கோத்திட்டை அனுபவம் நாடும் குறிப்பினராய், படிமக்கலம் தந்து அடைக்கலம் பெற்று இடம் நின்று, அவன் சுந்தரத் தன்மை விரும்பிய அனுபவமும், தம்மை மூங்கில் என நிறுத்தி ஏழிசையாய் இசைப் பயனாய் அமைத்த நிலையில் மனம், ஆவி முதலியவற்றால் கலந்து இசையனுபவமாக நின்ற பரம்பொருளனுபவமும் முன்னம் ஆரூரில் பெற்றிருந்தவர் ஆனமையின், கோத் திட்டையிலிருந்து கழிப்பாலை அனுபவம் பெறுதற்குரிய சாந்தம் அமைக்கும் பணிமேற்கொண்டும், பரமன் தலையில் சந்திரன் அமைத்த சுந்தர நிலையையும் எண்ணிய

வராய் ஆரூர் வாழ்வு பேணியவராக அமைந்திருத்தல் வேண்டும். அவ்வகையில், படிமக்கலம் சார்பாக அடைக் கலம் பெற்று வந்து நின்றவர் ஆகவும், சாந்தம் என்ற அனுபவம் பெறற்கு ஒத்த சாந்தம் அமைத்துத் தொண் டாற்றும் பணி மேற்கொண்டும் அமையும் வாழ்வில், அடைக்கலமாக வந்தவராதலின் திருக்கயிலையில் நின்றா ராதல் வேண்டும்.

அந்நிலையில், ஆலாலம் வந்தமையும் காலமதாகவே, திருநீறு எனும் சாந்தம் அமைய நிறுத்திய திருத்தொண்டின் காரணமாக இருவகை நஞ்சையும் இணைத்தும், ஒருமைப் படுத்தியும் கொடுக்கும் பேறு பெற்றார். அரவும் மதியும் அமைதியுடன் உறங்கும் சாந்த நிலை நோக்கிய கழிப் பாலை அனுபவம் விரும்பி, திருநீற்றுத்தொண்டு—சாந்தம் அமைத்த தொண்டின் காரணமாக, அவர் உடல்—உயிர் என்ற இரண்டையும் அழிக்கும் இருவகை நஞ்சினையும் இணைக்கவும் ஒருமிக்கவும் வல்லவராய் அவ்வாறே அமைத்துத் தந்தார்.

அந்நிலையில், நஞ்சருந்திய நல்லதாம் இறை பரம் பொருள் காட்சிக்கரியதாயிற்று. தொண்டர்தம் திருவுள் ளத்தே வீற்றிருந்தமையின் பரமன் அழியா நிலை பெற் றான் என்ற சிறப்பை வரலாற்று மூலம் உணர்ந்தவர் சுந்தரர். கழிப்பாலை மேய கபாலப்பனார் நின்ற அப்பாலைக் கப்பாலாம் நிலை அனுபவம் சாரும் வாழ்வுநிலைபெற்று உயர்ந்தவராகிய சந்தச் சுந்தரனார்,

**அடியார் நடுவுள் இருக்கும் அமைப்பை**

விரும்பும் நிலை பெறுகிறார்.

"உடையாள் உன்றன் நடுவிருக்கும்
உடையாள் நடுவுள் நீ இருத்தி
அடியேன் நடுவுள் இருவீரும்
இருப்பதானால் அடியேன் உன்
அடியார் நடுவுள் இருக்கும்
அருளைப் புரியாய் பொன்னம்பலத்தெம்
முடியா முதலே என் கருத்து முடியும்
வண்ணம் முன்னின்றே" (376)

என்று வேண்டிய மணிவாசகரின் திருவாசக விளக்கம் ஆலால சுந்தரனார்க்குரிய அகநிலை அவாவாக மலர்ந்தது.

திருநாகைக் காரோணப் பதிகத்தில் **உண்மயத்த உமக்கு** அடியேன் என்றும் **அண்மயத்த** என்றும் குறிப் பிடும் பொருள் நுட்பத்தை உணர்தல் வேண்டும்.

அந்நிலையில், ஏனைய உயிர்களுக்குரிய ஐந்தொழில் புரியும் சதாசிவநிலை கடந்து, அவைகளுக்கு ஞானநடம் ஊனநடம் அமையும் திருக்கூத்துப் பெருமான் நிலையும் கடந்து, அருட்கதிர் பரப்பும் அருளாட்சித் தலமாக நின்று சிறக்கும் தியாகப் பெருமான் மேவும் அருள் ஐந்தொழில் தலைப்படும் பேற்றுக்குரியவராகிறார்.

குலவேந்தராய் வானாளவுள்ளவராதலின் அரசத் திருவும், தொண்டு பேணியவராதலின் வைதிகத் திருவும் இணைய இவ்வுலகம் வருகிறார். அப்பாலைக்கு அப்பாலை எனப் பெறும் கடந்தநிலை அனுபவம் பெறச் செல்ல வேண்டியவராதலின், வானூடறுத்துச் செல்லல் வேண்டும். அது பரமமுழுமையான காலம், பரம முழுமையான இடம் என்ற இரண்டையும் வென்று மேலேறுதல் வேண்டும். (Absolute space and Absolute time) பரம முழுமை இடம் பரம முழுமைக்காலம் என்ற இரண்டுமே உமையின் கண் களாக அமைவன. அவைகளே ஆடியின் மூலம் பாவையர் களாக, பரவையும் சங்கிலியும் ஆக அமைந்து புற்றிடங் கொண்ட தலங்கள் இரண்டிலும் பெண்களாக அமைகி றார்கள். இருவரோடுங் கூடுதல் என்றதன் பொருள் இரண்டாலும் தாக்கப் பெறா நிலையை எய்துதல்என்பதே.

எனவே, அடியார் நடுவுள் இருக்கும் பேறு அவர்தம் அவாவாக அமைந்தது. ஆலாலம் அருந்திய வரலாறு காரணமாக அத்தகைய அவா அமைகிறது. அப்பாலைக் கப்பாலை செல்லும் நிலையில் இருந்தமையின் காலம், இடம் என்பவைகளை வெற்றிகொள்ளல் என்ற அமைப்பே இருபெண்களாக அமைத்து அனுப்பப்பெறுகி றார்கள்.

அடியவர்கள் நடுவுள் இருக்கவும் அவர்க்குத் தொண்டு செய்யவும் தாமே வலிய விரும்பித் தொண்டு மேற்கொண்டு நிலவுலகம் வந்தாராகலின் அவர்தம் செயல் ‘வன்தொண்டு’ எனப்பெற்றது.

அடியவர் நடுவுள் அமைதலும் அப்பாலைப் பேறுமே குறிக்கோளாதலின் ஏனைய கட்டுப்பாடுகள், விதி முறைகள் அவர்தம் வாழ்வில் இடம்பெறாதன ஆயின. ஆரூரில் படிமக்கலம் அமைத்துக் கொடுத்து, அடைக்கல மாகி, அதன் மூலம் அனைத்துப் பேறுகளும் பெற்ற வராதலின் ஆரூருக்கே குடியுரிமை ஆக்கப் பெறுகிறார். எனினும், அவர் தியாகேசப் பெருமானுடன் நேர்நின்ற அருள் ஐந்தொழிலை ஏற்ற அருட்கதிர் பரப்பும் அருள் நெறியில் நின்றும், இருந்தும், நுழைந்தும் அனுபவம்பெற வேண்டியவராகிறார்.

முன்பு நாம் தொண்டு கொண்ட வேள்வியில் கொண்ட கோலம் கொள்ளுக என்றது பெருமான் பாண்டி நாட்டில் தொண்டு மேற்கொண்டு வந்து வேள்வியில் கொண்ட கோலத்தையே 'தோழன்' என்ற நிலை பெற்ற நீவிர் அமைத்துக் கொள்ளும் கோலமாக அமையட்டும் என்று ஆணையிடுகிறான். அதனாலேயே சோமசுந்தரப் பெரு மானாக, பிரம்பும் முடியும் தாங்கிய மணக்கோலம் கொண்டாராயிற்று. தென்பாண்டி நாட்டைச் சிவலோக மாக்குவித்த பெருமை உண்மையின், குதிரை ஏறிவரமேற் கொண்டதும் பாண்டிய நாட்டு அமைப்பை உட் கொண்டதே.

பாண்டிய நாட்டில் தங்கியிருந்தபோது தான் நம்பி யாரூரர் அரசர்களை முன்னிறுத்தி, குலவேந்தராய்க் கோவாகி, வானாடு முழுதும் அரசு பேணும் கோத்திட்டை வாழ்வைச் சிறப்பித்துப் பரங்குன்றப் பதிகம் அமைத்துக் காட்டுகின்றார்.

இனி, 'ஆடியிற் பார்த்தல்' என்பதும் சுந்தரா வா என அழைத்ததும் ஆன்றோர்களாற் பேசப்பெறுகின்றன. வேயா டியார், தீயாடியார், வாயாடியார், நாயாடியார், இடமாடியார் எனவரும் (திருநாவலூர்ப் பதிகத்திற் காணப் பெறுவன) குறியீட்டுச் சொற்களின் விளக்கங்களின் அடிப்படையிற் காணும்போது ஆரூர்ப் படிமக்கலம் தந்து அடைக்கலமாகி யிருக்கவேண்டும் என்பதும், நிலவைச் சடையில் தாங்கிய சுந்தரக் கோலம் நம்பியாரூரரால் பெரிதும் பாராட்டப்பெற்ற ஒன்று என்பதும் கொள்ளலாம் தன்மையன.

படிமக்கலம் சார்பாக அடைக்கலமும், அப்பாலைக் கப்பாலை அனுபவத்தை உள்ளிட்ட சாந்தம் அமைக்கும் தொண்டும் காரணமாக அமைகின்றன. குலவேந்தராய்க் கோத்திட்டை மேவியபேறு பெற்றவர் ஆதலாலும் திருக் கயிலைத் தொண்டினை மேற்கொள்ள வேண்டியவரானார் என்பதே தெரியலாகும் அல்லது கொள்ளலாகும்ஆய்வியற் செய்திகள்.

ஆலாலசுந்தரராக அமைந்த நிலையில், அடியார் நடுவுள் இருக்கும் அவா எழுதலின் தென்னாடு வரவேண்டியவரானார். முடிவில் அவர் செல்லவேண்டிய இடம் அப்பாலைக்கு அப்பாலையாதலின் அதற்கு உறுதுணையாக, பரம இடம், பரமகாலம் என்ற இரண்டையும் வென்று செல்ல வேண்டிய நிலை இருப்பதால், அவ்விரண்டுமே அம்மையின் இரு சேடியர்களாக அமைத்து, இவ்வுலகுக்கு அனுப்பப் பெறுகிறார்கள் எனக் கொள்ளல் வேண்டும். பரவையார் சங்கிலியார் தத்துவப் பின்னணிகள்ஆங்காங்கே விளக்கப்பெறும்.

"முன்னம் நீ நமக்குத் தொண்டன் முன்னிய வேட்கை தீர இவ்வுலகுக்கு வந்தனை"

என்று எழுந்த வாக்குக்கு உரிய உரையாக, அமையும் வேட்கை என்பதை 'அடியார் நடுவுள் இருக்கும் வேட்கை' என்பதாகக் கொள்ளுதல் வேண்டும் என்பதும், தாமே வலியவந்து அடியார் நடுவுள் அமையும் பேற்றை விரும்பினாராதலின், அதுவே வன்தொண்டு என்பதாயிற்று என்பதும், தன்னையே இறைவன் வேயாடியாக நின்று, வேய்ங்குழலாக அமைத்துவிட்டான் ஆதலின் அர்ச்சனை பாட்டேயாகும் ஆதலால் மண்மேல் நம்மைச் சொற்றமிழ் பாடுக என்றான் என்பதும் பொருந்துற அமைவனவாயின.

திருஞானசம்பந்தர் மூலமாகத் தொடங்கப்பெற்ற திருப்பதிகப் பெருவழியில் திருவருள் நெறி எனப்பெறும் குருநெறியானது தோற்றம் பெற்றுவிட்டதாதலின், அனைத்துயிர்களும் இறைவனுக்கு அடிப்படைக் காரணம் இல்லாமலேயே அடிமை என அமைந்த நிலை மூவர் அருளாளர்களின் அருளிப்பாடுகளால் மாற்றம் பெற்றன.

திருஞானசம்பந்தர் தாவில் சராசரங்களில் எல்லாம் சிவம் பெருக்கும் திருப்பணியை மேற்கொண்டமையாலும்;

திருநாவுக்கரசுப் பெருமான் திருக்கதவம் திறந்து மூல மலப்பிணி நீக்கிய திருவருட் செயலாலும்;

திருநாவலூரர் பெருமான் வழக்கிலா வழக்கு என்றும் இசைவினால் இயைந்த ஏற்பு என்றும் அமைந்த அடிமை ஓலையைப் பற்றிக் கிழித்த பான்மையாலும்;

அனைத்துயிர்களும் அருள்நெறியில் இயங்கும் அமைப் பைப் பெறுவன வாயின, எனக்கொள்ளல் வேண்டும்.

மணம் தவிர்தல் என்பதாக வரலாறு அமைந்தாலும், சடங்கவி சிவாசாரியார் மகளுக்கு அமைந்த அந்நிலையே மணம் என்பதும் நம்பியாரூரருடன் இணைந்து நின்ற அந் நிலையே இயைபுற நின்ற மணத்தின் இயல்பு நிலை எனவும் கொள்ளுதல் வேண்டும். அதனாலேயே, மண நிலையை அடுத்த நிலையில் தவநெறி வேண்டப்பெற்றது என்பதும், பின்னர் அமைந்த மணங்களும் தவநெறி என வேண்டிப்பெற்ற ஒன்றுக்கு மாறானவை அல்ல என்பதை யும் போற்றி உணர்தல் வேண்டும்.

இனி, நின் வேட்கை தீர மண்மேல் விளையாடுவாய் என்பதற்கு வெவ்வேறு பொருள் கூறி இடர்ப்படுதல் முறை யாகாது. அடியார் நடுவுள் நிற்கும் அருமைப்பாட்டின் நிலைமை உணர்ந்து, அந்நெறியில் முற்ற நிற்றல் என்பதே பொருள் எனக் கொள்ளல் வேண்டும்.

உயிர் எனப்பெறும் நிலவை அருள் என்னும் கங்கையில் நிறுத்தி, அறம் என்ற சடையிற் பதிய வைத்தல் என்பதைச் செய்யும் நிலையில்தான் பெருமான் 'சுந்தரன்' என விளங்குகிறான் என்பதை உணர்ந்துணர்ந்து நின்ற காரணத்தால் 'சுந்தரர்' என்ற பெயருக்கு உரியவராக நின்ற ஆரூரர் அடிமை ஆவணத்தைப் பற்றிக் கிழித்து விட்டாராத லின், தோழமை நெறி அமைக்கப் பெறுகிறது. அது தோழமை நெறி பெற்று, **தம்பிரான் தோழர்** என நிற்கும் நிலையில் இறைவனுடைய தோழர் என்பதை வெளிப்படுத் தும் கோலம் தேவையாகிற காரணத்தால், இறைவன் பாண்டி நாட்டில் கொண்ட வேள்விக் கோலம் அமைத்துக் காட்டப் பெறுகிறது. பாண்டிய அரசுக்குரிய கோலம் ஆதலின் பிரம்பு சிறப்புடை அங்கம் என அமைந்தது.

அடியார் நடுவுள் இருத்தல் என்ற பேற்றை எய்த வந்த நம்பியாரூரர், மணவாளநம்பி அனுபவத்தால் அப்பாலைக்கப்பால் நின்ற சாந்த நிலை அனுபவத்துக்குச் சென்று நிற்க விழைந்தவராதலின், அதற்கு உறுதுணையாக அமைய வேண்டிய பரமமுழுமைக் காலம், பரம முழுமை இடம் என்பவைகளை வெற்றிகொண்டு செல்ல வேண்டிய முறைமையின் வண்ணம் பரவையார், சங்கிலியார் தொடர்பு அமைகின்றது என்பதையும் இங்கே இணைத்துக் காணுதல் வேண்டும்.

ஆரூர்ப்புற்றிடங்கொண்டான், மூலட்டானன், தியாகேசன் என மூன்றாய் நின்று வளர்ந்து சிறந்த பொருளனுபவ நிலையில் நம்பியாரூரர் தியாகேசனை இணைத்த அனுபவம் பெற்றுச் சிறந்தவராக அமைகிறார். அது குடித்திட்டை, கோத்திட்டை என்ற இரண்டு நிலைகளைக் கடந்த அப்பாலை நிலை அனுபவமாக அமைவது என்பதையும் அருள்நெறியில் நின்று, அண்மயத்தராய் நிற்கும் பேறு பெற்றார் என அமைத்துக் காணுதல் வேண்டும்.

‘தண்ணீர் விளக்கெரித்தல்’ என்ற அருட்செயலை மூலமாகக் கொண்டு, நமிநந்தி அடிகளால் அருட்கதிர் பரப்பும் ஆரூர் என அமையும் தொண்டு மலர்ந்தது. பின்னர், நமிநந்தியடிகள்தம் பேருழைப்பால் தியாகேசப் பெருமான் நேர்நின்று விழாவின் மூலம் அனுபவப் பொருளாம் நிலைமை உயிர்களுக்கு உற்றபேறாயிற்று. அவ்வகையில் புற்றிடங்கொண்ட பிரான் அனுபவம், மூலட்டானன் அனுபவம் என்ற இரண்டையும் இணைந்த தியாகேசன் அனுபவமும் இணைய நிறுத்தப் பெற்ற பேரனுபவம் காரணமாகவே இத்தலைப்பானது ஒத்துறவமையும் **முத்திறப் பொலிவு** என்ற பெயரைப் பெறுவதாயிற்று.

அவ்வகையில் நம்பியாரூரர் தோழமைப் பெறும், அதற்குரிய கோலமும், அடியார் நடுவுள் இருத்தலாம் அறம் பெறற்பேறும் ஆகிய முத்திறப் பேற்றாலும் முழுமையுற அமைந்த பொலிவைப் பெற்று விளங்கும் பேறுபெற்றார் என எடுத்து நிறுத்தி முடிப்பதே இத்தலைப்பில் அமைந்த பொருண்மை.

## இத்தலைப்பின் முடிப்புரை

தில்லைப் பொதுவில் எழுந்த வானொலியின் ஆணை தொடங்கி, கழுமலக் காட்சியை அனுபவப் பேறாக்கி வந்த நம்பியாரூரர் ஆரூரை அணுகுகின்ற காலையில் அருமையான வரவேற்பினை ஆரூர்த் தொண்டர்கள் அமைத்துக் கொடுக்க, அந்நிலையில் ஆரூர் எத்தகைய படி நிலை வளர்ச்சிகளால் சிறந்திருந்தது என்பதும், ஆரூர் எவ்வாறு ஓரூர் என நின்று உத்திரப் பெருவிழாவாலும் ஆதிரைப் பெருவிழாவாலும் சிறந்திருந்தது என்பதும் விளக்கப் பெற்றன.

நம்பியாரூரரின் வாழ்வியற் சிக்கல் தீர்தற்குரிய வகையில் அவர்தம் கோத்திட்டைக் கொள்கை, மணவாள நம்பியை உடன் கொண்ட அப்பாலைக்கப்பாலை அனுபவ வேட்கை ஆகியவை இணைத்துக் காட்டப் பெற்றன. அவ்வகையில், தோழமை, கோலம், கொள்கையை ஒட்டிய செயல் என்ற மூன்றாலும் இணைந்த ஒருவகைப் பொதுமைப் பொலிவை நம்பியாரூரர் பெற்றார் என்பதை ஆய்வு முறையில் அறிந்துணர்ந்து தெளிதல் வேண்டும்.

# 4. புனிதர் நடுவணை பொலிவு

**முன்னுரை**

நம்பியாரூரர் ஆரூரின் அடிகள் எனப்பெறும் தம்பிரான் தோழர் ஆகிறார். **தம்பிரான் தோழர்** என்ற தகுதிக்கேற்ற திருக்கோலமும் வரையறை செய்யப் பெறுகிறது. தம்பிரான் தோழர் என்ற பெயரே மக்களால் பெரிதும் எடுத்துப் பேசப்பெறுகின்ற பொருண்மைப் பெயராகின்றது.

அங்கணரால் ஓலைகாட்டி ஆட்கொள்ளப் பெற்றவர் என்பதும் தம்மையே தோழமையாகத் தந்து ஆட்கொள்ளப் பெற்றவர் என்பதும் வரலாற்று நிகழ்வுகளேயாயினும், கோலமும் கோலத்தோடு இணைந்த கொள்கையும், இவ்விரண்டையும் இணைத்து நிகழ்த்திய வரலாற்று நிகழ்வையும் உளங்கொண்டு நோக்கினால், நம்பியாரூரர் வெண்ணெய் நல்லூர் அருட்டுறையுட் புகுந்து பெற்ற பொலிவை விட, ஆரூரில் பெற்ற ஒத்துறவமைந்த முத்திறப் பொலிவு வன்மையும் வான்மையும் உடையதாகவே அமைகிறது.

ஆரூர் உறப்பிறந்த உயிர்களின் அன்றாட வாழ்வியல் நிகழ்வுகளில் நம்பியாரூரர் பொருண்மைப் படுத்தப் பெறுகிறார். அவர்தம் சிறுசிறு செயல்களும் ஆரூர் மக்களின் பேச்சுப் பொருண்மைகளாகின்றன. நம்பியாரூரர் தம் அன்றாட வாழ்வியற் செய்திகள் தம்பிரான் தோழர் என்ற முத்திரையுடன் மக்கள் மன்றத்தில் ஆய்வு செய்யப் பெறுவன ஆயின.

நம்பியாரூரர் திருவாரூரில் பதித்த அடிச்சுவடுகள் காலத்தையும் இடத்தையும் கடந்து நின்று, சமயநெறிவளர் உயிர்களுக்கெல்லாம் அமைத்துத் தந்த வாழ்வியற் பாதை என்ற பொருண்மையால் நிலைபெறுவனவாயின.

கி. பி. ஏழாம் நூற்றாண்டில் ஆளுடையபிள்ளையையும் ஆளுடைய அரசுகளையும் முன்னிட்டுக் கொண்டு

தோன்றிய திருப்பதிகப் பெருவழியென்னும் **திருநெறிய தமிழ்**, திருமுறைப் பெருநெறி எனப்பெறும் திருவருள் நெறியானது அடுத்த ஒன்றரை நூற்றாண்டுக் கால அளவில் முழுமைபெற்ற முடிமணி நெறியாக, மக்கள் தம் வாழ்வியல் நெறியாக வளமையும் வான்மையும் பெற்றிருப்பதை நம்பியாரூரர் வழி நின்று காணமுடிகிறது. **தொண்டர்க்கு ஆணி** என நின்று அருள்நெறியைச் செப்பமுற வளர்த்த அருளியல் வரலாற்று நாயகர்கள் பலர் மக்களால் நாளும் பேசவும் தொழவும் ஆய வாழ்வியற் பொருள் ஆனார்கள்.

ஆரூர்ப்பெருமானுக்கு முடித்தொண்டராகி முனிவர்பலர் பணி செய்தலேயன்றி, அடித்தொண்டன் என நின்ற நந்தியும் உளன் என்று கூறி, ஆனால், அடித் தொண்டனாக நின்ற நந்தி ஏதேனும் அலுவல் காரணமாக வெளியூருக்குச் சென்று விட்டால், ஆரூர்ப் பெருமானும் அவனுக்கு முடித் தொண்டு செய்வாரும் பிறரும் இருந்தாலும், வெளியூரிலிருந்து ஆரூரானை வழிபட வருபவர்கள் விளக்கேந்தி வந்து வழிபட்டு நின்றாலும், அடித்தொண்டன் நந்தி இல்லாமையால் ஆரூர் அனைவருக்கும் இருளாகத்தான் இருக்கும் என்றுணர்த்திய நாவரசரின் செஞ்சொற் பொருளை உணர்ந்தால் திருத்தொண்டின் நெறி நின்றார் வாழ்வியல் வளம் இன்னதென அறிந்து மகிழும் வெற்றி அமையும்.

"துடிக்கின்ற பாம்பு அரை ஆர்த்துத்
துளங்கா மதி அணிந்து
முடித்தொண்டராகி முனிவர்பணி
செய்வ தேயு மன்றிப்
பொடிக் கொண்டு பூசிப் புகுந் தொண்டர்
பாதம் பொறுத்த பொற்பால்
**அடித்தொண்டன் நந்தி** என்பான் உளன்
ஆரூர் அமுதினுக்கே" (4—102—4)

என்று அடித்தொண்டனை அறிமுகப்படுத்திய பிறகு

"ஆராய்ந்து அடித் **தொண்டர் ஆணிப்பொனார்** அகத்தடக்கிப்
பாரூர் பரிப்பத் தம் பங்குனி உத்திரம் பாற்படுத்தான்
நாரூர் நறுமலர் நாதன் **அடித்தொண்டன் நம்பி நந்தி**
நீரால் திருவிளக்கிட்டமை நீள்நாடு அறியுமன்றே"

என அடித் தொண்டன் நந்தியைத் **தொண்டர்க்கு ஆணிப் பொன்** என விளக்கிப் பாராட்டி (4-102-2),

"கொடிகொள் விதானம் கவரி பறை
சங்கம் கைவிளக் கோடு
இடிவில் பெருஞ் செல்வம் எய்துவர்
எய்தியும் ஊனம் இல்லா
அடிகளும் ஆரூர் அகத்தினராயினும்
அம் தவளப்
பொடி கொண்டு அணிவார்க்கு இருள் ஒக்கும்
நந்தி புறப் படிலே"

என (4—102—6) அப்பரடிகள் வரலாற்றுப்படுத்திக் காட்டும் பொருண்மையை எளிமையாக இகழ்ந்தொதுக்க இயலாது. அடித்தொண்டன் நந்தி இல்லையானால், அத்தனை ஒளிகளும் இருந்தும், பேரொளியாம் ஆரூர்ப் பெம்மான் இருந்தும், முடிநந்தியாம் தியாகேசப் பெம்மான் இருந்தும், வருபவர்கள் அருட்செல்வ வாழ்வின் அடையாளமாகிய கைவிளக்கு ஏந்தியே வரினும், புற இருளேயன்றி அகத்திருளையும் பாரித் தழிக்கும் திருநீற்றுப் பொடி பூசியேவரினும், ஆரூர் இருள் சூழ்ந்ததே என்று அப்பரடிகளின் அருளிப்பாடு அமைத்துக் கொடுக்கும் திருத்தொண்டு நெறியை உளத்தில் இருத்துதல் வேண்டும்.

அறுபத்து நான்கு திருவிளையாடல்களைப் புரிந்து, தென்பாண்டி நாட்டைச் சிவலோகமாக ஆக்கியமைத்த பெருமை இறைவனுக்கு உண்டு என்றால் அறுபத்துமூன்று தனி அடியவர்களுடனும் ஒன்பது தொகை அடியவர்களுடனும் தம்மை இணைத்துக் கொண்டதால் இறைவனும் வரலாற்று வாழ்வைப் பெற்றவனாக அமைகிறான் என்ற வகையில், அருள்நெறித் தொண்டு பூண்ட அடியவர்கள், அருள் வழக்கத்தை மேற்கொள்ளும்போது இறைவனையும் விஞ்சிய நிலையில் செயற்படுகிறார்கள் என்ற பொருளில்,

"திருமறை நம்பர் தாம் முன்பு அருள் செய்த அதனைச் செப்பும்
ஒருமையில் நின்ற தொண்டர் தம்பிரானார்பால் ஒக்க
வரும் அருட் செய்கை தாமே வகுத்திட வல்லோ ரென்றால்
பெருமறையுடன் மெய்த்தொண்டர்க்கு இடையீடு பெரிதா
மன்றே"

என அமைந்த சேக்கிழார் திருவாக்கை (பெரியபுராணம் 2495) உன்னுதல் வேண்டும். இவ்வாறு ஞானசம்பந்தராலும் நாவுக்கரசராலும் தொடங்கப்பெற்ற திருவருள் நெறியின் வளர்ச்சியானது நம்பியாரூரர் காலத்தில் மிகச் சிறப்புற்ற நிலையில் இருந்தது.

அடியவர் தம் வாழ்வுடன் தம்மை இணைத்துக் கொள்ளவே இறைவன் நாளும் விரும்பினான். இந்தத் தலத்தைப் பாட மறந்தாயோ என்றும், தலத்துக்குரிய இறைவனே வந்து தம் தலத்துக்கு வழிகாட்டி அழைத்துச் சென்று பதிகம் பாடச் செய்தான் என்ற செய்தியும் அடியவர் தம் வாழ்வுடன் தம்மை நாளும் இணைத்துக் கொள்ளவே பெரிதும் விரும்பினான், செயல்பட்டான் இறைவன் என்பதை உறுதிப்படுத்துகிறது.

திருக்கோயில் உள்ளிருக்கும் பெருமான் வாழ்பொருளாக இருக்கிறான்; அவனிடம் பேச முடியும்; நேற்று அவன் தம்பிரான் தோழருக்காகப் பேசினான்; மனித உருத்தாங்கி வந்து ஓலை காட்டி ஆளாகக் கொண்டான் என்றெல்லாம் பேசி, தொண்டர்க்குத் தொண்டனாய் வாழ்கிறான் என்பதை நாளும் உறுதிப்படுத்தும் வகையில் அருளிப்பாடுகள் நிகழ்வனவாயின. சாதி காரணமாக வரும் வழக்குகளெல்லாம் அழிந்தொழிய, இறைவனுக்குரிய தொண்டுக்குலம் என்ற ஒரு குலமே மேம்பட்டு விளங்கும் பெருமை பெற்றது. ஆளும் அரச மரபினர், ஏனைய உயர் குலத்தோர் ஆகிய அனைவரும் சைவநன் மங்கல அடையாளத்துடன் தொண்டுக்குலமாகவே விளக்கம் பெற்று வாழ்ந்தனர் என்ற சமூக அமைப்பானது உருப்பெற்று விளங்கத் தொடங்கியது. நிலவுலகப் பகுதிகளேயன்றி, தேவ உலகம் போன்ற மேலுலக மாந்தரும் தொண்டு நெறி பேணி ஆரூருக்கு வருவதும் போவதுமாக அமைந்தனர்.

இந்நிலையில் பூங்கோயில் அமர்ந்த பெருமான் 'முத்து' என நின்றான் என்கிறார் நம்பியாரூரர். நாளும் வந்து வணங்குபவர்களுக்குத் தன்னுடைய தனித் தன்மையை வழங்குதல் இன்றி, வந்து வணங்குபவர்களுக்கு, அவ்வவர் தம் மூலாதாரத்தில் விளங்கும் மூலட்டானனையே தன் மூலமாக வெளிப்படுத்தும் நிலையில் இருந்தான். தன்னை அவர்களிடம் பதியவைத்தல் இன்றி, வந்து வணங்குபவர்களை—அவர்தம் ஆன்ம இயல்பைத் தம்மிடத்தே பிரதிபலித்துக் காட்டும் தன்மையாளனாகவே புற்றிடங் கொண்டான் விளங்கினான். இதுவே அவன் 'முத்து' என நின்ற நிலை.

"முத்தினைத் தொழுது நாளும் முடிகளால் வணங்குவோருக்கு
அத்தன்மைத் தாகும் ஆரூர் அப்பன்"

என்று (7—8—9) கூறி, ஆயினும், தம்மைப் பொறுத்த வரையில், இடமாற்றம் அமைந்தாலும் காலமாற்றம் அமைந்தாலும் அவைகளால் மாறுபடுதலின்றி, **என்னுடைய உரையில் கலந்து வருபவன் ஒருவன் உளன்;** அவன் உருத்திரலோகன் என்று குறிப்பிட்டுக்காட்டி, **"தன்னையே யாழ் முயன்றிருக்கும் ஆரூர்"** என அமைத்து, இன்னோசை அருளுரைகள் என்னிடமிருந்து வெளிப்படுமாறு செய்கிறான் என்றும், தமியனாகிய என் மூலம், தம் சொலால் அருள் என்ற பயனை அனைவர்க்கும் வழங்குகின்றான் என்ற கருத்தில்

**"தம் சொலால் அருள்பயக்கும் தமியனேன்"**

என்றும் (7.8.10) குறிப்பிட்டருளுகின்றார்.

இந்நிலையில் 'தம்பிரான் தோழன்' என்ற ஆணையின் மூலம் தாம் பெற்ற பேற்றினை எடுத்துக் கூறி, தம்முடைய தனி நிலையில் மண்ணுலகில் மாய உடம்புடன் வாழும் பிறவிவாழ்வை அஞ்சினேன் வெறுப்புற்றேன் என்றுகூறி, ஆயினும், தன்னுடன் கலந்து தன்னுடைய உரையில் விரவி வருகின்றான் ஒருவன் உளன்; அவன் என்னைவேயென, யாழென அமைத்து இன்னிசைக் களமாக்குகின்றான்; என்மூலம் தம் சொல்லை வெளிப்படுத்தி அருள் என்ற பேற்றை வழங்குகிறான் என்றும் குறிப்பிட்டுக் காட்டினார்.

**பரவை மணம்**

**"தம்பிரான் தோழர்"** எனப் பொருட்படுத்து நிறுத்திய பெருமான் நம்பியாரூரர்க்குத் திருமண நிகழ்வை முடித்து வைக்கத் திருவுள்ளம் கொள்கிறான். நம்பியாரூரர் ஆரூர்ப் புற்றிடங் கொண்டானைப் போற்றிப் பாடிய பதிகங்களாக இன்று கிடைக்கும் திருப்பதிகங்கள் ஏழு.

(1) **"கரையும் கடலும்"** எனத் தொடங்கும் திருப்பதிகம் "எந்தை இருப்பதும் ஆரூர் அவர் எம்மையும் ஆள்வரோ கேளீர்" என்பதை இறுதியிற்கூறி முடித்தமைக்கும் பதிகமாக அமைதலின் அது ஆரூரை அணுகிய அந்நிலையில் அருளிய திருப்பதிகமாக அமைந்தது.

(2) "அந்தியும் நண்பகலும் அஞ்சுபதம் சொல்லி
முந்தி எழும்பழைய வல்வினை மூடாமுன்
சிந்தை பராமரியாத் தென்திரு வாரூர்புக்கு
எந்தை பிரானாரை என்றுகொல் எய்துவதே"

என்ற தொடக்கத் திருப்பாட்டை உடைய திருவாரூர்த் திருப்பதிகம், திருக்கச்சியில் இடக்கண் பெற்றபின், திரு வாரூரை உளத்தில் நினைந்து புறப்பட்டபோது அருளிய பதிகமாகச் சேக்கிழார் அமைத்தருளினார்.

(3) "குருகுபா யக்கொழும் கரும்புகள் நெரிந்தசாறு
அருகுபா யும்வயல் அந்தண் ஆ ரூரரைப்
பருகுமா றும்பணிந்து ஏத்துமா றுந்நினைந்து
உருகுமா றும்இவை உணர்த்த வல்லீர்களே" (7—37—1)

என்ற திருப்பாட்டைத் தொடக்கமாக உடைய பதிகம், திருவொற்றியூரிலிருந்து மீண்டு, காஞ்சியில் இடக்கண் பெற்று, திருத்துருத்தியில் பிணி நீங்கப்பெற்று, ஆரூரை அடைந்து **பரவையுண் மண்டளியை** வணங்கி அன்றிரவு திருமூலட்டானரைப் பணியச் செல்கின்ற காலத்தே பாடியது.

(4) மேலே கூறப்பெற்ற திருப்பதிகங்களுக்குப் பின்னர் அமைய இருக்கும் பதிகம் ஆரூர்ப் பெருமானை மற்றைக் கண் வேண்டிப் பாடிய திருப்பதிகம். அது,

"மீளா அடிமை உமக்கே ஆளாய்ப்
பிறரை வேண்டாதே
மூளாத் தீப்போல் உள்ளே கனன்று
முகத்தால் மிகவாடி
ஆளாய் இருக்கும் அடியார் தங்கள்
அல்லல் சொன்னக்கால்
வாளா யிருப்பீர் திருவா ரூரீர்
வாழ்ந்து போதீரே" (7—95—1)

என்ற தொடக்கத் திருப்பாட்டைக் கொண்டது.

அடுத்துவரும் இரண்டு திருப்பதிகங்கள் முறையே திருவொற்றியூரிலிருந்தும், சேரமானின் நகராகிய கொடுங் கோளூரிலிருந்தும் திருவாரூரை நினைந்து பாடியவை. அவை முறையே,

(5) "பத்திமையும் அடிமையையும் கைவிடுவான் பாவியேன்
பொத்தின நோயது இதனைப் பொருளறிந்தேன்
போய்த் தொழுவேன்

முத்தினைமா மணிதன்னை வயிரத்தை மூர்க்கனேன்
எத்தனை நாள் பிரிந்திருக்கேன் என்ஆரூர்இறைவனையே'
(7—51—1)

என்ற முதற்பாட்டைக் கொண்டதாய் நின்ற பதிகம் திரு வொற்றியூரிலும்,

(6) ''பொன்னும் மெய்ப்பொரு ளும்தருவானைப்
போக மும்திரு வும்புணர்ப் பானைப்
பின்னை என்பிழை யைப்பொறுப் பானைப்
பிழையெ லாந்தவி ரப்பணிப் பானை
இன்ன தன்மையன் என்றறி வொண்ணா
எம்மா னைஎளி வந்தபி ரானை
அன்னம்வை கும்வ யற்பழ னத்தணி
ஆரூ ரானை மறக்கலு மாமே'' (7—59—1)

என்ற தொடக்கத் திருப்பாட்டினை உடைய திருப்பதிகம் கொடுங்கோளூரிலும் இருந்துகொண்டு ஆரூரை நினைந்து அருளப் பெற்றவை.

மேலே குறிப்பிடப் பெற்ற திருப்பதிகங்கள் ஆறனுள் முதலில் குறிப்பிடப்பெற்ற திருப்பதிகம் முதன் முதலாக ஆரூரை அணுகிய காலையில் அருளப்பெற்றது. ஏனைய ஐந்தும் பரவையார் திருமண நிகழ்வுக்குப் பின் அருளப்பெற்றவை. எனவே, இவ்ஆறு பதிகங்களின் அடிப்படையில், பரவை திருமணத்துக்கு முன்னிருந்த, நம்பியாரூரரின் மன நிலையை உணர்ந்து கொள்ளல் இயலாத ஒன்றாம். தம்பிரான் தோழராக ஆட்கொள்ளப் பெற்ற பின்னும் பரவையார் திருமணத்துக்கு முன்னும் நம்பியாரூரர் பல பதிகங்கள் பாடியிருக்க வேண்டும். நம் நல்லூழின்மை காரணமாக அவை கிடைக்கப் பெற்றில. ஆரூர்ப் பதிகங்கள் ஏழனுள் ஆறு இவ்வாறாக எஞ்சிய பதிகம் பற்றிய செய்தியையும் ஆய்ந்து காணவேண்டும்.

''இறைகளோ டிசைந்த இன்பம் இன்பத்தோ டிசைந்த வாழ்வு
பறைகிழித் தனைய போர்வை பற்றியான் நோக்கினேற்குத்
திறைகொணர்ந் தீண்டித் தேவர் செம்பொனும் மணியும்தூவி
அறைகழல் இறைஞ்சும் ஆரூர் அப்பனே அஞ்சினேனே''

என்ற முதல் திருப்பாட்டை உடைய திருப்பதிகம் நம்பியாரூரர் சேரர் பெருமானுடன் பலபதிகளையும் தொழுது வணங்கி ஆரூர் அணைந்தபோது, ஆரூரில் தொண்டர்கள்

எதிர்கொண்டு வரவேற்றபோது, அருளியது என அப்பதிக வரலாற்றைச் சேக்கிழார் அமைத்துக் காட்டியருளுகின்றார். அந்நிலையில், தம்பிரான் தோழர் என்ற நிலைபேற்றுக்குப் பின்னும், பரவை துணைவர் என்ற மணவாழ்வுக்கு முன்னும், அமைந்த கால அளவையில் நம்பியாரூரர் ஆரூரில் அருளப் பெற்ற பதிகங்களாக ஒன்றுகூடக் கிடைக்கவில்லை.

அடுத்து, பரவையார் திருமணத்துக்குப் பின்னர் அருளப் பெற்ற திருப்பதிகங்களில், பரவையின் தொடர்பைக் குறிப்பிடும் பதிகங்களில், பரவையாரின் மூலமாகச் சில வாழ்வியல் உண்மைகளை உணர முடிந்தது என்ற குறிப்பை வெளியிடுவதை நாம் காணலாம்.

பத்திமையையும் அடிமையையும் இணைத்து வளர்க்கும் பெருநெறியில் நிற்பதற்குப் பரவையார் சங்கிலியார் ஆகிய இருவர் மணமும் தமக்குத் துணை செய்தன என்ற கருத்தை நம்பியாரூரர்தம் பதிகங்களிற் காண முடிகின்றது.

"ஏழிசையாய் இசைப்பயனாய் இன்னமுதாய் என்னுடைய
தோழனுமாய் யான் செய்யும் துரிசுகளுக்கு உடனாகி
மாழை ஒண்கண் பரவையைத் தந்து ஆண்டானை"

(7–51–10)

என்றும்,

"வங்கமலி கடல்நஞ்சை வானவர்கள் தாம்உய்ய
நுங்கி அமு தவர்க்கருளி நொய்யேனைப் பொருட்படுத்துச்
சங்கிலியோடு எனைப் புணர்த்த தத்துவனை"

(7–51–11)

என்றும் அமையும் நம்பியாரூரர் திருவாக்குக்களை உன்னி உணர்க. திருமணம் மூலமாகத் 'துணைவி' என்ற நிலையை ஏற்றிருந்தாலும், பரவையார் மூலமாகத் தமக்கு வளர்ந்து சிறந்தவை ஆரூர்ப் பெருமானிடத்தில் பத்திமையும் அடிமையுமே. பரவையாரை முன்னிட்டு நினைவு எழுதல் இயற்கையே. நினைவு எழுதற்குரிய அந்த அளவில் மட்டுமே பரவையார் துணை நிற்க, அதன் வளர்ச்சியெல்லாம் ஆரூர்ப் பெருமானின் பத்திமை நோக்கியே சென்று பாரிப்பதாக அமைந்திருந்தது என்று கூறும் நம்பியாரூரர் வாழ்வியல் திறம் அறிந்து போற்றப் பெறவேண்டிய தொன்றாம்.

அவ்வாறே, சங்கிலியார் திருமணத்தால் தமக்கு நேர்ந்த நன்மை பற்றியும் குறிப்பிடுகின்றார். அப்பகுதி சங்கிலியார் மணத்தில் விளக்கப்பெறும்.

இனி, "இறைகளோடிசைந்த இன்பம்" எனத்தொடங்கும் முதல் திருப்பாட்டையுடைய பதிகத்தில் "மனித வாழ்வு" பற்றிய சில ஆய்வியல் முடிவுகளை நம்பியாரூரர் அமைத்தருளுகின்றார். அப்பதிகத்தில் தன்னுடைய ஆய்வியல் முறையையும் அமைத்துக் காட்டும் செம்மை சான்ற நயம் அறிந்து மகிழ்வதற்குரியதாம்.

"பறை கிழித்தனைய போர்வை" எனத் தம்முடைய உடம்பைக் கூறுகின்றார். பறை–ஒலியெழுப்புதற்குரிய நிலையில் அமைக்கப்பெற்ற தோல். ஆனால், அது பொத்தல் உடையதாக இருப்பதால் அதனைப் பறை என்று சொல்லாமல் 'தோற்போர்வை' என்ற பொருள்படும் நிலையில் அமைத்துக் காட்டுகின்றார்.

திருநாவலூர்ப் பதிகத்தில் நம்பியாரூரர் தம்மை இறைவன் 'வேய்' என நிறுத்தி, 'வேயாடியார்' எனத் தம்மை அமைத்துக் கொண்டதன் மூலம் தாம் ஏழிசையின் நிலைக்களமாக அமைந்த நிலையை நம்பியாரூரரே ஏற்றுக் கொள்ளுகின்றார். ஆரூர் தந்த அனுபவச் சிறப்பு என்றால் அது "யாழ்முரன்றேத்தும் ஆரூர்" என்பதாகக் கூறி, இவ்வுடம்பை யாழ் என நிறுத்தி அருளோசை எழப் பண்ணியதுதான். உரையில் கலந்து வருபவனாக இருந்த இறைவன், பின்னர் தம்மையே ஏழிசையின் நிலைக்களனாக அமைக்கிறான் என்று கூறி, அதற்குத் துணை நின்ற வகையில்,

"பண் மயத்த மொழிப் பரவை"

என்ற மதிப்பீட்டின் மூலம், பறை கிழிந்தனைய போர்வை, பண்ணின் நிலைக்களன் ஏழ் என நின்றது பரவையின் துணைமையால் என்ற இணைப்புக் கருத்தை நம்பியாரூரர் பதிகங்களிற் காண முடிகிறது.

பறைகிழிந்தனைய போர்வையில் பொருளற்ற ஒலி வரும். பொருண்மை முழுவதையும் இணைத்து நிறுத்திப் பெற்ற அனுபவத்தின் அடிப்படையில் எழும் அருளோசை

வருவதற்கு வாய்ப்பில்லை. அதற்கு உரிய ஒரு காரணமும் உண்டு.

**"இறைகளோடு இசைந்த இன்பம் இன்பத்தோ டிசைந்த வாழ்வு"**

என்பதே அக்காரணம் (7.8.1). சிறுசிறு பொருள்களுடன் இசைவு, இசைவு காரணமாக எழுந்த இன்பம், இன்பத்தோடு இசைவுடைய வாழ்வு அவ்வளவே. எல்லாமே இயைபின் அடிப்படையில் நிகழ்வன. முழுமையாகத் துய்க்கும் நிலை இல்லை என்பதே. சிறுசிறு பொருளுடன் இயைவதும், இயைவதால் எழும் இன்பமும், இன்பத்தோடு இயைவது எனப் பெறுவதாகிய வாழ்வும் பயனற்றவைகளாகி, அஞ்சுதற்குரியனவாகவும் அமைகின்றன. அதனாலேயே, ஆரூர் அப்பனே **"அஞ்சினேன்"** என்று குறிப்பிடுகின்றார்.

அடுத்த நிலையில், மானிட வாழ்வு பற்றிய அரிய கருத்தொன்றை அமைத்துக் கூறுகிறார். அதன் நயம் எண்ணி எண்ணி மகிழ்தற் பாற்று.

மடந்தையர்களால் மதிக்கப் பெறுவது என்ற ஒன்றே இம்மனித வாழ்வின் சிறப்பாக அமைகிறது. உண்மையில் இவ்வாழ்வு எந்த வகையாலும் மதிக்கப் பெறும் தகுதியுடையதன்று என்று கூறுகிறார். முதலில் தன்னுடைய ஆய்வியல் முறையில் ஆய்ந்து வெளியிட்ட கருத்தாக ஒன்றை அமைத்துக் காட்டிய தம்பிரான் தோழர் அடுத்த நிலையில், மடந்தையர்கள் நேர்க் காட்சியில்லாமல் மருண்டு நோக்குவதும் மறித்துப் பார்ப்பதும் ஆகிய முறையல்லா முறையால் பார்த்து மதிப்பீடு செய்வதால் தவறான மதிப்பீடு வருகிறது என்பதையும் சுட்டிக் காட்டுகிறார்.

> "ஊன்மிசை உதிரக் குப்பை ஒருபொருளிலாத மாயம்
> மான் மறித் தனைய நோக்கின் மடந்தைமார் மதிக்கும் இந்த
> மானுடப் பிறவி வாழ்வு வாழ்வதோர் வாழ்வு வேண்டேன்"

என்றுகூறி,

> "நறுமலர்ப் பூவும் நீரும் நாள்தொறும் வணங்கு வாருக்கு
> **அறிவினைக் கொடுக்கும் ஆரூர் அப்பனே அஞ்சினேனே"**

எனவும் கூறிய பொருளுணர்வை அறிந்து சிந்தித்தல் வேண்டும். அருள் வளத்தால் பெறும் அறிவு கொண்டு சிந்தித்தல் வேண்டும் என்பதையும் அமைத்துக் காட்டினார்.

"சொல்லிடில் எல்லையில்லை சுவையிலாப் பேதை வாழ்வு
நல்லதோர் கூரைபுக்கு நலமிக அறிந்தே னல்லேன்"

என்றும்,

"நரம்பினோடு எலும்பு கூட்டி நசையினோடு இசைவு ஒன்றில்லாக்
குரம்பை வாய்க் குடியிருந்து குலத்தினால் வாழமாட்டேன்"

என்றும்,

"மணமென மகிழ்வர் முன்னே மக்கள் தாய் தந்தை சுற்றம்
பிணமெனச் சுடுவர் பேர்த்தே, பிறவியை வேண்டேன்நாயேன்"

என்றும்,

"தாழ்வெனும் தன்மைவிட்டுத் தனத்தையே மனத்தில்வைத்து
வாழ்வது கருதித் தொண்டர் மறுமைக்கு ஒன்று ஈயகில்லார்
ஆழ்குழிப் பட்டபோது அலக்கணில் ஒருவர்க் காவர்"

என்றும்,

"உதிரநீர் இறைச்சிக் குப்பை எடுத்தது மலக்குகைம் மேல்
வருவதோர் மாயக் கூரை வாழ்வதோர் வாழ்வு வேண்டேன்"

என்றும் நம்பியாரூரர் அருளியவைகளை, அவ்வருளிப்பாடுகளின் உயிரோட்டம் என நின்றதை அறிந்து இணைத்துக் காணுதல் வேண்டும்.

'நல்லதோர் கூரையில் இருந்தும் அதன் நலம் இன்னதென்று வாழவில்லை" என்றும், குலப்பெருமை காரணமாக வாழ்வதால் எடுத்த இக்குரம்பையின் அகநிலை வாழ்வை அமைத்துக் கொள்ளாமல், குலப் பெருமை முதலியவற்றை எண்ணி இவ்வுடம்பில் ஒரு மூலையில் குடியிருக்கிறோம் என்றும், "மணமென மகிழ்வதும் பிணமெனச் சுடுவதும்" ஆகிய ஒவ்வாமையை நினையாமல், "வாழ்வை அமைக்காமல், பிறவியை அமைக்கிறோம்" என்றும், "இவ்வுடம்பினைக் கொண்டு உறுபொருள் தேடாது சிறுபொருள் தேட முற்பட்டோம்" என்றும், "மாயக்கூரை எனக் கருதிக் கொண்டு உண்மை வாழ்வை அமைப்பதாக எண்ணிப் பொய்மை வாழ்வு அமைத்தோம்" என்று விளக்கிக் காட்டுகின்றார். இவ்வளவையும் கூறி, ஆரூர் அப்பனே அஞ்சினேன் என்று அருளும் முறையில், தூய அறிவையும், இணைந்த அணைவினைக் கொடுக்கும் அன்பையும், யாழ்முயன்றிருக்கும் இசையை

யும், இருவர்காணா அரிய ஒளியையும், முத்தென நின்ற முழு மையையும், எம் இல்லமாகிய உடம்பில் இறைவன் தம் சொல்லை முழக்குவான் என்ற ஒருமையையும் பெற முடியும் என அப்பதிகத்திலேயே அமைத்துக் காட்டியிருப் பதையும் இணைத்துக் கண்டால் "இறைகளோடிசைந்த இன்பம்" எனத் தொடங்கும் திருப்பாட்டைக் கொண்ட திருப்பதிகம் அருளப்பெற்ற காலம் இடம் எவையாக இருப் பினும், மனிதவாழ்வைப் பற்றிய ஆய்வின் வெளிப்போந்த ஒவ்வாமைக் கொள்கைகளும், அருமை முழுமை இணைந்த அணைவுறு வாழ்வின் மூலம், யாழ் எனவும், அருள் பயக்கும் தஞ்சொல் வெளிப்படுத்தும் நிலையம் எனவும் இக்கூரையை அமைத்துக் கொண்டால் முழுமை நலம் பெற்ற நல்வாழ்வை இசைவால் இணைத்து நிறுத்த முடியும் என்ற அருளுரையும் நம்பியாரூரர் இப்பதிகத்தின் மூலம் அருளியதாகக் கொள்ளலாம்.

மேலே கூறப்பெற்ற முழுமை வாழ்வை, எழுவகை வாழ்வியற்படிகளாக்கி அமைக்கும் வகையில் ஐம்பூதக் கூட்டமைப்பாகிய 'உடல்' அமைத்துக் கொடுக்கப் பெறுகிறது.

"சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்ற ஐந்தின்
வகை தெரிவான் கட்டே உலகு"

என்றும்,

"நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறை மொழி காட்டி விடும்"

என்றும் வரும் நீத்தார் பெருமைத் திருக்குறள்களை இணைத்துப் பொருள் காண்பதும் கடமை.

ஐம்பூத இணைப்பு எனப் பெறும் இவ்வுலகமும் இவ் வுடலும் உயிர்களுக்குரிய வாழ்வியல் இடமும் குடிசையும் ஆகின்றன.

"நல்லதோர் கூரை புக்கு நலம்மிக அறிந்தேனல்லேன்"

என்ற குறைநிலை வாழ்வைப் பிறவி என்று கொண்டு, நல்லதோர் கூரை புக்கு நலம் மிக அறிந்தேன்" என்பதாக அமைப்பதே வாழ்வு எனக் கொள்ளல் வேண்டும்.

"மண் முதலாக வான் இறுதியாக நின்ற ஐந்தன் கூட்டினை ஒரு பரம் பொருளால் அணைவித்தல் வேண்டும். அப்போது அது கூடிநின்ற ஐந்தையும் முழுமையுறுத்துகின்றது. தெய்வமணம் கமழும் நிலை முதல் நிறைமொழி அருளும் நிலைவரையில் இணைந்த முழுமை வாழ்வு அமைகிறது. அப்போது இவ்வுடம்பே நல்லதோர் கூரையாகி நலம் மிக அறியும் நிலை அமைகிறது. அத்தகைய வாழ்வின் புறத்தோற்றமாக ஆரூரில் அமைந்ததே **பரவை உண் மண்தளி**.

அறுபது, பத்து, எட்டு, ஆறு, அஞ்சு, நான்கு என்ற ஆறு நிலைகளில், இவ்வுடம்பை நல்லதோர் கூரையாக அமைக்க முயலுகின்றார்கள். உடம்பை யந்திரம் என்ற கோடிட்ட வாழ்வாக அமைத்து, அங்கே எழுத்துக்களை அடைத்து, ஒலியை எழுப்பி, அவைகளை மறைமொழிகளாக அமைத்து, பன்னாள் முயன்று, இவ்வுடம்பில் நிறை வாழ்வையும் நிறைமொழியையும் காண முயல்கிறார்கள். ஆனால், உலகும் உடலும் இணைந்து அணைதல் வேண்டும் என்ற அடிப்படை வகையை உணராத காரணத்தால், அவைகள் இணைந்து வாழாமல் இறந்து படலாகின்றன.

சுவை முதலிய ஐந்தனை இணைத்து அணைக்கும் வகைமையை அறிதல் வேண்டும். அவைகளை அறிந்து இணைத்தவர்களே இவ்வுடல், இவ்வுலகு என்ற எல்லையை நீத்து — கடந்து — நீத்தாராக வாழ்தல் இயலும். அப்போதுதான் நிறை மொழி வெளிப்படும். அங்கேதான் **அந்தண்மை** வெளிப்படும். இம்மை என நின்ற இவ்வுடலுக்கும் மறுமை என நின்ற உலகுக்கும் இசைவான, அணைவான ஒன்றைக் கொடுத்து வாழ்தல் என்ற கலையை அறியாத வகையில் முழுமை வாழ்வு அமைதல் இல்லை. பிண்டம் அண்டம் என; உடம்பு உலகு என; ஐந்தன் கூட்டாய அகநிலை உடம்பையும், அதே ஐந்தன் கூட்டாய புறநிலை உலகையும்; ஐந்தெழுத்தின் திருக்கூத்தாய ஞான நடனத்தையும்; ஐந்தெழுத்தின் நிலையில் அமைந்த ஊன நடனத்தையும்; இம்மை மறுமை என; இருமை என அமைத்துக் கண்டு, இருமையை நீத்த, இருமையைக் கடந்த ஒருமை நிலை வாழ்வை மேற்கொண்டால்,

இருவர் தேட அருமையாய் நின்ற ஒருமை நிலையை, இருமையை இணைத்துக் கடந்த அணைவினை அளிக்கும் ஆரூர் 'முத்தினை' அமைத்துக் கண்ட வாழ்வே அந்தண்மை வாழ்வு. அதைப் பெற்றபோது "தம் சொலால் அருள் பயக்கும்" தண்மை நிறை மொழி வெளிப்படும் என இருமை வாழ்வை எடுத்து விளக்கி, அணைவுறும் ஒருமை வாழ்வை அமைத்துக் காட்டி, அதனை "முத்து" என்பதாற் பெற முடியும் என இணைத்து, அந்தண்மை சார்ந்த அருளியல் முழுமை வாழ்வைப் பெற ஆரூர் முத்தினை நாளும் நன்னீரும் கொண்டு போற்றிப் பரவ வேண்டும் என்ற பொருளமையும் வகையில் "இறைகளோடிசைந்த இன்பம்" எனத் தொடங்கும் பதிகம் வாழ்வியலின் உயர் விளக்கம் தருவதாக அமைந்ததைத் திருவருளுணர்வுடன் இணைந்து நின்று காணுதல் வேண்டும்.

"இறைகளோடிசைந்த இன்பம்" என்று தொடங்கும் திருப்பதிகத்தையும், திருஞானசம்பந்தப் பெருமான் தமது முற்பிறவி நிலையைத் தெளிவாக எடுத்துக்கூறி, திருவடிப் பேறு எய்துதற்குரிய தகுதிகளைப் பெற்றுவிட்ட பின்னருங் கூட, மேலும் ஒரு பிறவியில் தன்னை ஈடுபடுத்தியது ஏன் எனக் கேட்கும் வகையில்,

"துறக்குமா சொலப்படாய் துருத்தியாய் நின்னடி
மறக்குமா றிலாதஎன்னை மையல் செய்து மண்ணின்மேல்
பிறக்குமாறு காட்டினாய் பிணிப்படும் உடம்புவிட்டு
இறக்குமாறு காட்டினாய்க்கு இழுக்குகின்றது என்னையே"

என அமைந்த திருப்பாட்டையும் இணைத்துக்காண முற்படின் ஓர் உண்மை விளங்கும்.

அடியார் நடுவுள் இருக்கும் அருளனுபவம் தேவை என்பது திருக்கயிலை ஆலால சுந்தரனார்க்கு அமைந்த வேட்கை எனின், அதனாற் பெறலாகும் பேற்றுக்குரிய, இம்மை வாழ்வுக்குரிய இல்லற, துறவற நெறிகளில், துறவுக் கொள்கை இறைவனுக்கு உடன்பாடன்று என்பதைத் திருஞானசம்பந்தரே அமைத்துவிட்டமையின், இல்லறமே உடன்பாடு எனக் கொண்டாலும், இல்லறமும் எவ்வாறு அமையவேண்டும் என்பதை அமைத்துக் காணவேண்டிய தாயிற்று.

திருஞானசம்பந்தப் பெருமான் திருவேள்விக்குடியும் திருத்துருத்தியும் எனநின்ற இரண்டு திருப்பதிகளையும் இணைத்த நிலையில் ஒரு திருப்பதிகம் அருளுகின்றார். அவ்வாறே நம்பியாரூரரும் திருத்துருத்தியும் திருவேள்விக் குடியும் என்ற இரண்டையும் சேர்த்த நிலையில் அமையும் திருப்பதிகமாக "மின்னுமா மேகங்கள்" எனத் தொடங்கும் திருப்பாட்டை உடைய பதிகம் ஒன்றை அருளியுள்ளார். இங்கே எழுந்தருளியுள்ள பெருமான் **"சொன்னவாறறி வார்"** எனப் பெறுகின்றார். இதன் பொருள் இன்னது என நுனித்துணர்ந்து நுவலுதல் வேண்டும். வேதம், ஆகமம் போன்ற நூல்கள் இறைவன் நூல் எனப்பெறும். இவைகளில் சொன்னவாறு அறியப் பெறுபவர் என்பதைப் பொருளாகக் கொள்ளல் ஒருவகை. அவ்வகையில், பாடு மாறு அறிகிலேன், சொல்லுமாறு அறிகிலேன், அறியுமாறு அறிகிலேன், பிதற்றுமாறு ஒழிந்திலேன், இகழுமாறு அறி கிலேன், உரையுமாறு அறிகிலேன், ஆருமாறு அறிகிலேன், விலங்குமாறு அறிகிலேன் என்றெல்லாம் நம்பியாரூரர் அப்பதிகத்தில் எடுத்துக்காட்டி இறுதியாக ஓருண்மையைக் கொள்ள வைக்கிறார்.

திருஞானசம்பந்தரின் திருவாக்கின் வண்ணம் "நின்னடி மறக்கு மாறிலாத என்னை" வாழ்வின் முடிந்த குறிக்கோள் எனக் கொள்ளலாம். **சிவனடி மறவாப் பேறு** என்பதே அது என அக்குறிக்கோளைச் சற்று விளக்கமாகக் கொள் ளலாம். திருவடியையே நினைதல் எனப் பெறும் திருப் பெருகு சிவஞானம் என்பது குறிக்கோளின் ஒருபகுதி யெனக் கொள்ள வேண்டியுள்ளது. அதில் எஞ்சியுள்ள பகுதியை நம்பியாரூரர் திருவாக்கில் காண முடிகிறது

**என்னை நான் மறக்கும் ஆறு**

என்ற ஒன்றும் தேவை என்கிறார். திருத்துருத்தித் திரு வேள்விக்குக்குடிப் பதிகத்தின் முதற்பாட்டில்,

சொன்னவாறு அறிவார் துருத்தியார் வேள்விக்
குடியுளார் அடிகளைச் செடியனேன் நாயேன்
**என்னை நான் மறக்குமாறு எம்பெருமானை
என்னுடம்பு அடும்பிணி இடர் கெடுத்தானை"**

(7—74—1)

என அருளியிருப்பதை எண்ணும்போது, என்னை நான் முற்றாக மறத்தலும் வேண்டும் என்பதை அக்குறிக் கோளின் மற்றைப் பாதியாகக் கொண்டால் திருவடியை மறவாமையுடன் தன்னையே மறத்தலும் வேண்டும் என்பதே வாழ்வியல் குறிக்கோள் என்பதாக அமைகிறது. அவ்வகையில் தன்னை முற்றாக மறந்து, இறைவனையே முற்றாக நினைத்தல் என்பதையே குறிக்கோள் எனக் கொண்டால், அதுவே "பித்து என நிற்கும் நிலை". எனவே, பித்தாக நின்ற நிலை என்பதையே இவ்விருவர் திருவாக்குக்களுக்கும் இணைய நின்ற பொருள் எனக் கொண்டால், **'பித்தா'** என்று நம்பியாரூரர் முதலிற் கூறியது வெறும் உலகியல் வழக்கு நிலையில். இங்கே தான் திருத்துருத்திப் பெருமான் நம்பியாரூரர் சொன்ன வாறு அறியப் பெறுகிறார். திருத்துருத்திப் பெருமானைப் 'பித்தன்' என்றே அறிகின்றார் எனக்கொள்ள வேண் டும். சொன்னவாறு அறிவார் என்பதற்கு, வேதங்கள், ஆகமங்கள் என அமைந்த நூல்களில் அவன் சொன்னவாறு இத்தலத்தில் அறியப் பெறுகிறான் என்பது ஒருவகைப் பொதுமைப் பொருள் நிலை. அதனுடன், 'பித்தா' என நம்பியாரூரர் முன்னே சொன்னார். அவர் சொன்னவாறு, நம்பியாரூரரே இங்கு இறைவனைப் 'பித்தன்' என அறிகிறார் எனக் கொள்வது அவ்வவர் தம் அனுபவநிலையை உட்கொண்ட சிறப்பு நிலை. அவ்வகையில்,

**தன்னுயிர் தான் அறப்பெறுதல்**

எனத் திருக்குறள் அமைத்துக் காட்டிய நெறியின் பொருள் இங்கே விளக்கமுறுகிறது. அவ்வகையில் தன்னை முற்றாக மறத்தலும், சிவனடியை முற்றாக நினைத்தலும் என்ற இருமையை உடன்கொண்ட கொள்கையே வாழ் வியற் குறிக்கோள் கொள்கை என்பதாக அமைகிறது. இக்கொள்கையை வாகீசப் பெருந்தகை,

**பெயர்த்தும் அவனுக்கே பித்து ஆதல்**

என மிகவும் நுட்பமாக அமைத்துக் காட்டுகின்றார். நாமம் கேட்டல், வண்ணம் கேட்டல், அவன் வாழ்விடமாகிய ஆரூர் கேட்டல் என்ற மூன்றால் மனம், புத்தி, அகங்காரம் என்ற மூன்றும் முற்றாக அழிந்துபோக, எஞ்சி நின்ற சித்தம் அழியாமல், தன்நிலை கெட்டு உருகி ஓட ஆரம்பிக்

கிறது. சித்தம் தன் கடிமைத் தன்மை இழந்து நீராகப் பெருகி ஓடும் நிலை அமையும். இந்நிலையினரைச் **"சித்தம் அழகியார்"** என்பர். இந்நிலை மேன்மேற் பெருகும்போது, மீண்டும் **பித்து ஆதல்** என்ற நிலை அமையும்.

''முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்
மூர்த்தி அவனிருக்கும் வண்ணம் கேட்டாள்
பின்னை அவனுடைய ஆரூர் கேட்டாள்
பெயர்த்தும் அவனுக்கே பிச்சி ஆனாள்
அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள்
அகன்றாள் அகலிடத்தார் ஆசாரத்தைத்
தன்னை மறந்தாள் தன்னாமம் கெட்டாள்
தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே'' (6—25—7)

என்ற திருத்தாண்டகத்துள் 'தன்னை மறத்தல்' என்பதற்கு உரிய விளக்கமாக என்னென்ன நிலைகள் இணையும் என்பதைத் தெளிவாக அமைத்துக் காட்டுகின்றார். அன்னையையும் அத்தனையும் நீத்தல், அகலிடத்தார் ஆசாரத்தை நீத்தல், தன்னை மறத்தல், தன் நாமம் கெடல், தலைவன் தாள் தலைப்படல் என்ற ஐந்து வகைகளை இணைத்துக் காட்டுகின்றார்.

**'தன் உயிர்தான் அறப் பெறல்'** என்ற திருவள்ளுவரின் வாக்கினை உளங்கொண்ட நிலையில், ஐவகைப் பிணிகள் நீங்குதல் வேண்டும் எனக் கொள்ள வேண்டியுள்ளது. இவை ஐந்தும் உடற்பிணியா உயிர்ப்பிணியா என வினவில் 'ஊனுயிர் வேறு செய்தல்' என்ற பயனாகக்கொள்வதாயின் ஊனையோ உடலையோ தனி நிலையில் சார்ந்த பிணியாகக் கொள்ளாமல் இரண்டையும் இணைத்த நிலையில் மட்டுமே விளங்கக்கூடிய உயிர்ப்பிணியாகவே அமைதல் வேண்டும் என்று கொள்ள இடம் தருகிறது. அத்தகைய பிணி நீங்கிய நிலையில் உயிரும் உடலும் இணைந்து நிற்றலை, அவ்விணைப்பால் அமையும் வாழ்வை — வேழமேற்கொள்ளல் — என்ற வாழ்வாக அமைத்துக் காண வேண்டும் என்று குறிக்கும் நம்பியாரூரர் தம் திருவாக்கால் அறியப்பெற முடிகிறது.

''வாழ்வை உகந்த நெஞ்சே மடவார் தங்கள் வல்வினைப் பட்டு
ஆழ முகந்த என்னை **அதுமாற்றி** அமரரெல்லாம்

சூழ அருள் புரிந்து தொண்டனேன் பரம் அல்லதொரு
வேழம் அருள் புரிந்தான் நொடித்தான் மலை உத்தமனே''
(7—100—4)

என்ற திருப்பாட்டினை உன்னும்போது **தடுத்து ஆட்கொள்ளல்** என்பதன் விளக்கம் இதுவென நாம் தெளிவாக உணர முடிகிறது. அது மடவார் வாழ்வை விலக்கியதன்று. அவரோடு இணைந்து வாழ்தல் தேவை என்பதைக் கொண்டு, ஆனால், அதில் ஆழமுகந்து அழுந்தாது, இல்லறத்தோடு இணைந்த அருள்நெறியாக ஒன்றை அமைத்து வாழ்தல் வேண்டும். அந்நிலையில் இறைவனுக்குத் 'தொண்டு' என்னும் நிலையும் அமைந்திருக்கும். தொண்டு நெறியில் சிறந்து நின்ற எல்லையில் 'வேழமளித்தல்' என நின்ற அருளாற்றலை அளித்தல் என்ற நிகழ்வமையும். அதுவே, இல்லறத்தில் நின்று, அன்பைப் பெருக்கி, தொண்டுபேணி, அருள் என்ற நிலை—யானை—அருளப் பெற்று, அருள் வாழ்வில் தன் உயிர் தான் அறப்பெற்று வாழும் தொண்டு நிலையே நம்பியாரூரர் அமைத்துக் கண்ட வாழ்வியல் நிலை எனக் கொள்ளவேண்டும்.

பரவையாருடன் நம்பியாரூரருக்கு அமைய இருக்கும் திருமண நிகழ்வுக்கு முன் சில கருத்துக்களை முன்னிறுத்திக் கொள்ளுதல் வேண்டும். இறைவன் திருவடி மறவாமையுடன் தன்னை மறத்தலும் வேண்டும் என்பது உணர்த்தப் பெற்றது.

முன்னே எடுத்துக் காட்டப் பெற்ற திருவாசகப் பாடலின் வண்ணம், உடையாள் உன்தன் நடுவிருக்கும், உடையாள் நடுவுள் நீ இருத்தி என்று குறிக்கப் பெற்ற இரண்டு நிலைகளிலும் தனிமனிதனின் தொடர்பு இல்லை என்பதாகப் பொருள் கொள்ளுதல் கூடாது. இனி, மூன்றாவதாகிய

''அடியேன் நடுவுள் இருவீரும் இருப்பது''

என்பதும், நான்காவதாகிய

''அடியேன் உன் அடியார் நடுவுள் இருப்பது''

என்பதும் நம்பியாரூரர் தம் வாழ்வின் மூலம் விளக்கிக் காட்டப்பெறுகின்றன. இனி, 'அடியேன் நடுவுள் இருவீரும் இருப்பது' என்ற கொள்கை விளக்கப்பெறும் காலத்தே

தான் பல்வேறு தத்துவக் கொள்கைகள் தோற்றம் பெற லாயின. மூன்றாவதாகவும் நான்காவதாகவும் அமைந்த இரு கொள்கைகளும் நம்பியாரூரர் மூலமாகவே விளக்கப் பெறுகின்றன எனக் கொள்ளல் வேண்டும்.

மூன்றாவதாக நின்ற கொள்கை எனப்பெறும் "அடியேன் நடுவுள் இருவீரும் இருப்பது" என்பதன் விளக்கமாக அமைவதே **'தம்பிரான் தோழர்'** என்ற கொள்கை. இக்கொள்கையின் விளக்கமாக அமைவதே நம்பியாரூரர் வாழ்வு. இத்தகைய ஓர் அடிப்படையை அமைத்துக் கொள்ளாமை என்ற காரணத்தாலேயே அவர் தம் வரலாற்றமைப்பில் பல்வேறு ஐயங்கள் தோற்றம் பெற்றன.

'அடியேன் நடுவுள் இருவீரும் இருப்பது' என்பதை ஒருவகையில் சீவன்முத்தர் என அமையும் கொள்கை விளக்கமாக அமைத்துக் காணுதல் வேண்டும். இறை நிலையும் ஆன்மநிலையும் என்ற இரண்டும் இணைந்து நிற்றல் என்பதாக அமைத்துக் காணவேண்டும்.

தம்பிரான் தோழர் என்பதும், சுந்தரக் கோலம் என்ற வடிவமைப்பும் அத்தகைய இருமை இணைந்த ஒருமைக் கொள்கையை வலியுறுத்த எழுந்தனவாகக் கொள்ள வேண்டும்.

'படிமக்கலம் அமைத்தல்' என்பதுபற்றி முன்னமேயே விளக்கப்பெற்றது. அப்பரடிகளின் திருத்தாண்டகம் கொண்டும் இந்நிலையை உணரலாம்.

"உயிரா வணமிருந்து உற்று நோக்கி
உள்ளக் கிழியின் உருவெழுதி
உயிரா வணம் செய்திட்டு உன்கைத் தந்தால்
உணரப் படுவாரோடு ஒட்டி வாழ்தி
அயிரா வணம் ஏறாது ஆனேறு ஏறி
அமரர் நாடு ஆளாதே ஆரூர் ஆண்ட
அயிரா வணமே என்னம்மானே நின்
அருட் கண்ணால் நோக்காதார் அல்லாதாரே" (6—25—1)

என்ற திருத்தாண்டகத்தில், 'ஒன்றியிருந்து நினையும் நினைவு நிலையில் யான் என்னும் முனைப்பு நீங்கி, அருள் வழியில் நிற்கப் பழகி, பின்னர் உணர்வு

நிலையில் அவ்வாறே நிற்கப் பெற்றால், தன்னால் சிறப்பு வகையில் உணரப்படுவாராகிய அவரோடு உடனாய் விளங்கி நிற்பர் இறைவன்' என்ற கருத்தை எடுத்துக் கூறுகின்றார். இங்கே 'உணரப்படுவாரோடு ஒட்டி வாழ்தல்' என்பது பரம்பொருள் ஆன்மா என்ற இரண்டிற்கும் பொதுவில் அமைவதாயிற்று. இது 'உயிர் ஆவணம்' செய்தல் எனவும் கூறப்பெறும்.

புறத்தே காணப்பெறும் இறை திருமேனியை, உயிர்ப்பும் எழாதவாறு உற்று நோக்கிக் கண்டிருந்து, அவ்வாறே உள்ளமாம் படத்தில் உருவத்தை அமைத்து, பின்னர் உயிரை ஆவணம் செய்து, இறை பரம்பொருளிடம் அடைக்கலம் செய்து கொடுத்து விடுதல். அந்நிலையில், அவ்வாறு உற்று நோக்கியும் எழுதியும் ஆவணம் செய்தும் உணரப்பெறும் நிலையில் உள்ளவனோடு ஒட்டிவாழ்வான் இறைவன் என்பது போலவே, அவ்வாறு மனத்திரையில் எழுதப்பெற்ற இறைவனோடு ஒட்டி வாழ்தல் என்பது உள்ளக்கிழியில் உருவம் எழுதியவனுக்கும் பொருந்தும். இதையே ஆரூரில் 'படிமக்கலம் அமைத்தல்' என்பதாக அப்பரடிகள் எடுத்துக் காட்டுகின்றார்.

மேலும், அப்பரடிகள் "பொய்ம் மாயப் பெருங்கடலுள்" என்ற தொடக்கத்தை உடைய திருவாரூர்த் திருத்தாண்டகப் பதிகத்தில்,

> "வானோர், பொன்னுருவைத் தென்னாரூர் மன்னு குன்றைப்
> புவிக்கெழிலாம் சிவக் கொழுந்தைப் **புகுந் தென் சிந்தை**
> **தன் னுருவைத் தந்தவனை** எந்தை தன்னைத்
> தலைப்படுவேன்" (6—27—4)

என்று குறிப்பிடும் வரிகளில், இறைவன் சிந்தையில் புகுந்து, தன்னுருவை என் சிந்தைக்குத் தந்தான் என்ற பொருளமைத்திருப்பதை எண்ணுதல் வேண்டும். சிந்தையானது அவனுருவாகவே அமைய, அவனுடன் ஒட்டிவாழும் நிலை அமைவதே படிமக்கலம் மூலம் ஆவணம் செய்யும் முறை எனவும் கருதுதல் வேண்டும்.

மேலே குறிப்பிடப்பெற்ற அமைப்பு முறையில் தம்பிரான் தோழர் எனநின்ற நம்பியாரூரர் இறைவனும் தாமுமாக இணைந்து நிற்கும் (யோகம், இணைதல்) முறையை அனுபவ முறையில் அமைத்துக் கொள்பவராகிறார்.

இறைவனும் தாமும் இணைய நின்று வாழும் முறையே **'தம்பிரான் தோழர்'** என்ற முறையாக அமைகிறது. அவர் அவ்வாறு அகநிலையில் வாழ்கிறார் என்பதை உலகத்தவர் அறியும் வகையில் அவருடைய புறக்கோலமும் அமைகிறது. நம்பியாரூரரைப் பார்த்தவுடன் இறைவன் தோழர் என்ற நினைவு அமையும் கொள்கை அடிப்படையிலேயே அவர்தம் புறக்கோலம் அமைகிறது. இது உயிராவணம் இருந்து உற்றுநோக்கி உள்ளக்கிழியின் உருவெழுதி உயிரை ஆவணம் செய்தமைத்த நிலையில் விளைந்த பேறு எனக் கொள்ள வேண்டும்.

எனவே, **'அடியேன் நடுவுள் இருவீரும் இருப்பது'** என்ற கொள்கையானது மூன்று நிலைகளில் நம்பியாரூரரிடம் வாழ்வியற்படுத்தப் பெறுகிறது.

1. **தம்பிரான் தோழர்** என அமைந்த பெயரமைப்பு, உறவு, மக்களின் உள்ளத்தை குடிகொண்ட கருத்தமைவு நிலை

2. **கோலம்** சுந்தரராய் நின்ற பெருமானை, இறைவனை நினைவுறுத்தும் கோலம்.

3. உள்ளத்திலும் இறைவனை உணரப்படுவானாக நிறுத்தி, அவனுடன் ஒட்டி வாழும் நிலை.

இங்கே குறிக்கப்பெற்ற மூன்றிலும் இருமை உண்டு. தம்பிரான் தோழர் என்ற பெயராலும், புறநிலைக் கோலத்தாலும், அகநிலைக் கருத்தமைவாலும், இறைவனும் நம்பியாரூரரும் 'ஆரூரர்' என்றே அமைகின்றனர். ஆரூரர் என்பது இருவருக்கும் பெயர். ஒன்று உண்மை; மற்றது அதை அப்படியே ஒத்த பிரதி. இரண்டும் உண்மையே. இரண்டும் ஒன்றி உடனாக வாழும் நிலை. உண்மையை ஒட்டி நிற்றல் என்பதும் அதன் விளக்கமாக அமைகிறது. உயிரை ஆவணம் செய்து, படிமக்கலம் என அமைத்து, அடைக்கலமாக்கிய அகநிலை உணர்வானது புறநிலையில் வெண்ணெய் நல்லூரில், அவையினர் முன்னே ஆவணம் காட்டி நின்ற கிழவேதியன் செயலோடு இணைத்துக் காணப் பெறும் நிலை நம்பியாரூரருக்கு அமைகிறது. அந்நிலையில் அமைந்த அகநிலைக் காட்சியானது அருட்கண் விழிப்புக் காட்சியாகிறது.

"அயிராவணம் என்ற ஆயிரம் கொம்புகளை உடைய வெள்ளையானையின் மேல் ஏறாமல், ஆன் ஏறு எனப் பெறும் அறக்கடவுளாம் காளையின் மேல் ஏறி, அமரர் நாடு எனப் பெறும் தேவர் உலக ஆட்சியை ஏற்றுக் கொள்ளாமல், ஆரூர் ஆட்சியை விரும்பி ஏற்று வந்து, அயர்ப்பு இல்லா, சோர்வு இல்லா, மீண்டும் மீண்டும் ஆண்டு கொண்டு நெறிப்படுத்துவதையே பொருளாகக் கொண்டு, அயர்வு இலாது உழைக்கும் **அயிராவணமே,** என் அம்மானே, நின் அருட்கண்ணால் நோக்காதார் அல்லாதாரே" என்ற அப்பரடிகளின் அனுபவத்தோ டொத்த அருட்கண் விழித்த நோக்கில் பெற்ற அருளனு பவத்தால், எதிரில் நின்ற கிழவேதியன், ஆரூருக்கு வந் தமர்ந்த தியாகேசப் பெருமானே – நடமாடிய பெருமானே என்ற அனுபவநிலையில்

**பழைய மன்றாடி போலும்**

எனக் கூறுவதாம் நிலை நம்பியாரூரரிடத்தில் அமைகிறது. தன்முன் வந்து நின்ற கிழவேதிய வடிவின் அருட் கண்ணால் விழித்துக் காணப் பெற்றார் ஆதலின், நம்பியா ரூரர் அருட்டுறை புகும் பேறு பெறுகிறார். ஆவணம் பற்றிய எந்த ஒரு சிக்கலையும் எழுப்பும் நிலை அமையப் பெறா தவர் ஆனார். தன்னால் கிழித்துப் போடப் பெற்ற ஓலை என்பது திருவருளின் மறைப்பாற்றல் எனப் பெறும் திரோ தான நிலையை; பிறகு, நம்பியாரூரருக்குக் காட்சிப்படுவன எல்லாம் பழைமை நிலைதான். ஒன்றொடு ஒவ்வா வகை யில், ஏதோ இசைவால் அமைந்த, உலகில் இல்லாத புதிய வழக்கு எனவும் அதைப் பேசிய பித்தன் எனவும் அமைந்த மாயை நிலை முற்றாகக் கிழிக்கப் பெற்ற நிலை யில், தன்முன் நிற்பவன்

"பழைய மன்றாடியே"

எனவும், 'பித்தனோ' எனக் கேட்ட நிலையானது அமரர் நாடாளாது ஆரூர் ஆட்சியை மேற்கொண்டு வந்து என்னைப் பன்முறையும் மறித்தும் மறித்தும் அயரா வண ணம் என்று கூறப் பெறும் **'அயரா அன்பு'** என்ற நிலையே யன்றி வேறொன்றுமன்று. இறைவன் உயிர்கள் மாட்டுக் கொண்ட 'பித்து' என்ற நிலையே இவ்வாறு செயல் புரியச் செய்தது என்பதை விளக்கும் வகையில் 'பித்தன்' என்ற அருளனுபவ நிலையாக அமைகிறது. நெறியல்லா வழக்கு

என்ற வகையில் அனுபவம் பெற்ற மாயை என்ற நிலை கிழிக்கப் பெற, அருளனுபவப் பித்து அனுபவம் பெறு கிறது. அந்நிலையில் **'அற்புதப் பழ ஆவணம் காட்டி அடியனை ஆளது கொண்ட நற்பதத்தை'** என்ற அரு ளனுபவப் பேரறிவு தோற்றப் பெறுகிறது.

'மனத்தினால் உணர்தற்கெட்டா மாயை' என்று திரு வெண்ணெய் நல்லூர் அவையின் முன் தம்முடைய கட்சி யைச் செம்மையாக எடுத்துக் கூறிய வல்லாளர் நம்பியாரூரர் திருவருள் நோக்கம் பெற்றபின், வெளியிடப் பெற்ற ஓர் நுட்பமான கருத்தமுதைத் தெளிவுற விளங்கிக் கொள்ள வேண்டும்.

சொற்கள் மாறவில்லை. ஆவணம், பித்து, மன்றில் வழக்காடல் என்ற சொற்கள் மாறவில்லை; ஆவணம் செய்தமைத்தது யார் என்ற வினாவுக்குரிய சொல்லோ, 'ஆரூரர்' என்ற பெயரோ மாறவில்லை. ஆனால் 'பொருள்' முற்றாக மாறுபடுகிறது. அதற்காக, நம்பியாரூரர் இது பொய், அது உண்மை என்று அமைக்கவில்லை. அதற்குப் பதிலாகப் 'பழைய' என்ற சொல்லைச் சேர்க்கிறார். இவ் வுலகில் நாம் காண்பதும் கேட்பதும் செயற்படுவதும் ஆகிய நிலைகளில் ஒருவகை 'இருள்' இருக்கிறது. சொற்கள், நினைவுகள், விளக்கவியலாத வரலாறுகள் ஆகிய அனைத் தும் பொய்மைகளல்ல; உண்மைகளே. அவைகளை உண்மை என்று தெரிந்து கொள்ளாத வகையில் ஒருவகை 'இருள்' இருக்கிறது. அது அவன் அருட் கண்ணால் அழிக்கப் பெறுகிறது. உண்மை என்பதே இருளுடன் காணப் பெற்றது முன்னைய நிலை, அல்லது உலகியல் அனுபவநிலை. அதே உண்மை இருளற்ற நிலையில் காணப் பெறுகிறது. எனவே உண்மை நிலை என்ற முதன்மை நிலையைப் **பிம்பம்** எனக் கொண்டால், அதனை இருளுடன் காணும் நிலை **பிரதிபிம்பம்** எனப் பெறுகிறது. அதனாலேயே நம்பியாரூரர் வாழ்வைப் **பிம்பப் பிரதிபிம்ப** வாழ்வு என்று குறித்தார்கள். ஆனால், அவை ஒன்றோடு ஒன்று முற்றாக மாறுபட்ட நிலை அன்று; உண்மை என் பதன் மேல் நின்ற 'இருள்' அல்லது 'அறியாமை' கிழிக்கப் பெறுகிறது அவ்வளவே. உண்மை என நின்ற ஒன்றை உண்மை எனக் காணாமல், இருளுடன் அமைத்துக்

கண்ட காரணத்தால் உண்டாகிய ஒருவகை அறியாமைக் காட்சி, இருட்காட்சி, மாயைக் காட்சி அறுக்கப் பெற்று உண்மைக் காட்சி அமையக் காணும் திருவருட் காட்சி அமைகிறது. எனவே, **பிம்பப் பிரதி பிம்பத்தில்** அனைத்தும் உண்மைகளே. முன்பின் என்ற இருநிலைகளும் ஒரே நிலையான உண்மைகளே. இடையில் நின்ற அறியாமை —இருள் ஒன்றே வேறுபாட்டை விளைவிக்கிறது. இருள் முற்றாக அழிக்கப் பெறுகிறது. இருள் அற்றபின் பொருள்களின் நிகழ்வுகள் மாறவில்லை; அவைகளின் உண்மை நிலைகள் உண்மை நிலைகளிலேயே அறியப் பெறுகின்றன. அத்தகைய விளக்கத்தை நமக்கு அமைக்கும் நம்பியாரூரரின் திருவருள் வாக்கினைக் காணுதல் வேண்டும்.

> ''கற்பகத்தினைக் கனகமால் வரையைக்
> காம கோபனைக் கண்ணுத லானைச்
> **சொற்பதப் பொருள் இருள் அறுத்தருளும்**
> **தூய சோதியை** வெண்ணெய் நல்லூரில்
> அற்புதப் பழ ஆவணம் காட்டி
> அடியனா என்னை ஆளது கொண்ட
> நற்பதத்தை நள்ளாறனை அமுதை
> நாயினேன் மறந்து என் நினைக் கேனே''

என்ற **(7-68-6)** என்ற திருப்பாட்டினுள் அமைந்த 'சொற்பதப் பொருள் **இருள்** அறுத்தருளும் தூய சோதியை' என்பதனாற் குறிப்பிட்டுக் காட்டியுள்ளார். இதனைத் திரோதானம் என நின்று மறைத்தல் தொழிலைச் செய்தது எதுவோ அதுவே திருவருளாக மாறி நிற்கிறது என்று விளக்கம் காட்டியமைப்பது சைவசித்தாந்தம், இதனை வெறும் சொற்பொருள் என்பதன் இடை அமைந்த 'இருள்' என்பதாக மட்டும் கூறினார் என்று கொள்ளலாகாது. மேலும், அதனை விளக்கும் வகையில், தோழமை தந்து, யான் செய்யும் துரிசுகளுக்கு உடனாகி நின்று, பின் அதனைத் தீர்த்து அருள் செய்தானை என்றும் குறிப்பிட்டுக் காட்டுகின்றார். மேலே குறிப்பிட்ட அதே திரு **நள்ளாற்றுப்** பதிகத்தில்,

> ''மாதினுக்கு உடம்பு இடங் கொடுத்தானை
> மணியினைப் பணிவார் வினை கெடுக்கும்
> வேதனை வேத வேள்வியர் வணங்கும்
> விமலனை **அடியேற்கு** எளிவந்த

**தூதனைத் தன்னைத் தோழமை அருளித்**
**தொண்டனேன் செய்த துரிசுகள் பொறுக்கும்**
**நாதனை நள்ளாறனை அமுதை**
**நாயினேன் மறந்துஎன் நினைக்கேனே''**

என்று (7.68.8) அருளியதையும் இணைத்து நோக்கி, திருவருள் உணர்வில் நின்று தெளிதல் வேண்டும். இருள் நிலை அருள் நிலையாக மாற்றம் பெறுகிறது. சொல்லாற் பொருளுணரும் முறையில் இருளாற்பொருளுணரும் முறை வேறு; அருளாற்பொருளுணரும் முறைவேறு. இருளை அழித்தல் எனக் கொள்வது ஒருவகை. இருள் அருளாக மாற்றம் பெறுகிறது என்பது மற்றொருவகை. சிவபரம் பொருளின் சத்தி ஒன்று, மறைப்புச் சக்தியாகத் தொழிற் படும். அதுவே அருட்சக்தியாக மாறுகிறது என்பது சைவ சித்தாந்தம். மறைப்புடன் கூடிய நிலையில் உண்மை யானது பார்க்கப் பெறுகிறது என்பதே **பிம்பப் பிரதிபிம்பம்.**

திருக்கயிலையில் ஆடியில் தோற்றம் பெற்றார் சுந்தரர் எனக் கொண்டு இறைவனும் ஆன்மாவும் **பிம்பப் பிரதிபிம்பம்** எனக் கூறும் கொள்கையை ஏற்றுச் சிந்திப் பதில் குறையில்லை. அதற்காகத் திருக்கயிலை நிகழ்ச்சிகள் அனைத்தும் தேவையற்றவை என்றோ, கற்பனைக்கதை என்றோ கொள்ளவேண்டியதில்லை. திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் ஆகியோர் வரலாறுகளை விட, நம்பியாரூரர் வரலாறு மட்டுமே முற்பிறவி அல்லது திருக்கயிலை வரலாற்றுடன் இணைத்துக் காட்டப் பெறுகிறது. முழுமை என நின்ற நம்பியாரூரர் வரலாற்று நிகழ்வுகளில் எந்த ஒரு பகுதியையும் கற்பனை என்று மறுத்துவிட்டால், ஏனைய பகுதியை உண்மை என்று நிலைநாட்டி விடுதல் இயலாது. அதனாலேயே கற்பனைகள் எனச் சிலவற்றை ஒதுக்கி, ஒதுக்கி எஞ்சியுள்ளவைகளை வரையறை செய் தமைத்துக் கொண்டு போனாலும் மீளவும் நமக்கு வரலாற்றுச் சிக்கல் அமைந்து விடுகிறது. அவ்வகையில் சேக்கிழார் திருவருள் நிறைவுடன் நின்று காட்டும் செய்திகள் சிலவற்றைக் கற்பனை என்றோ வரலாற்றுக்கு நிறைவு செய்யாத கட்டுக்கதை என்றோ கொள்ளவேண்டு வது இல்லை. முதலில் விளக்கம்பெற அமையவில்லை என்றாலும், பின்னர் வரும் விளக்கங்களாலும், திருப் பதிகங்கள் அமைத்துத்தரும் அருளனுபவ விளக்கங்களா

லும், அவைகளுக்குரிய உண்மை விளக்கம் இதுவே என அமைத்துக் காண இயலும். அதுவும் திருவருள் விளக்கமே.

அந்நிலையில் இறைவனும் நம்பியாரூரரும் 'ஆரூரர்' என்ற பொதுமைப் பெயர் ஒன்றாலே இணைவு பெறுகின்றார்கள். ஆரூரர் என்பது ஆரூர்த்தலத்து இறைவனுக்கும், நம்பியாரூரருக்கும் உரிய பெயர். இவ்விருவரும் ஒரே பெயரால் இணைக்கப் பெறுகின்றனர்.

"ஆரூரர்' என அழைத்தால் — கூப்பிட்டால் அது யாரைக் குறிக்கும்? ஆரூரர் செய்தார் என்று இருபதாம் நூற்றாண்டில் கூறினால் அது யாரைக் குறிக்கும்? அத்தகைய இருமைநிலை, இப்போது இறைவன் பெயரை மக்கள் தம் பெயராக அமைத்துக் கொள்ளும்போது அவர்களுக்கும் உண்டு. அத்தகைய நிலையினைக் காரண இடுகுறிப் பெயர் என்று இலக்கணம் அமைக்கலாம். இங்கே இலக்கணம் நமக்கு அனுபவ விளக்கத்தை அமைக்க முடியாமல் திணறுவதைப் பார்க்கலாம். இருமையின் ஒருமையில் அமையும் சிக்கல் பலவற்றை நம் முன்னோர்கள் பல வழிகளில் தீர்க்க முயற்சியெடுத்துள்ளார்கள். அதனாலேயே பொதுமை என்றும், தனிமைகளை இணைத்த பொதுமை என்றும், தனிமைகளை இணைக்காத பொதுமை என்றும் இவ்வாறு பல பொதுமை நிலைகளை அமைத்துக் காட்டியுள்ளார்கள்.

ஒருமை எண்ணின் பொதுப்பிரிபாற்சொல்

என அமைத்துக் கொண்டு, எத்துணை விளக்கங்கள் அமைத்தாலும், இறுதி நின்ற அனுபவ நிலையில் இதுவரை விளக்கம் கூறி வரையறுத்த அனைத்தையும் கடந்த ஒரு பொருளறிவு உண்டாகிறது.

அம்மையும் அப்பனும் தனிநின்ற கோலம் ஒருபக்கம் அமைய, அம்மையும் அப்பனும் ஒன்றாக நின்ற கோலம் அமையும்போது 'ஒருவர்' என்ற சொல்லால் அதை அமைக்கலாம் எனக்கூறி, தமிழ்ச் சொல்லானது தனக்கு மனநிறைவைத் தருகிறது என்று குறிப்பிடுகின்றார் குமரகுருபரர்.

ஆனால், ஆரூரர் என்ற சொல் யாரைக் குறிக்கிறது என்றால், திருவாரூர்ப் புற்றிடங் கொண்டானுக்குக் காரணப் பெயர், நம்பியாரூரருக்கு அது இடுகுறிப்பெயர் என்பது அதன் விளக்கம். ஆனால், இங்கே "ஆரூரர்" அமைந்து நிற்கும் நிலைவேறு.

ஆரூர்ப் பெருமானும் நாவலூரரும் ஒரே உடம்பில் இருக்கின்றார்கள். இருவரும் செயற்படவும் செய்கிறார்கள். இங்கே ஆரூரர் செய்தார் இச்செயல் என்று குறிப் பிட்டால், அது ஆரூர்ப் பெருமான் செயலா நம்பியாரூரர் செயலா என்ற வினா எழும்போது, அவ்வினாவுக்குரிய விடை யாதாக அமையும்? அவ்வகையில்,

ஆரூரர்

தம்பிரான் தோழர்

கோலம்

என்ற மூன்றும் இருமையின் இணைந்த ஒருமை என நின்றவைகளே. தம்பிரான் தோழர் என அமைந்த நிலை யானது அகத்தாலும் புறத்தாலும் இருமையும் இணைந்து நின்ற நிலை எனக் கொள்ளுதல் வேண்டும். இத்தகைய அடிப்படையில் "பரவை மணம்" முதலாய நிகழ்வுகளில் அமையும் விளக்கமும் திருவருளால் அமைக்கப் பெறு கின்றன.

இனி, திருவாரூரில் வண் தமிழ் நாவலர்தம் பெருமா னாகிய நாவலூரர் **தம்பிரான் தோழர்** என அனைவராலும் அழைக்கப் பெறும் திருவுடையாராய், சைவவிழுத்தவ வேடத்துடன் அரசுக் கோலமும் இணைந்த நல்மங்கலக் கோலத்தோடு, நாள்தோறும் புற்றிடங்கொண்ட பெருமா னைப் பாடித் திளைத்து மகிழ்வோடும் செல்லா நின்றார். இதனை,

"மைவளர் கண்டர் அருளினாலே வண்தமிழ்
நாவலர் தம் பெருமான்
சைவ விடங்கின் அணி புனைந்து சாந்தமும்
மாலையும் தாருமாகி
மெய்வளர் கோலமெல்லாம் பொலியமிக்க
விழுத்தவ வேந்தரென்னத்
தெய்வமணிப் புற்றுளாரைப் பாடித் திளைத்து
மகிழ்வொடுஞ் செல்லாநின்றார்"

என்ற சேக்கிழார் திருவாக்கினால் (பெரியபுராணம் 276) உணரலாம்.

நம்பியாரூரர் தம்பிரான் தோழரான நிகழ்வு நடைபெறு தற்குமுன்பேயே திருவாரூரில் **பரவையார்** அவதாரம் செய்துள்ளார். திருக்கயிலையில் உமையம்மையின் சேடியர்களாகிய கமலினி, அநிந்திதை என்ற இருவருள் கமலினியே பரவையாராக அவதாரம் செய்துளார் என்பது சேக்கிழார் கருத்து.

உருத்திர கணிகைமாராம் பதியிலார் குலத்துள் தோன்றிய கமலினியாருக்குச் சான்றோர்களால் **பரவையார்** என்ற பெயர் அமைக்கப் பெறுகிறது. நாள் தோறும் சேடியர் பலர் சூழத் திருக்கோயிலுக்கு வந்து பூங்கோயில் அமர்ந்த பெருமானைப் பணிந்து செல்லும் வழக்கமுடையாராக இருந்தார் என்பது தெரியவருகிறது.

உருத்திரகணிகை மாராம் பதியிலார் மரபு பற்றி அறிஞர்களிடையே கருத்து வேறுபாடு உண்டு.

"இச்சை ஞானம் கிரியை என்ற சிவசக்திகள் மூவரின் நூபுரச் சத்தத்திலிருந்து முறையே உருத்திரகணிகை, உருத்திர கன்னிகை, உருத்திரதாசி என்பார் உண்டானார்கள். உருத்திர கணிகை மகாமண்டபம் முதல் கருப்பாவரணப்பிராகாரம் வரை திருவலகு திரு மெழுக்கு இட்டுப் பஞ்ச சூர்ணங்களினால் அலங்காரம் செய்யும் தகுதி பெற்றவள். பூசைநேரங்களில் தீபங்களை ஏந்தியும், இசைபாடியும், நடனம் ஆடியும் இறைவனுக்குத் தொண்டு செய்வாள். சுத்த நாட்டியமே உருத்திர கணிகைக்கு விதிக்கப்பெற்றது. ஆசாரியனால் பொட்டு அணியப்பெற்று அவனை நாயகனாகக் கொள்வதும் இவர்களுக்கு உரியதாகும். இச்செய்திகளை நாம் காமிகாகமம் மூலம் அறியலாம்.

> "வெண்மதியின் கொழுந்தணிந்த வீதிவிடங்கப் பெருமான்
> ஒண்ணுதலார் புடைபரந்த ஓலக்கம் அதனிடையே
> பண்ணமரும் மொழிப் **பரவையார் பாடல் ஆடல்தனைக்**
> கண்ணுறமுன் கண்டு கேட்டார் போலக் கருதினார்"

எனவரும் சேக்கிழார் திருவாக்கினால் (பெரியபுராணம் 3430) பரவையார் ஆடல் பாடல்களில் ஈடுபட்டுப் புற்றிடங்

கொண்டாருக்குத் தொண்டு செய்துவரும் மரபுடையவர் என்பதை அறியலாம்.

"உருத்திர கணிகையர் பரமசிவனுக்குத் தாங்கள் செய்ய வேண்டிய ஊழியம் செய்துகொண்டு மணம் இன்றி, ஒருவரையே கணவராக உடையவர்கள். இக்காலத்தில் அந்த நடை தவறிற்று" என்றும் "தனக்கு ஒரு நாயகன் இல்லாத உருத்திரனைப் போல் இவ்வுலகில் தமக்கு நாய கனைக் கொள்ளாமல் உருத்திர நாயகியை நாயகமாகக் கொண்டிருக்கும் உருத்திர கணிகையர்களுடைய குலம்" என்றும், "உருத்திர கணிகையர்—வேசியர்க்கு வேறாய் மணமின்றி உயர்ந்த சாதியார்களில் ஒருவனைக் கணவ னாகக் கொண்டு, பூசைக் காலங்களில் சுத்த நிருத்தம் செய் யும் மகளிர்கள்" என்றும், பதியிலார் குலம் என்பதற்குத் "தங்கட்கு ஒரு நாயகனையும் எய்தாதவர்களாகிய உருத்திர கணிகையர் குலம்" என்றும் பல்வேறு வகையாக்ப் பொருள் கூறியுள்ளனர்.

உருத்திரனுக்கு இவ்வுலகில் நேரே அமையப் பெற்ற தலங்கள் எவையும் இல்லை. உருத்திரனை நோக்கிய தொண்டு பேணுகிறவர்கள் இவ்வுலகில் பதியிலார் எனப் பெற்றனர். இதனாலேயே, சேக்கிழார் 'உருத்திரகணிகை மாராம் பதியிலார்' என்று குறிப்பிட்டார்.

"கதிர்மணி பிறந்த தென்ன உருத்திர கணிகை மாராம்
பதியிலார் குலத்துள் தோன்றிப் பரவையார் என்னும் நாமம்
விதியுளி விளக்கத் தாலே மேதகு சான்றோர் ஆன்ற
மதியணி புனிதன் நன்னாள் மங்கல அணியால் சாத்த"

என்ற சேக்கிழார் வாக்கினுக்கு (பெரிய புராணம் 278) விளக் கம் கூற முற்பட்ட திரு. வி. க. அவர்கள் "மணி என்பதற்கு முத்தெனப் பொருள் கொண்டு, சிப்பியினின்றும் முத்துப் பிறந்தாற்போல, என்று கூறுவாருமுளர். இஃது, இக்காலக் கணிகையர் நிலையை உளங்கொண்டு கூறுங் கூற்றாகும். பரவையார் காலத்துக் கணிகையர் ஒழுக்கம் பேணிக் கடவுளன்பில் கருத்திருத்தியவர். அவர்தம் மரபை இழிவாகக் கருதிச் சிப்பியில் மணி தோன்றியவாறு என்று கொள்வது இழுக்காகும். மாணிக்கம் பிறந்தாற்போல என்று கொள்வது ஒழுங்கு. உருத்திர கணிகையர் சிவபெருமானையே பதியாகக் கொண்டு சிவப்பணி செய்ய உறுதிகொண்ட

பெண்மணிகள். பண்டை நாளில் இவர்கட்கு மரபு வளர்ச்சி கிடையாது. உலக வாழ்விற்குத் தகுதியற்ற பெண் மணிகள் ஆண்டவனையே பதியாகக் கொண்டு அவன் பணிசெய்து பேறுபெற்று வந்தார்கள். வேறுபதியின்மை யால் அவர்கள் பதியிலார் என்று அழைக்கப்பெற்றனர். பின்னே, மற்றுஞ்சிலரும் அவர்களோடு கலக்கலாயினர். அவருட் சிலர், உலக இன்பம் துய்த்துக் கொண்டு, இறை பணி செய்ய எண்ணினர். இது தவறுதலாகாது. ஒழுக் கத்திற் சிறந்த ஒருவனுடன் ஒருத்தி வாழும் இயற்கை அறம் அவர்களாற் பேணப்பட்டது. அன்னார் இல்லறம் பேணியமையால் மரபு வளர்ச்சிக்கு இடம் தந்தது. பண்டைப் பதியிலார் என்றபெயரே இடைக்காலத்திலும் இவர்கட்கு வழங்கி வரலாயிற்று. இச்சீரிய பதியிலார் குலத்தில் தோன்றியவரே பரவையார் என்னும் பரவையார். பின்னாளில் கோயில் தலைவர்களின் அடக்கு முறையால் பதியிலாப் பெண்கள் ஒழுக்கம் தவறும் கொடுமைக்கு ஆளானார்கள்'' என்று கூறியுள்ளமையை இங்கே இணைத்துக் காணவேண்டும்.

ஆகமத்தின் வழிநின்று 'உருத்திரகணிகை' என்பாரைப் பற்றிய விளக்கம் முன்பே அளிக்கப்பெற்றது. உருத்திர னுக்கே இவ்வுலகில் பதிஇல்லை என்பது சைவ வழக்கு. பதிப்பொருளாக நின்ற சிவம் வேறு; உருத்திரன் வேறு. உருத்திரலோகன் இவ்வுலகில் வருதல் வேண்டுமெனின், ஆரூரில் மட்டுமே வழிபாட்டுக்கு வருவதுண்டு. உருத்திர பல் கணத்தார் பலரும் வருவர். அவர்கள் அனைவரும் இப்பூவுலகப் பதியிலாராவர்.

உருத்திர கணிகை என்ற தொடரில் கணிகை என்பது தாசியைக் குறித்ததாகக் கொள்ளும் வழக்கினையும் குறிக் கொள்ளல் வேண்டும். அத்தகைய மரபினர் வழிவந்திருப் பின் சான்றோர்கள் ஆன்ற மதியணி புனிதன் நன்னாள் மங்கல அணியால் 'பரவையார்' எனப் பெயரிட்டார்கள் என்று கூறும் சேக்கிழார் கூற்றும் பொருந்துவதன்றாம். ஆதிரைநாள் விழாவின் பெருமையை அப்பரடிகள் எடுத்துக்கூறுவதையும் இணைத்து இங்கே காணுதல் வேண்டும். இவ்வுலகில் தோற்றம் கொண்டு பிறந்தவராகப் பரவையாரைக் கருதுதல் சேக்கிழார் கருத்துக்குப் பொருந்து

வதன்றாம். அவர்தம் பிறப்பைச் சேக்கிழார் விதந் தெடுத்து ஓதவில்லை, என்பதே ஈண்டுக் கொள்ளத்தக்கது.

"இதற்கு முன் எல்லையில்லாத் திருநகர் இதனுள் வந்து
முதற்பெருங் கயிலை ஆதி முதல் வர்தம் பங்கினாட்குப்
பொதுக்கடிந்து உரிமை செய்யும் பூங்குழல் சேடிமாரில்
கதித்த பூண் ஏந்து கொங்கைக் கமலினி அவதரித்தாள்"

என்றும்,

"கதிர்மணி பிறந்த தென்ன உருத்திர கணிகை மாராம்
பதியிலார் குலத்துள் தோன்றிப் பரவையார் என்னும் நாமம்
விதியுளி விளக்கத் தாலே மேதகு சான்றோர் ஆன்ற
மதியணி புனிதன் நன்னாள் மங்கல அணியால் சாத்த"

என்றும் (பெரியபுராணம் 277, 278) வரும் சேக்கிழார் வாக்குக்களுக்கு நேர் நின்று பொருள் காணுதல் வேண்டும். பின்னரும் நம்பியாரூரர்,

"மாழை யொண்கண் பரவையைத் தந்து ஆண்டானை"

என்றும், பின்னும், ஆரூரை மறவாமைக்குப் பரவை ஒரு காரணமாய் அமைந்தாளேயன்றி, அவரை நினைத்தலும், உடனே ஆரூரும் ஆரூர்ப் பெருமானுமே நினைவுக்கு வருதற்குக் காரணமாக அமைந்த உயர் வாழ்க்கையள் ஆதலின்,

"ஓரூர் என்றுல கங்களுக் கெல்லாம்
உரைக்கலாம் பொருளாய் உடன் கூடிக்
காரூரும் கமழ் கொன்றை நன்மாலை
முடியன் காரிகை காரணமாக
ஆரூரைம் மறத்தற் கரியானை
அம்மான்தன் திருப்பேர் கொண்ட தொண்டன்
ஆரூரன் னடி நாயுரை வல்லார்
அமர லோகத் திருப்பவர் தாமே" (7—59—11)

என்றும் ஆரூரரே அருளியதும் நோக்கியுணர்தல் வேண்டும். ஆரூர்ப் பிறத்தலும் அடியார் நடுவுள் இருத்தலும் காரண மாகத் திருவாரூரில் வந்து அவதரித்த தன்மையே பரவை யாருக்கு அமைந்தது எனக்கொள்ள வேண்டும். ஆரூரில் அவதரித்தும், அம்மையார் இறைவனுக்குப் பணிவிடை செய்தலை முதற்கோளாகக் கொண்டும், அடியவர்க்கு அடியவராக அமைந்து வாழ்தல் என்பதையே குறிக்

கோளாகக் கொண்டும் வாழ்ந்த அம்மை என்பதையும் திருவருளால் நோக்கிக் காணுதல் வேண்டும். மணத்திற்குப் பிறகும் பரவை காரணமாக இறைபரம்பொருளே அனுபவப் படலாயிற்று இருவருக்கும் என்பதையும் சேக்கிழார் திருவாக்குக் கொண்டு உணருதல்வேண்டும்.

'ஆரூர் உறப் பிறத்தல்' என்ற தகுதியை நோக்கியும், அடியார்க்கு அடிமை என்ற பேற்றைக் கருதியும் ஆரூரில் வந்தவதரித்த அம்மையே பரவையார் என்ற கருத்தைச் சேக்கிழார் வாக்குக்களின் மூலம் தெளிய உணரலாம்.

"ஏழிசையாய் இசைப்பயனாய் இன்னமுதாய் என்னுடைய
தோழனுமாய் யான் செய்யும் துரிசுகளுக்கு உடனாகி
மாழையொண் கண் பரவையைத் தந்து ஆண்டானை மதியில்லா
ஏழையேன் பிரிந்திருக்கேன் என் ஆரூர் இறைவனையே"
*(7,51, 10)*

என்று நம்பியாரூரர் 'பரவையைத் தந்து ஆண்டமை'யை நினைந்து கசிந்து அருளினாரெனில், பரவையாரின் வாழ்வும் குறிக்கோளும் இவையென எண்ணி உணரலாம். இது பின்னரும் விளக்கப்பெறும்.

ஆரூரரும் பரவையாரும் ஆரூர்ப்பெருமான் முன்னே நிறுத்தப் பெறுகின்றனர்.

இவர்யார்? என்று வினவிய நம்பியாரூரருக்கு "நங்கை பரவையார் வானோர்க்கும் தொடர்வரிய தூய்மை யுடையார்" என்று பக்கத்திருந்தவர்கள் கூறுகிறார்கள். பரவையாரும் பாங்கியிடம், நாம் ஆரூர்ப் பெருமானை வழிபடச் சென்ற பொழுது நம்மெதிரே வந்தார் யாவர் என வினவ,

"இவ்வுலகில் அந்தணராய் இருவர் தேடு
ஒருவர் தாம் எதிர்நின்று ஆண்ட
சைவமுதல் திருத்தொண்டர் தம்பிரான்
தோழனார் நம்பி"

என்றாள் (பெரியபுராணம் 317) பாங்கி. அதைக்கேட்டதும் **"எம்பிரான் தமரேயோ"** என்பதே பரவையார் கூறிய மறுமொழி. இவ்விரண்டையும் சேக்கிழார் வழிநின்று திருவருள் கடைக்கூட்ட உணர்தல் வேண்டும்.

இனி, இருவர் நிலையையும், இருவரும் தம்மை நோக்கியே விண்ணப்பித்த முறைமையையும் உளங் கொண்ட ஆரூர்ப் பெருமான்,

"அன்று அங்கு அவர் மன்றலை நீர் செயும்"

என்று அடியார் அறியும்படியாய் அருளிய பின், நாவலர் கோன்மகிழ,

"......மங்கை பரவை தன்னைத் தந்தோம்
இன்னவகை நம் அடியார் அறியும்படியே உரைசெய்தனம்"

என்று நம்பியாரூரருக்கும், அவ்வாறே பரவையாருக்கும்

"அணியது ஆரூரன்பால் மணம்"

என்றும் அருளிச் செய்தான் ஆரூர்ப்பெருமான்: தோழமை யாக நம்மைத் தந்தனம் என்று கூறினாற்போன்றே ஈண்டும் "மங்கை பரவை தன்னைத் தந்தோம்" என்று கூறிப் பெருமை கொள்கிறான் பெறலரும் பேறாய் நின்ற பரம்பொருள் எனத் தகும் ஆரூர்ப் பெருமான் என்பதை உளங்கொளவேண்டும்.

பரவை வதுவை நிறைவுற்றது. பின்னர் இருவரும் இன்பம் துய்க்குமாற்றை அருள வந்த சேக்கிழார்,

"தென்னாவலூர் மன்னன் தேவர்பிரான் அருளால்
மின்னாருங் கொடிமருங்குல் **பரவையெனும் மெல்லியல்தன்**
பொன்னாரும் முலை ஓங்கல் புணர் குவடே சார்வாகப்
**பன்னாளும் பயில் யோக பரம்பரையின் விரும்பினார்"**

என்றும், (பெரியபுராணம் 327)

"தன்னை யாளுடைய பிரான் சரணாரவிந்த மலர்
சென்னியிலும் சிந்தையிலும் மலர்வித்துத் திருப்பதிகம்
பன்னுதமிழ்த் தொடைமாலை பலசாத்திப் **பரவையெனும்**
**மின்னிடையாளுடன் கூடி விளையாடிச் செல்கின்றார்"**

என்றும் (பெரியபுராணம் 328) அருளும் சேக்கிழார் திருவாக்குக்கள் அருளுங் குறிப்புக்களையும் உடன் எண்ணிச் சிந்தித்தல் வேண்டும்.

முதலில், பரவையாரும் ஆரூரரும் இணைந்து நின்று பெறும் இன்பத்தை விளக்கும் முறையில் "யோகமுறையை" மேற்கொண்டார் நம்பியாரூரர் என விளக்கினார்கள். அதுவேயாயின், **"பன்னாளும் பயில்"** என்ற அடைமொழி எவ்வாறு பொருந்தும் எனக் கூர்ந்து நோக்காமை வருந்து தற்குரியது. ஒருவர் ஒருவர் சார்வாக நிற்பினும், ஒரு காரணம் என்ற ஒன்றே யல்லது, புதுமை யொன்றும் அமைந்தின்று என்பதே பொருந்தக் கூறிய முடிவாகும்.

சிவயோக பரம்பரையின் திறம் இது என்பதை இருவரும் உணரலாயினர். "அடியேன் நடுவுள் இருவீரும் இருப்பதானால், அடியேன் உன் அடியார் நடுவுள் இருக்கும் அருளைப் புரியாய், என்ற விருப்பினுக் கேற்ப, மானுடப் பேறுபெற்றதன் நுண்மை நோக்குங்கால், ஆன்மாவினுள் பரம்பொருள் இருப்பது என்பது உண்மையானால், அது உயிரனுபவமாய், பின் உடல்வரை அவ்வனுபவம் வந்து வெளிப்படல் வேண்டும். அவ்வகையில் சிவபரம் பொருளுடன் இணைந்துளோம் என்ற நிலை ஆய்வறிவுக்குகந்த தாயிருந்தது. இப்போது, அடியார் நடுவுள் இருக்கும் போது, ஆன்மாவானது தன்னுள் எழுபரஞ்சுடராம் சிவத்துடன் இணைந்து கலந்து நிற்கிறது என்பதே சிவயோகம். அது உயிரினும் பெருகி வெளிப்பட்டு, உடம்புவரையிலும் வந்து வெளிப்பட அனுபவ முறலாயிற்று என்பதே சிவ யோகப்பேறு. பன்னாளும் ஆன்மாவானது சிவத்துடன் இணைந்த யோகமுறை அறியப்பெற்ற அறிவு நிலையிலேயே அமைந்தது. இப்போது இருவருக்கும் தனித் தனியே, தத்தம் ஆன்ம நாயகனாம் சிவபரம்பொருள் அனுபவமாகி நிற்க, அதுவே முற்றி, ஆன்மாவையும் முற்றாகத் தன்னுள் அடக்கி, மேலெழுந்து உடம்புவரையில் வந்து நின்று மலர்ந்தது என்பதே அவர் இருவரும் பெற்ற பேறு. இதனாலேயே,

"பன்னாளும் பயில் யோக பரம்பரையின் மூழ்கினார்"

என்ற தெய்வச் சேக்கிழார் வாக்கை நுனித்துணர்ந்து தெளிதல்வேண்டும். இதுவே தன்னிலையிற் **புனிதராம் பொலிவு.** இதுவே, புற நிலையில் அனைத்து அடியவர்களும் இணைந்து நிற்க, அடியவர் குழாத்துள் அடியவர்க் கடியராய்க் கலத்தல் **புனிதர் நடுவணை பொலிவு** எனப்

பெறுவதாயிற்று. இந்நிலை இருவருக்கும் தனித்தனி அமைவதாலேயே விளையாடிச் செல்கின்றார் என இருவருக்கும் உரிய வினை அமைத்துக் கூறப் பெறுகிறது.

அகநிலையில் பரவையார் ஆரூரர் அணைவு புனிதராம் பொலிவே. அதுவே புறநிலையில் தேவாசிரிய மண்டபத்தே அமைந்த நிகழ்வாக உருப்பெறுகிறது.

இங்கேதான் **வழித் தொண்டின்** திறம் சேக்கிழாரால் விளக்கப்பெறுகிறது. அதன் பயனாகவே

"தூரத்தே திருக்கூட்டம் பலமுறையால் தொழுதன்பு
சேரத் தாழ்ந்து எழுந்து அருகு சென்று எய்திநின்று **அழியா**
வீரத்தார் எல்லார்க்கும் தனித்தனி வேறு அடியேன் என்று
ஆர்வத்தால் **திருத்தொண்டத் தொகைப் பதிகம்** அருள் செய்வார்"

என்றும்,

"தம்பெருமான் கொடுத்த மொழி முதலாகத் தமிழ்மாலைச்
செம் பொருளால் **திருத்தொண்டத் தொகை** ஆன்ற திருப்பதிகம்
உம்பர் பிரான் தானருளும் உணர்வுபெற உலகேத்த
எம்பெருமான் **வன்தொண்டர்** பாடி அவர் எதிர் பணிந்தார்"

என்றும் (பெரியபுராணம் 347, 348) வழங்கப்பெறும் திருத்தொண்டத் தொகைப் பதிகம் மலர்கிறது. அதன் வரலாறும் வான்மையும் **சுந்தரர் ஓர் ஆய்வு** இரண்டாம் பகுதியில் முறையுற விளக்கப்பெறும்.

## முடிப்புரை

**புனிதர் நடுவணை பொலிவு** என்ற இத்தலைப்பினுள் நம்பியாரூரர் தம்பிரான் தோழராகி, கோலம்புனைந்து, மண் மேல் விளையாடி மகிழ்தலின் நுட்பம் விரித்துக் கூறப் பெற்றது.

பரவையார் மணத்தின் சிறப்பு மேலும் சங்கிலியார் மணத்துள்ளும் இணைத்து விளக்கப்பெறும்.

முதற்பகுதியில் முடிவுபெறா நின்ற கருத்துக்கள் இரண்டாம் பகுதியில் முடிவுகள் தெரித்துத் திருவருளால் நிறைவு பெற்றிலங்கும்.

**புனிதர் நடுவணை பொலிவு** என்ற தலைப்பானது மேல்நோக்கில் தேவாசிரிய மண்டபத்தே அமைந்த அடியார் திருக்கூட்டத்தினுள் சென்று அணைவதைத் தெரிவிப்பதாகக் கொள்ள இடம் தரும். உண்மையே. புனிதர் நடுவணை பொலிவு என்பதன் அகநிலை அனுபவத்தைப் பரவையார் ஆரூரர் திருமணம் உணர்த்தியது. அகநிலையுடன் இணைந்த புறநிலையே தேவாசிரிய மண்டபத்து நடைபெற்ற நிகழ்வு. தேவாசிரிய மண்டபத்து நிகழ்வினால் வெளிப்படுவது தனிநிலை அனுபவமேயாயினும், அது **திருத்தொண்டத் தொகை** என்ற சிறந்த பதிக வெளிப்பாட்டை அருளுவதால், **திருத்தொண்டத் தொகைப்** பதிகத்தின் தனித்தன்மை கருதி அதன் சிறப்பை விரிவாக அமைக்க வேண்டிய சூழலாலும், பரவை திருமண அனுபவத்திலிருந்து வேறுபடுத்திக்காட்ட வேண்டிய இன்றியமையாமையாலும், அது இரண்டாம் பகுதியில் நின்று சிறப்புறுத்த வேண்டியதாயிற்று என்பதையும் கொள்ள வேண்டும்.

# 5. முதற்பகுதியின் முடிப்புரை

**'சுந்தரர்—ஓர் ஆய்வு'** என்ற இந்நூல் இரண்டு பகுதி களைக் கொண்டது. தேவார மூவரில் முதல்நின்ற திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர் ஆகிய இருவர் பற்றிய ஆய்வு களும் இரண்டிரண்டு பகுதிகளைக் கொண்டே வெளி வந்தன. நூறு பதிகங்களை மட்டுமே கொண்ட சுந்தரர் வரலாறுபற்றிய ஆய்வை ஒருநூலாகவே முடிக்க எண்ணி யும் திருவருள் அதற்குத் துணைநின்றிலது. ஏனைய இருவரைப் போலவே, சுந்தரர் பற்றிய ஆய்வும் இரண்டு பகுதிகளாகவே வெளிவருதல் இறைவனருள் போலும். சுந்தரர் வரலாறு பற்றிய பல்வகை வினாக்கள் காரணமாக விரிவது கண்டு இரண்டு பாகங்களாகவே அமைக்க வேண் டியதாயிற்று.

சுந்தரர் வரலாற்றில் திருவெண்ணெய் நல்லூர் நிகழ்வை **அருட்டுறைப் பொலிவு** என்றும், தவநெறிப் பேற்றையும், சித்தவடமடத்தில் பெற்ற திருவடிப் பேற்றையும், தில்லைத் திருக்களிற்றுப்படிமருங்கே பெற்ற திருக்கூத்துப் பேற்றை யும் இணையநிறுத்தி அமைத்தவகையில் **ஒத்துறவமைந்த முத்திறப்பொலிவு** என்றும், 'ஆரூருக்கு வருக நம்பால்' என அழைத்த நிலையில் ஆரூருக்கு வந்த நாவலூரருக்கு அமைந்த முத்திற வாழ்வை — தம்பிரான் தோழராதல், கோலம்புனைதல், மண்மேல் வேட்கைதீர விளையாடுதல் உள்ளிட்ட நிலையில் **புனிதர் நடுவணை பொலிவு** என்றும் அமைந்த — மூன்று கூற்று வரலாற்று நிகழ்வை மட்டுமே இம்முதற்பகுதியானது தனக்குரிய பொருண்மை யாகக் கொண்டிலங்குகின்றது. அவற்றுள்ளும் **புனிதர் நடுவணை பொலிவு** பற்றிய வரலாற்று அமைப்பு மட்டுமே இம்முதற்பகுதியில் அடங்குதல் திருவருள் வயத்தால் அமைந்தது. இம்மூன்றாம் பொலிவின் வரலாற்றாய்வை இரண்டாம் பகுதியில் விரிவாகக் காணலாம்.

இனி, நம்பியாண்டார் நம்பி அவர்கள் தெய்வப்புலவர் சேக்கிழாருக்கு முன்னாக வரலாற்றில் நின்ற பெருமை படைத்தவர்கள். திருமுறைத் தொகுப்பும், திருமுறை வாணர்களின் வரலாறும் திருநாரையூர்ப் பொல்லாப் பிள்ளையார் தம்மருளாற் பெற்ற புனிதர். நம்பியாண்டார் நம்பிகள் தாம் பாடிய திருத்தொண்டத்தொகையில் சுந்தரரைப் பற்றிப் பதினொரு பாட்டுக்கள் அருளியுள்ளார். அவைதவிர, நம்பியாரூரரின் தாய் தந்தையராகிய சடையனார் இசைஞானியார் பற்றி இரண்டு பாடல்களும் அருளியுள்ளார். அவர் அருளிய பதினொரு பாடல்களும்வரலாற்று முறையை ஒட்டியே அமைந்துள்ளன என்பதைக் கூர்ந்து கவனிப்பவர் யாவரும் உணர்ந்து தெளியாமல் இரார். நம்பியாரூரருக்கு உற்ற உடற்பிணியானது சங்கிலியாரின் சூளுறவு காரணமாக அமைந்ததாகவே சேக்கிழாரின் பெரியபுராணம் கொண்டு தெளிகின்றோம். ஆனால்,

> "நிதியார் துருத்திதென் வேள்விக்
> குடியாய் நினைமறந்த
> மதியேற்கு அறிகுறி வைத்துப்
> புகர் பின்னை மாற்றிடு என்று
> துதியா அருள் சொன்னவாறு அறி
> வாரிடைப் பெற்றவன் காண்
> நதியார் புனல் வயல் நாவலர்
> கோன் என்னும் நற்றவனே"

என்ற நம்பியாண்டார் நம்பிகளின் பாடலை ஊன்றிநோக்கினால், அறிகுறியாக வைத்த புள்ளி பின்னர் மாற்றிடுக என்று சொன்னவரலாறொன்றும், அவ்வாறே மாற்றப் பெற்றதும், அதன்பின்னரே 'வன்தொண்டன்' என்னப் பெற்றதும் அமைந்ததாகக் கொள்ள இடம் தருகிறது.

ஆடியிற் போந்த சுந்தரரின் திருக்கயிலை வாழ்வை அடிப்படையாகக் கொண்டு, சிவஞான போதத்துக்கு அபேதபரமாக உரைவரைந்த சான்றோர்கள் பிம்பப் பிரதி பிம்ப வாதத்தின் அடிப்படையில் எழுதிய உரையும் விளக்கமும் சுந்தரர் வரலாற்றிலேயே அமைவன ஆயின. எந்த ஒரு கருத்து வேறுபாடும் தள்ளப் பெறாதவகையில், அனைத்தையும் தழுவி அமைத்த வகையில் வரலாறு அமைப்பது என்ற அடிப்படைக் கொள்கையை — ஏனை இருவர் பெருந்தகைகளுக்கும் எடுத்துக் காட்டி நிலை

நிறுத்திய நடுநிலைக் கொள்கையை நம்பியாரூரர் வரலாற்றிலும் அமைத்துக் காணத் திருவருள் துணைநின்றுளது. வரலாற்றினுள் அங்கங்கே சிறுசிறு விளக்கங்கள் அமைக்கப்பெற்றாலும், எந்த ஒரு கொள்கையும் முற்றாக மறுக்கப் பெறவோ தள்ளப் பெறவோ இல்லை. சுந்தரர் ஓர் ஆய்வின் இரண்டாம் பகுதியில் ஆய்வின் முடிப்புரை இது என்று திட்டவட்டமாக அறுதியிட்டுரைக்கத் திருவருள் துணை செய்யும் என்ற நம்பிக்கையும் துணிவும் தெளிவும் உடையேன். நின்றாங்கு நின்று துணை செய்யும் குருவருள் இதுவரை காத்ததுபோல் இனியும் காக்கும் எனல் உறுதி.

# பொருண்மை - அகரமுதலி

## எம் வெளியீடுகளில் இவருடையன

1. வீரசைவம் 1977
(தத்துவத்துறைப் பொன்விழா வெளியீடு)
2. திருமுறைத் தெளிவே சிவஞானபோதம் 1978
3. திருஞான சம்பந்தர்—ஓர் ஆய்வு
முதற் பகுதி 1981
4. திருஞான சம்பந்தர்—ஓர் ஆய்வு
இரண்டாம் பகுதி 1982
5. சிதம்பரம் இராமலிங்கரின் சித்திவளாகம் 1982
(சென்னைப் பல்கலைக் கழகத்தின் ஒரு நூற்றாண்டின் மேனிகழ் வெள்ளிவிழா வெளியீடு)
6. திருநாவுக்கரசர்—ஓர் ஆய்வு முதற் பகுதி 1984
7. திருநாவுக்கரசர்—ஓர் ஆய்வு
இரண்டாம் பகுதி 1985

## நூலாசிரியரைப் பற்றி

1929-இல் பிறந்த இவர் திருப்பாதிரிப்புலியூர், தவத்திரு ஞானியாரடிகளின் மாணாக்கராவார். மயிலம், சிவஞான பாலய சுவாமிகள் அருள் வழியில் புலவர் கல்வியையும், அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பி.ஓ.எல்., எம்.ஏ. (தத்துவம்), பிஎச்.டி. ஆகிய கல்வித்தகுதிகளையும் பெற்று, அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறையிலும் தத்துவத் துறையிலும் விரிவுரையாளராகவும், பூம்புகார்ப் பேரவைக் கல்லூரியில் இரண்டாண்டுகள் முதுகலைப் பேராசிரியராகவும் பணியாற்றிய இவர் இப்போது இந்நிறுவனத்தில் துணைப்பேராசிரியராகப் பணிபுரிந்து வருகிறார்.